




# வட இந்திய திருத்தலப் பயணம்

# வட இந்திய திருத்தலப் பயணம்

மணிவாசகர் பதிப்பகத்தின்
வெள்ளிவிழா வெளியீடு



சேலம் சேக்கிழார்
கொ. அ. அப்பாய் செட்டி



மணிவாசகர் பதிப்பகம்
சிதம்பரம்

முதற்பதிப்பு : நவம்பர், 1986

திருக்கோயில் வரிசை—20



விலை ரூ. 15-00




கிடைக்குமிடம்

மணிவாசகர் நூலகம்

12-B, மேல சன்னதி, சிதம்பரம்-608001
14, சுங்குராம் தெரு, பாரிமுனை, சென்னை-600001
55, லிங்கிச் செட்டித் தெரு, சென்னை-600001
28-A, வடக்கு ஆவணி மூல வீதி, மதுரை-625001
3/4 ராஜ வீதி கோயமுத்தூர்-641001
20, நந்திக்கோயில் தெரு, திருச்சி-620002

சென்னை போன் : 512996, சிதம்பரம் போன் : 2799

அச்சிட்டோர் : கற்பகம் அச்சகம், சென்னை - 600 002.

33-1

# இறைவழிபாடும் இந்திய ஒருமைப்பாடும்

ச. மெய்யப்பன், எம். ஏ.,

அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

இந்திய நாடு திருக்கோயில்கள் நிறைந்த திருநாடு. ஊர்தோறும் கோயில்கள். ஆற்றங்கரைதோறும் ஆலயங்கள். ஆயிரமாயிரம் ஆண்டுகளாக ஆலய வழிபாடு சிறந்து வளர்ந்துள்ளது. ஆலயங்களில் ஆயகலைகள் அறுபத்துநான்கும் ஆட்சி செய்கின்றன. ஆலயங்கள் கலைகளின் தாயகங்கள். கோயில் வழிபாடு கலைகளின் வழிபாடு. இந்தியக் கோயில் ஒவ்வொன்றும் கலைகள் குடிகொண்டிருக்கும் வீடு.

மனிதன் இறைவழிபாட்டிற்காகப் புண்ணியத் தலங்கள் தோறும் பயணம் செய்கிறான். பயணம் செய்யும் மனிதன் தன் அறிவை வளர்த்துக் கொள்வதுடன் தன்னையும் பண்படுத்திக் கொள்கிறான். பலரோடு பழகுகிறான். பலரோடு பழகுவதால் பலரின் இயல்பை அறிகிறான். பகுத்து உணர்கிறான். பூரிப்பு அடைகிறான். புதுமைகளைக் காண்கிறான். புத்துணர்வு கொள்கிறான். பயணங்கள் பண்பை வளர்க்கின்றன. பரிவுணர்வை வளர்க்கின்றன. மனித நேயத்தை மலர்விக்கின்றன. புனித நீரில் நீராடிப் புறத்தூய்மையும் புனித வழிபாட்டால் அகத் தூய்மையும் பெறுவது இந்தியர் இயல்பு. தென்னாட்டவர் காசி செல்வதும், வடநாட்டார் இராமேஸ்வரம் வருவதும் ஆயிரமாயிரம் ஆண்டுகளாக நடைபெற்று வரும் நற்பழக்கமாகும்.

அண்மைக் காலங்களில் பயண நூல்கள் பல வருகின்றன. பலராலும் விரும்பிப் படிக்கப் பெறுகின்றன. திருத்தலப் பயண நூல்கள் சிறப்பான வரவேற்பைப் பெறுகின்றன. சில நூல்களின் நல்ல அமைப்பால் அவை பல பதிப்புக்களையும் பெறுகின்றன.

மணிவாசகர் பதிப்பகம் திருக்கோயில்கள் பற்றிய 16 நூல்கள் வெளியிட்டுள்ளது. அவை அனைத்தும் அழகிய பதிப்புகள். காசி முதல் இராமேஸ்வரம் வரை உள்ள தலங்களின் கவின் அனைத்தும் இலக்கியமாய் எழிலோவியமாய் ஆக்கப் பெற்றுள்ளது. திருக்கோயில் வரிசை நூல்களில் திருமுறையும் திருக்கோயில்களும் நூல் அரிய பெரிய சாதனை.

இவ் வரிசையில் சேலம் சேக்கிழார் அவர்கள் எழுதிய இந்நூல் ஓர் ஆன்ம அனுபவ வெளிப்பாடாகும். பயணம் செய்வோர்க்குப் பக்தியை மிகுவிக்கும் பனுவலாகும். தாம் கண்டவற்றை, கேட்டவற்றை இனிமையாக எடுத்து இயம்புகிறார். ஆசிரியர் நமக்கு வடஇந்தியப் பயணத்திற்கு வழிகாட்டியாக அமைகிறார். இறை உணர்வும் பக்தியில் நாட்டமும் இலக்கியப் பொழிவில் ஈடுபாடும் மிக்கவராதலால் நூல் முழுவதும் இலக்கிய மணமும் பக்தி மணமும் கமழ்கிறது. நூலாசிரியர் கருத்தினைச் சொல்லும் விதமும் காட்சியை விளக்கும் திறனும் நம்மை உடனழைத்துச் செல்வது போன்ற உணர்வைத் தருகிறது. சீரிய வாழ்வால், சிறந்த பணிகளால் புகழ்ச் செல்வராக வாழும் ஆசிரியர்க்கு இந்நூல் பேரும் புகழும் தரும். இச்சான்றோர் நூலை வெளியிடுவதில் பதிப்பகம் பெருமை கொள்கிறது.

சைவத்துக்கும் தமிழுக்கும் பெருமை சேர்க்கும் தமிழ்ப் பெரியாரை எங்கள் பதிப்பகத்துக்கு அறிமுகம் செய்தவர் அறிவாற்றல் மிக்க அறிவொளியாவார். தம் பொழிவுகளால் பக்திப் பயிர் செழிக்கச் செய்யும் இவர் பயண நூல்களால் பெரியதோர் எல்லையில் தமிழ் பரப்பும் தொண்டராகிறார். தொண்டர் பெருமையை நாளும் பரப்பும் நல்லறிஞர் சேலம் சேக்கிழார் சேலத்து மாங்கனி போல சிறந்ததொரு நூலை நமக்கு அளித்துள்ளார். இறைவழிபாட்டால் இந்திய ஒருமைப்பாடு நீண்ட நெடுநாள்களாக வளர்ந்து வரும் கதையினை இந்நூல் விளக்குகிறது. திருத்தலங்களுக்குப் பயணம் செய்வோம், திருவினைப் பெறுவோம்.

# இறையுணர்வு

வரலாற்றுக் காலத்துக்கு முன்பிருந்த புராண காலந் தொட்டு காசி இராமேச்சுரம் இணைத்தே சிந்திக்கப் பெற்றுள்ளது. தென்னவர் காசி செல்லக் கனவு கண்டனர்; வடவர் இராமேச்சுரத்தில் கடலாடுவதை உயிராசையாகக் கொண்டனர். மாநிலங்களும், இனங்களும், மொழிகளும், அரசும், ஆட்சியும், இந்தியாவைப் பிரித்தாலும் 'இந்திய தேசம்' ஒன்றே; இந்திய மக்கள் யாவரும் சகோதரரே' என்ற எண்ணத்தைப் **பக்தி இயக்கம்** வளர்த்துள்ளது. தென்கோடி முதல் வட இமயம் வரை ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாக ஆயிரக் கணக்கானோர் புனிதப் பயணம் மேற்கொண்டு இந்திய ஒருமையை உறுதிப் படுத்தியுள்ளனர். எம்மொழியினராயினும் எப்பகுதியினராயினும் ஒருங்கு சேர்க்கும் இடம் காசி இராமேச்சுரம். ஒவ்வொரு நாளும் கங்கை நீர் இராமநாதர் சுவாமிக்கு அபிஷேகமாவதே ஒருமைப்பாட்டின் அடையாளமாகும்.

கங்கை ஆடுதல், காவிரியாடுதலைப் பற்றித் திருமுறைகள் பரக்கப் பேசும். 'யாறும் குளமும் ஆடும்' மரபினைத் தொல்காப்பியர் சுட்டுவார். குமரி ஆடுதலை இளங்கோ சிறப்பிப்பார். காசிக்குச் சென்று புண்ணிய நீராடி, சாபவிமோசனமும், பாவ நீக்கமும் பெறுதலைத் தம் காலத்து வழக்காக இளங்கோ அடிகள் கூறுகிறார்.

கங்கை இந்தியாவின் வாழ்வோட்டம். நதிகளுள் கங்கை தாய்மையும் தலைமையும் மிக்கது. ஜீவநதியாய் இந்தியர்க்கு ஜீவன் அளிப்பது. பலகோடி ஜீவராசிகளுக்கு வாழ்வுநலமும் வளமும் அளிப்பது. கங்கையே ஒரு கவிதை. கங்கையின் கதையே ஒரு காப்பியம். கங்கைக் கரையின் புகழ் கரை கடந்தது.

கங்கைக் கரையில் அமைந்த காசி பெயருக்கேற்ப ஒளி நகரம். உயர் நகரம். இந்திய நாகரிகத்தின் தலைநகரம். தெய்வ வழிபாட்டின் திருநகரம். காசி இறைவர்க்கு உறைவிடம். புலவர்க்கு வாழ்விடம். கலைகளின் பிறப்பிடம். புகழின் இருப்பிடம். புண்ணியத்தின் தலை ஊற்று.

உலகப் பயணிகள் காசியை உவந்து உவந்து போற்றுவர். மூர்த்தி தலம் தீர்த்தம் மூன்றாலும் பெருமை மிக்கது. தீர்த்தத்தால் அதன் பெரும் சிறப்பு அளவிடற்கரியது.

இன்று உலக ஒருமை என்றும், ஒரே உலகம் என்றும் பேசப்படுகிறது. பல்லாயிரம் ஆண்டுகளாக இந்தியர்கள் ஒருமைப்பாட்டு உணர்வுடன் ஒற்றுமையாக வாழ்ந்து வருகின்றனர். பக்திச் சங்கிலி இந்தியர் யாவரையும் இணைத்துள்ளது. இந்திய மாநிலங்கள் அனைத்தையும் இணைப்பது பக்தியே. புனிதப் பயணம் புவி முழுதும் தொடர்ந்து, உயிர்கள் நலமடைதல் இந்தியர் நல்லெண்ண மாகும். அதற்குக் காசி இராமேச்சுரப் பயணம் கட்டியம் கூறுகிறது.

## பொருளடக்கம்


| | | |
|---|---|---|
| பூரி | ... | 12 |
| கல்கத்தா | ... | 18 |
| கயா | ... | 29 |
| வாரணாசி | ... | 33 |
| காசி பல்கலைக்கழகம் | ... | 53 |
| அயோத்தி | ... | 54 |
| அலகாபாத் | ... | 57 |
| இலட்சுமணபுரி | ... | 60 |
| அரித்துவாரம் | ... | 64 |
| ரிஷிகேஸம் | ... | 68 |
| பத்ரிநாத் | ... | 72 |
| ஜாலியன் வாலாபாக் | ... | 94 |
| பொற்கோயில் | ... | 95 |
| ஜம்மு தாவி | ... | 99 |
| ஜம்மு காஷ்மீர் | ... | 101 |
| கீர்பவானி | ... | 112 |
| மன்ஸ்பால் ஏரி | ... | 113 |
| அசரத்பால் | ... | 115 |

டெல்லி ... 118
காந்தி மியூஸியம் ... 128
மதுரா ... 134
ஆக்ரா ... 139
அக்பர் சமாதி ... 144
ராதா சுவாமி சமாதி ... 146
தாஜ்மஹால் ... 147
ஆக்ரா கோட்டை ... 154
முகல் கோட்டை ... 159
நாசிக் ... 161
முத்திதாம் ... 166
பம்பாய் ... 169
மீன் காட்சி ... 178
பண்ட்ரீபுரம் ... 183
புண்ட்ரீகர் வரலாறு ... 185

# வட இந்தியத் திருத்தலப் பயணம்

வட இந்தியத் திருத்தலப்பயணத்தை 27-4-1978 வியாழன் முதல் 1-6-1978 வரை 35 நாள்கள் மேற்கொண்டோம். 45 பேர் ஒரு குழுவாகப் போனோம். 20 பேர் முதல் வகுப்பிலும் 25 பேர் இரண்டாம் வகுப்பிலும் சேலம் ஸ்ரீ சுவர்ணாம்பிகா டிராவல் ஸ்பெஷல் இரயிலில், சென்னை பீச் ஸ்டேஷனிலிருந்து பயணத்தைத் துவக்கினோம்.

திருப்பயண அன்பர்கள் யாவரும் காலை 7 மணிக்கே செவ்வாய்ப்பேட்டை ஸ்ரீ இராமலிங்க சௌடேஸ்வரியம்மன் திருக்கோயிலில் கூடினர். அத் திருக்கோயிலிலிருந்து சென்னை பீச் ஸ்டேஷனை அடைய அருணா ஸ்பெஷல் பஸ்ஸில் 27-4-78 காலை 10 மணிக்கு 45 பேரும் புறப்பட்டோம். அன்பர்களை வழியனுப்ப வந்த அவர்களுடைய சுற்றத்தார்களும், நண்பர்களும் திரளாகக்கூடினர் அன்பர்களுக்கு மாலைகளை அணிவித்துப் பாத நமஸ்காரம் செய்தனர். சிறப்பாக B. V. V தம்பதிகளுக்கும் A. A. B. தம்பதிகளுக்கும் ஏராளமான பேர் மாலைகளை அணிவித்துத் தமது அன்பையும் மரியாதையையும் தெரிவித்துக் கொண்டனர். அடியேனையும் அதே போல் மரியாதை செய்தனர். இந்த அன்புச் செயல் உள்ளங்களை நெகிழ வைத்தது.

திருக்கோயில் அறங்காவலர்கள் திரு. K. K. கெணிவீர செட்டியார், B. P. இராமச்சந்திரன், B. C. ஈஸ்வரி

செட்டியார், திரு. செங்கல்வராய செட்டியார் முதலான பெரியவர்கள் வந்து இருந்து வழியனுப்பினார்கள். சில அன்பர்கள் பூவும் சாக்லெட்டும் தட்டில் ஏந்தி அன்பர்களுக்கு அளித்துத் தமது மரியாதையையும், மகிழ்ச்சியையும் தெரிவித்துக் கொண்டனர்.

நாங்கள் 45 பேரும் முதலில் இராஜ கணபதி கோயிலுக்குச் சென்று வழிபாடு செய்து கொண்டு சென்னையை நோக்கிப் புறப்பட்டோம்.

நண்பகல் 12 மணி சுமாருக்கு விழுப்புரம் நகருக்கு முன்னர் உள்ள பயணிகள் விடுதியில் நாங்கள் எடுத்துச் சென்றிருந்த உணவை உண்டோம். மாலை 6-00 மணிக்குச் சென்னை நகரை அடைந்தோம். நேராக அஷ்டலட்சுமி கோயிலுக்குப் போனோம். இக்கோயில் இயற்கை எழில் மிக்க கடற்கரையில் இருக்கின்றது. இது மேல் தளங்களிலும் சன்னிதிகளைக் கொண்ட கோயில். இதில் அஷ்ட லட்சுமிகளும் கோயில் கொண்டுள்ளனர். நீண்ட பயணம் மேற்கொண்டுள்ள எங்களுக்கு அஷ்ட லட்சமிகளில் தனலட்சுமி, தானியலட்சுமி, தைர்யலட்சுமிகளின் திருவருள் அவசியம் வேண்டும். நாங்கள் கோயிலுக்குப் போனபோது பெருங் கூட்டம் கியூவில் நின்றது. அதனால் ஒரு ரூபாய் கட்டணம் செலுத்தி நுழைவுச் சீட்டுகளைப் பெற்றுக் கொண்டு கோயிலுக்குள் போனோம்.

நுழைவாயிலின் முன் திருப்பதி வெங்கடாசலபதி நின்று கொண்டு காட்சி தந்தார். தரிசனம் செய்து கொண்டு மேல் தளத்தில் ஏறி ஒவ்வொரு இலட்சுமியாகத் தரிசனம் செய்து கொண்டு வந்தோம். கடைசியாக இருந்தது தைர்யலட்சுமி. தாயாரைத் தரிசித்துத் தைர்யத்தைப் பெற்றுக் கொண்டு அங்கிருந்து புறப்பட்டோம். மாலை மணி ஏழு ஆகிவிட்டது. அதனால் திட்டமிட்டபடி திருவள்ளுவர் கோட்டம் பார்க்கப் போகாமல் நேராகப் பீச் ஸ்டேஷனுக்குப் போனோம். எட்டு மணிக்கு

நிலையத்தை அடைந்தோம். அங்கு யாத்திரைப் பயணிகள் 320 பேரும் அவர்களை வழி அனுப்ப வந்திருந்த அன்பர் களுமாகப் பெருங் கூட்டம் திரண்டிருந்தது. 9-00 மணிக்குப் புறப்பட வேண்டிய வண்டி 10-30 மணிக்குப் பிளாட்பாரம் வந்தடைந்தது. எங்கள் சாமான்களை நாங்கள் பயணம் செய்யும் பெட்டிகளில் ஏற்றிக் கொண்டோம். பயணிகள் அமர்வதில் வசதிகள் நோக்கி முதல் வகுப்புப் பெட்டியில் சில மாற்றங்கள் செய்ய நேரிட்டது. இரண்டாம் வகுப்புப் பெட்டியில் அமைதி நிலவியது. இரவு 11-00 மணிக்கு ஏராளமான அன்பர்கள் பக்தர்களுக்கு மாலைகள் அணி வித்து மரியாதை செய்ய 'பத்ரிநாத்துக்கு ஜே!' என்ற பெரு முழக்கத்தோடு வண்டி புறப்பட்டது.

## 28-4-78 வெள்ளிக்கிழமை

காலை 7-00 மணிக்கு வண்டி ஓங்கோல் ஸ்டேஷனை அடைந்தது. நாங்கள் எழுந்து குளித்து விட்டுத் திரு. A. A. பத்திரய்ய செட்டியாரின் அறையில் சாயிபாபா படத்தை வைத்து வழிபாடும் பஜனையும் செய்தோம். சிவபுராணம் ஓதி முடித்தோம். அப்போது நான் 'மூர்த்தி தலம் தீர்த்தம்' என்னும் தலைப்பில் ஒரு மணி நேரம் உரை நிகழ்த்தினேன். பின்னர் திரு B. S. பெருமாள் செட்டியார் 'தியானம்' என்பது பற்றி மிக அழகாகப் பேசினார்கள். அதோடு காலை வழிபாடு முடிந்தது.

முதல் நாள் ஆனதால் பயண ஏஜண்ட் காலை சிற்றுண்டிக்குக் கேசரி இனிப்பும் பொங்கலும் வழங்கினார். எங்கள் வண்டி ஸ்பெஷல் வண்டியாயிருந்தும் பல ஸ்டேஷன்களில் நீண்ட நேரம் நின்று நின்று போயிற்று. அவ்வழியில் பல மெயில் வண்டிகள் போகவும் வரவு மாயிருந்தன. முறையாக ஓடும் வண்டிகள் குறித்த காலத்தில் ஓடவேண்டும் என்ற காரணத்தால் எங்கள் வண்டி அவற்றுக்கு வழி விட்டு நீண்ட நேரம் பல ஸ்டேஷன்

களில் நின்றது. இரவிலும் இப்படியே ஆயிற்று. மாலை ஐந்தரை மணிக்கு கிருஷ்ணா நதியைக் கடந்து விஜய வாடாவை அடைந்தோம். வண்டியில் இருந்தபடியே அருள்மிகு கனகதுர்க்கா கோயிலைத் தரிசித்துக் கொண் டோம். வண்டி இரவெல்லாம் ஓடியது.

## 29-4-78 சனிக்கிழமை

திட்டப்படி 29-4-78 சனிக்கிழமை காலை ஆறுமணிக்குப் பூரியை அடையவேண்டிய வண்டி 'வால்டேர்'' ஸ்டேஷனைத் தான் அடைந்தது. ''பூரி' க்கு வண்டி எந்நேரம் சென்று சேரும் என்று சொல்ல முடியாமல் இருந்தது. வண்டியும் பூரியை நோக்கிப் புறப்பட்டுப் போயிற்று. பூரியில் செய்யும் கடல் ஸ்நானம், மார்க்கண்ட தீர்த்த ஸ்நானங்களை எதிர் நோக்கி நாங்கள் குளிக்க வில்லை. இப்போது எங்கள் வண்டி டீசல் இன்ஜின் பூட்டப்பட்டு ஓடியது. எங்கும் நிற்காமல் வேகமாய்ச் சென்றது. பத்தரை மணிக்கு பலாசா சந்திப்பில் நின்றது. பூரிக்கு மாலை ஏழு மணிக்கு வண்டி போய்ச் சேரும் என்று அறிந்தோம். குளிக்காதவர்கள் குளித்தனர். பகல் பன்னிரண்டரை மணிக்கு உணவு உண்டோம். மாலை நாலரை மணிக்குப் 'பலாசா' வை' விட்டு வண்டி புறப் பட்டுப்போய் மாலை ஆறு மணிக்கு 'குருட் ரோட்' அடைந்தது. அங்கிருந்து இரவு எட்டு மணிக்கு புறப்பட்டு 43 கிலோ மீட்டர் தூரத்திலிருந்த பூரியை பத்து மணிக்கு அடைந்தது. பூரியிலேயே இரவு தங்கினோம்.

## பூரி

30-4-78 ஞாயிற்றுக்கிழமை காலை ஆறு மணிக்கே காபி பருகி விட்டுப் பூரி ஜெகந்நாதர் கோயிலுக்குச் சைக்கிள் ரிக்ஷாவில் இரண்டிரண்டு பேராகப் போனோம். போக

வர ரிக்ஷாவுக்குக் கட்டணம் ரூ 6.00. முதலில் கடலில் குளிக்கப் போனாம். மீனவரைத் துணையாகக் கொண்டு குளித்தோம். நீண்ட அழகான கடற்கரை. கடல், பேரலைகளோடு, கொந்தளித்துக் கொண்டிருந்தது. மீனவர் துணைகொண்டு குளிப்பது நல்லது. அம்மையார் ஒருவர் துணிந்து தனியே குளிக்கப் போய் ஆபத்தில் சிக்கிக் கொண்டார். மீனவர் ஒருவரின் உதவியால் தப்பினார்.

அங்கிருந்து அதே ரிக்ஷாவில் சென்று ஒரு கல் தொலைவிலுள்ள மார்க்கண்ட தீர்த்தத்தில் குளித்தோம். இது மிகப் பெரிய தெப்பக்குளம். இதில் ஏறி இறங்க நாற்புறமும் வசதியான படிகள் உள்ளன. இக்குளத்தின் நடுவில் சுபத்திரைக்கு ஒரு கோயில் இருக்கின்றது. அங்குச் சென்று தரிசித்து விட்டுக் கோயிலைச் சுற்றி வலம் வந்தோம். பிராகாரத்தில் ஒரு சின்ன அறையில் கோபாலனை ஊஞ்சலில் கிடத்தி அதை ஒருவர் ஆட்டிக்கொண்டிருந்தார். அவ்வாறு ஆட்டினால் இஷ்டசித்தி உண்டாகும் என்று அவர் சொன்னார். உடனே பலர் தட்சணை கொடுத்துத் தாமும் ஆட்டினர். இஷ்டசித்தி அடைய யார்தான் விரும்பமாட்டார்கள்!

அங்கிருந்து ஜகந்நாதர் கோயிலுக்குப் போனோம். கோயில் மிகப் பெரிய கோயில். வடநாட்டு முறையில் அமைந்த பெரிய நீண்ட கோபுரங்கள் கோயிலை அலங்கரித்தன. கோயில் விழாக்கோலம் பூண்டிருந்தது. ஏராளமான கூட்டம் நிரம்பி இருந்தது. அமைச்சர் ராஜ்நாராயணன் வருவதை முன்னிட்டு விரிவான ஏற்பாடுகள் செய்யப்பட்டு இருந்தன. கூட்டத்திற்கிடையே கோயிலுக்குள் போனோம். கோயிலின் சுற்றுப் பிராகாரத்தில் சின்னச் சின்ன கூண்டுகளில் பலராமர், ஸ்ரீதேவி, பூதேவி மற்றும் பல தெய்வங்கள் வைக்கப்பட்டு உள்ளன. இவற்றை எல்லாம் தரிசித்துக் கொண்டு ஜெகந்நாதர் சந்நிதியை அடைந்தோம். அங்குப் பெருங்கூட்டம் திரண்டிருந்தது. நுழைவுக் கட்டணம் தலைக்கு ரூ. 1.50

கொடுத்தால் உடனே உள்ளே போகலாம் என்றனர். நாங்கள் 6 பேருக்கு ரூ 9-00 வாயிலின் முன் உள்ள ஒருவரிடம் கொடுத்தோம். பணம் பெற்றுக்கொண்டவன் எங்களை உள்ளே விட முயன்றான் ஆனால் கோயிலுக்குள் இருந்த சிலர் எங்களை உள்ளே விடாமல் தடுத்தனர். நாங்கள் செய்வது அறியாது 30 நிமிட நேரம் இடிபாடு களுக்கிடையே இடர்ப்பட்டுக் கொண்டிருந்தோம். பின் உள்ளே போக விட்டார்கள். அப்போது தர்ம தரிசன நேரம் என்பதை அறிந்தோம். இதைத் தெரிந்தே ஒருவன் உள்ளே விடுவதாகச் சொல்லி பணத்தைப் பெற்றுக் கொண்டு எங்களை ஏமாற்றிவிட்டான். இவ்வாறு இங்கே நடப்பது சகஜம். 1972-ல் நான் இங்கு வந்திருந்த போதும் இதேபோன்று நடந்தது. பிணம் பிடுங்கும் கழுகுகளைப் போல பணம் பிடுங்கும் மனிதக் கழுகுகள் இங்குச் சுற்றிக் கொண்டு இருக்கின்றன. பண்பு என்பதே இல்லாத இக் கூட்டம் கேட்பாரற்று நூற்றுக் கணக்கில் உள்ளது. நிர்வாகி களால் கூட இவர்களை ஒழுங்குபடுத்த முடியவில்லை. ஆண்டவன் தான் அவர்களைத் திருத்த வேண்டும்.

நாங்கள் மன உளைச்சலோடு உள்ளே போனோம். நீண்ட கூடம். அதன் முனையில் ஒரு மேடை. அதன்மீது ஜெகந்நாதர், சுபத்திரை, பலபத்திரர் எழுந்தருளி உள்ளனர். ஆவலோடு சென்று சுற்றி வந்து வழிபட்டோம்.

திருவுருவங்களைப் பார்த்தோம். அழகில்லா உருவங் களாயிருக்கக் கண்டோம். அழகில்லாவிடினும் எத்தனை பக்தர்களை இவை ஆட்கொண்டுள்ளன என்று அதிசயித்தோம்.

இத்திருவுருவங்கள் உருவற்று இருப்பதற்கு ஒரு வரலாறும் உளது.

மாளவ நாட்டு மன்னன் 'இந்திரதியூமன்' திருமாலைக் காண நூறு அசுவமேத யாகங்களைச் செய்தான். திருமால் கடலில் ஒரு கட்டையாக மிதந்து வந்து காட்சி

அளித்தார். அக்கட்டையை எடுத்து வந்து மன்னன் தச்சர்களை அழைத்து, அக்கட்டையில் தெய்வ வடிவத்தைச் செதுக்கச் சொன்னான். தச்சர்கள் கட்டையைச் செதுக்கியபோது உளி மழுங்கியதே அன்றி உரு அமையவில்லை. மன்னனின் மனம் வருந்தியது. அந் நிலையில் திருமாலே தச்சன் வடிவில் தோன்றி, மூடிய அறைக்குள் இருந்து 21 நாள்களில் தெய்வப் படிவங்களைச் சமைத்துக் கொடுப்பதாகச் சொன்னார். மன்னனும் இசைந்து ஓர் அறையை ஒதுக்கிக் கொடுத்தான். தச்சனும் அறைக்குள் இருந்து வேலையைத் துவக்கினான். நாள்கள் ஓடின. 'திருவுருவம் சமைக்கும் பணி என்னாயிற்றோ? எவ்வளவில் இருக்கின்றதோ?' என்று மன்னனின் மனம் கவலையில் மூழ்கியது. 15 நாள்கள் வரை பொறுத்துப் பார்த்தான். அதற்குமேல் அவனால் இருக்க முடியவில்லை. சட்டென்று கதவைத் திறந்து உள்ளே பார்த்தான். தச்சனைக் காணவில்லை. ஆனால் ஜகன்னாதர், தமது சகோதரர் பலபத்திரர், தங்கை சுபத்திரையோடு இருக்கக் கண்டான். எல்லா உருவங்களும் இடுப்புக்கு மேல் உருவமற்று இருந்தன. ஜெகன்னாதர், பலபத்திரர்களின் கைகள் தடிகள் போல் நீண்டிருந்தனவே யன்றி உருப் பெற்றிருக்கவில்லை. சுபத்திரைக்கு கைகளே இல்லை. 21 நாள்கள் கெடு வைத்திருக்க 15 ஆம் நாளே அறைக் கதவைத் திறந்து பார்த்ததால் உருவங்கள் உருப்பெறாமல் உருவமற்று நின்று விட்டன என்பது புலனாயிற்று.

ஜெனரல் கன்னிங்காம் என்பவர் இவை மூன்றும் புத்தம், தம்மம், சங்கம் என்னும் பௌத்தரின் சின்னங்கள் என்று எழுதி வைத்துள்ளார்.

ஜெகன்னாதரின் மார்பில் ஒரு புனிதப் பொருள் இருப்பதாகவும், அது அதன் தெய்வ ஒளி என்றும், அது கிருஷ்ணனின் எலும்பு என்றும் ஒரு சாரார் சொல்கின்றனர்.

இனி இத் திரு உருவங்கள் எப்போதும் இருப்பவை அல்ல. 12 ஆண்டுகளுக் கொருமுறை மாற்றி அமைக்கப்

படுகின்றன. இவ்வாறு உருவமைக்கும் நிகழ்ச்சி 'நவ கலேவரம்' (மறு அவதாரம்) என்னும் பெயரில் பெருவிழா வாகக் கொண்டாடப்படுகின்றது. ஓர் ஆண்டில் இரு ஆனி மாதங்கள் வரும் ஆண்டில் இவ்விழா நிகழும்.

புனித வடிவில், தெய்வ இயல்புள்ள புதிய உருவங்களை அமைப்பதே 'நவ கலேவரம்' என்னும் விழாவாகும்.

எந்த ஆண்டில் புதிதாகத் திருவுருவங்கள் சமைக்க வேண்டுமோ அந்த சமயத்தில் தொன்றுதொட்டு வழிபாடு செய்துவரும் புரோகிதரின் கனவில், உருவத்தை அமைக்க வேண்டிய மரம் இருக்கும் இடமும், மரமும் தோன்றும். பலர் ஒன்று கூடி அம்மரம் இருக்கும் இடத்துக்குப் போய் அம்மரத்தை வெட்டி எடுத்துப் பல்லக்கில் வைத்து பயபக்தியோடு ஆடம்பரமாக எடுத்து வந்து மூலத் தானத்தில் வைப்பார்கள். பின்னர் தலைமைப் புரோகிதர் ஒருவரின் கண்களைக் கட்டி அந்த இடத்தில் தனித்து இருக்கும்படியாக விட்டுவிடுவார்கள். அவர் ஜெகன்னாதர், பலபத்திரர், சுபத்திரைகளுக்குப் புதிய உருவங்களை அமைத்துப் பழைய உருவங்களிலிருந்த தெய்வ சாந்நித்தியத்தை இப்புதுப் படிமங்களுக்கு மந்திரபூர்வமாக ஏற்றி இவற்றை அங்கு ஸ்தாபிதம் செய்வார். பிறகு முன் இருந்த உருவங்களை அகற்றி அக்கோயிலின் பிராகாரத்தில் புதைத்து விடுவார்கள். இந்த நடைமுறைகள் யாவும் மக்கள் பாராவண்ணம் மறைமுகமாகவே நடைபெறுகின்றன. இதற்குப்பின் நடைபெறும் தேர்த்திரு விழாவுக்கு முதல் நாள்தான் இத் தெய்வத் திருவுருவங்களைத் தரிசிக்க மக்களை அனுமதிக்கின்றனர்.

மூலத்தானத்தில் 5 அடி உயர மேடைமீது இம் மூர்த்திகள் எழுந்தருளியுள்ளன. இம்மேடை இரத்தின சிம்மாதனம் என்று அழைக்கப்படுகின்றது. பலபத்திரர் 6 அடி உயரம், ஜெகன்னாதர் 5 அடி, சுபத்திரை 4 அடியுமாக உள்ளனர். வெள்ளை நிறத்தோடு பலபத்திரரும்

கறுப்பு நிறத்தில் ஜெகன்னாதரும் மஞ்சள் நிறத்தில் சுபத்திரையும் உள்ளனர்.

இங்கு நடைபெறும் விழாக்களில் தேர்த்திருவிழா மிகவும் சிறப்பானது. ஜேஷ்டமாதம் பௌர்ணமியன்று (மே, ஜூன்) இவ்விழா நடைபெறுகின்றது. மூன்று பெரிய தேர்களில் எழுந்தருளி 'குண்டிச்' கோயிலுக்குப் போய் 9 நாள்கள் தங்கிப் பின்னர் திரும்பி வரும். இது குண்டிச் யாத்திரை எனப்படும். இவ்விழா, கண்ணன் கோகுலத்தி லிருந்து மதுராவுக்குச் சென்று கம்சனைக் கொன்ற சம்பவத்தினை நினைவு படுத்தும்முகத்தான் நடத்தப் படுகின்றது.

கோயிலில் சுவாமிகளுக்கு நாள்தோறும் புதுப்பானை களில் சாதம் வைத்து நிவேதனம் செய்கின்றனர். இந்த சாதம் 10,000 சாதுக்களுக்கு வழங்கப்படுகின்றது. இது போன்ற அன்னதானம் உலகில் வேறு எந்தக் கோயிலிலும் நடைபெறுவதில்லை. இச்செயற்கருஞ் செயல் பெரிதும் பாராட்டுதற் குரியதாயுளது.

வரலாற்றுச் சிறப்புப் பெற்ற இக்கோயிலில் பணம் பிடுங்கிகள் உலவி, வழிபட வரும் பக்தர்களின் உள்ளங் களைப் புண்படும்படிச் செய்து வருவது சிறப்புடையதா யில்லை. நிர்வாகமும் இதுபற்றிக் கவலைப் படுவதாகத் தெரியவில்லை. இந்நிலை, வழிபட வரும் பக்தர்கள் உள்ளத்தில் பக்தி உருக்கம் உண்டாவதற்கு ஏது இல்லாமல் இருக்கின்றது.

மீண்டும் இரயிலடியைச் சேர்ந்து எங்கள் பெட்டியை அடைந்தோம். மாலை இரண்டு மணிக்குப் பூரியை விட்டு வண்டி கல்கத்தாவை நோக்கிப் போயிற்று.

மறுநாள் மே மாதம் 1 ஆம் தேதி விடுமுறை நாள் ஆனதால் முதன்மையாகப் பார்க்கவேண்டிய இடங்களைப் போய்ப் பார்க்க முடியாது என்று அறிந்தோம். அதனால்

கடைகளில் வாங்கவேண்டிய சாமான்களை வாங்கிக் கொள்வது என்று முடிவு செய்தோம். மறுநாள் காலை ஆறு மணிக்கு வண்டி 'அண்டுள்' ஸ்டேஷனை அடைந்தது. காலை ஒன்பது மணிவரை வண்டி அங்கேயே இருந்தது. பின்னர் 'அவுரா' ஸ்டேஷனை அடைந்தது.

## கல்கத்தா

1-5-78 திங்கட்கிழமை முதல் நாள் காலை பத்து மணிக்கு அவுரா ஸ்டேஷனை அடைந்தோம். நகரில் கடைவீதிகளுக்குப் போக ஸ்டேஷன் முன் கூடினோம். இந்தப் பயணத்தில் கலந்து கொண்டவர்கள் 320 பேர். அதனால் இவர்களை மேனேஜ்மெண்டார் பல குழுக் களாகப் பிரித்து வழிகாட்டிகளை உதவிக்கு வைத்து அனுப்பினார்கள். 50 பேர் கொண்ட எங்களைத் திரு மகா தேவ முதலியார் நியூ மார்க்கெட்டுக்கு அவுரா பாலத்தின் வழியாக நடத்தியே கூட்டிச் சென்றார். எங்களில் ஆறு பேர் மட்டும் வெய்யிலின் வெப்பத்தைத் தாங்க முடியாது டாக்ஸி வைத்துக் கொண்டு ஊரைச் சுற்றிப் பார்க்கப் போனோம்.

பின்னர் பிளானடோரியத்துக்குப் போனோம். மாலை நான்கு மணிக்கு ஆங்கில விளக்கவுரையின்மூலம் காட்சி நிகழும் என்று அறிந்தோம்.

### பிளானடோரியம்

மாலை நான்கு மணிக்குப் பிளானடோரியம் பார்க்கப் போனோம். டாக்ஸிக்கு கட்டணம் ரூ. 10/- அப்போது காட்சி நடைபெற்றுக் கொண்டிருந்தது. கட்டணம் நபரொன்றுக்கு ரூ. 3/- வீதம் செலுத்தி உள்ளே போனோம். உள்ளே ஒரே இருட்டு. வழிகாட்டியின் உதவியால் ஆசனங்களில் அமர்ந்தோம். அந்த இடம் குளிர்பதனம் செய்யப்பட்டிருந்தது. சாய்ந்து கொண்டு வசதியாக அண்ணாந்து மேலே பார்க்கும்படியாக ஆசனங்கள்

இருந்தன. இரவில் வானத்தில் காணும் நட்சத்திர மண்டலத்தை அங்கு மேலே கண்டோம். நவகிரகங்களின் அமைப்பையும் அவற்றின் இயக்கங்களையும் அம்புக் குறியிட்டு விளக்கங்கள் தந்தனர். நட்சத்திரங்களின் தூரம், அவற்றின் அமைப்பு இயக்கம் போன்றவற்றை வான இயல்படி விளக்கினர். இது நல்ல அறிவியற் பணியாகும். குளிர்பதன அறையில் வசதியான இருக்கைகளில் சாய்ந்து கொண்டு இரவு நேர வானக்காட்சியைக் கண்டதால் பலர் தூங்கி விட்டனர். 45 நிமிடங்கள் காட்சி நடைபெற்றது. காட்சி முடிந்து வெளியே வந்தோம்.

பிளானடோரியம் வட்டவடிவமாய் இருக்கின்றது. இக்கட்டிடத்தின் புறத் தாழ்வாரத்தில் சுற்றிலும் நவகிரகங்களின் வடிவங்களைச் (சோதிட முறைப்படி) படங்களாகத் தீட்டி வைத்துள்ளனர். வான வெளியில் காணும் அவற்றின் உண்மை வடிவ அமைப்புகளையும் வானவெளிக்கு ராக்கெட்டுகளில் சென்று வந்த வானவெளி வீரர்களின் வாழ்க்கை வரலாறுகளையும் அவர்களுடைய போட்டோக்களையும் வைத்துள்ளனர். அவற்றையும் பார்த்துக் கொண்டு ஜவஹர் குழந்தைகள் மியூசியம் பார்க்கப் போனோம். அது மூடப்பட்டிருந்தது அவுரா ஸ்டேஷனை எட்டு மணிக்கு அடைந்தோம். உணவு அருந்திவிட்டுச் சிறிது நேரம் ஒவ்வொருவரின் அநுபவங்களைப் பற்றி பரிமாறிக் கொண்டோம். சிலர் ரூ. 3/- கட்டணத்தில் கல்கத்தா நகர் முழுவதையும் மூன்றுமணி நேரத்தில் டிராம் மூலம் சுற்றிப் பார்த்து வந்ததை அறிந்தோம். இது ஓர் நல்ல ஏற்பாடாகத் தெரிகிறது.

## கல்கத்தாவில் 2 ஆம் நாள்

2-5-78 செவ்வாய்க்கிழமை 2ஆம் நாள் காலையில் ஆறு மணிக்கு எழுந்தோம். குளிப்பதற்குப் பெட்டியின் டாங்குகளில் தண்ணீர் இல்லை. காலைக் கடன்களை

முடித்துக் கொள்வதற்கே பெரும்பாடாக இருந்தது. பிளாட்பாரத்திலிருந்த குழாய்களில் நீரைப் பிடித்து ஒருவாறு கடன்களை முடித்துக் கொண்டு புறப்பட்டோம்.

கல்கத்தா, மக்கள் சமுத்திரம் நிரம்பிய நகரம். பாதைகளில் எப்போதும் மக்கள் கூட்டம் திரண்டிருந்தது. ஓடும் கார்களின் இடையில் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்துக்கு போகவரவும், கடந்து செல்லவும் மிகக் கடினமாயிருந்தது. மிக விழிப்பாயிருந்து போனாலன்றி விபத்திலிருந்து தப்ப முடியாது.

தொழிலும் வணிகமும் மிகுந்த நகரம் இது. அதனால் மக்கள் நடமாட்டம் அதிகமாயிருக்கின்றது. எங்கும் பரபரப்பு. தேனீக்கள் போன்று மக்கள் சுறுசுறுப்பாய்ப் போவதும் வருவதுமாயிருந்தனர். தங்கள் வாழ்க்கைப் பிரச்சினைகளை எளிதில் தீர்த்துக் கொள்ள முடியாமல் அலைபாய்ந்த உள்ளத்தோடு அலைவது போன்று இருந்தனர். இங்கு எதிலும் எவற்றிலும் நம்பிக்கைக்கு இடமில்லாமல் இருந்தது. ஊரும் தூய்மையற்று இருந்தது. ஊருக்குள் அச்சத்தோடேயே நடமாடினோம். எங்கும் தனித்துப் போக வேண்டாம் என்று எச்சரிக்கப் பட்டிருந்தோம். செல்வத்தைப் போலவே வறுமையும் தாண்டவமாடியது. மிகப் பெரிய கட்டிடங்கள் ஒரு புறம்; அருவருப்பு மிகுந்த குடி இருப்புகள் ஒரு புறம். இந்த ஏற்றத் தாழ்வுகள் அதிகமாயிருந்ததால்தான் அங்குப் பொது உடைமை கொள்கையும் (கம்யூனிசம்) அக்கட்சியினரின் (கம்யூனிஸ்டுகளின்) ஆதிக்கமும் பலமாய் ஊன்றியிருந்தது.

காலை 9.00 மணிக்குச் சிற்றுண்டிக்குப் பின் 320 பேரும் 6 பேருந்துகளில் ஊர் பார்க்கப் போவதென்பது திட்டம். நாங்கள் 50 பேர் சரியான நேரத்தில் எங்களுக்கு ஒதுக்கப் பட்டிருந்த வண்டியில் ஏறி அமர்ந்து கொண்டோம். மற்ற பேருந்துகளில் அமர வேண்டிய பயணிகள் சரிவர வராததால் புறப்படத் தாமதமாயிற்று. முதலில் பேளூர் மடத்துக்குப் போனோம்.

## பேளூர் மடம்

இந்த மடம் ஹூக்ளி நதிக்கரையில் இருக்கிறது. இராமகிருஷ்ணரின் சமாதி மீது அவருக்கு ஒரு பெருங் கோயில் கட்டப்பட்டிருக்கின்றது. இராமகிருஷ்ணரின் ஆவி நதியின் மறுகரையிலிருந்த ஒரு வீட்டில் பிரிந்தது. அங்கிருந்து மற்றொரு வீட்டுக்கு அவருடைய பூத உடல் எடுத்துச் சென்று வைக்கப்பட்டது. பின்னர் இங்குக் கொண்டு வரப்பட்டு சமாதி செய்து அதன்மீது பளிங்குக் கற்களாலான இக்கோயிலை எழுப்பி உள்ளனர். கோயில் மிகப் பெரியது. கோயிலினுள் இராமகிருஷ்ணரின் பளிங்குக் கல் திருவுருவம் வைக்கப்பட்டுள்ளது. சாந்தம் தவழும் மதி முகம் காண்போர் உள்ளத்தைக் காந்தம்போல் ஈர்த்தது. சாந்தியையும் அமைதியையும் அளித்தது. வருகின்றவர்களும் அமைதியாக வணங்கிச் செல்கின்றனர். இதுபோன்ற அமைதி தென்னாட்டுக் கோயில்களில் காண்பதரிது. நம் கோயில்கள் சிலவற்றில் 'சப்தம் செய்யாதீர்கள்' என்று அறிவிப்புப் பலகை இருக்கும்... அதைப் பார்த்துச் சிலர் உரக்கப்படித்து சப்தம் செய்வார்கள். அமைதி பெற வரும் அன்பர்கள், கோயிலின் அமைதியையே குலைக்கிறார்கள். சர்ச்சுக்குப் போகும் சிறித்தவர்கள், பெரியவர்களும் குழந்தைகளும், சர்ச்சில் சப்தம் செய்யாமல் எவ்வளவு அமைதியாக நடந்து கொள்கிறார்கள்? இவர்களைப் பார்த்தேனும் நம்மவர்கள் திருந்தக் கூடாதா?

'உலகமெல்லாம் போற்றும் ஞானச்செல்வராகிய விவேகானந்தரை உலகுக்களித்த மகானல்லவா இவர்' என்று நினைவு கூர்ந்து அமைதியாக வணங்கி விட்டு அதற்கு எதிரிலிருந்த சாரதாமணி தேவியார், சுவாமி விவேகானந்தர் ஆகியோர் திருக்கோயில்களுக்குப் போய் வணங்கினோம். விவேகானந்தர் கோயிலுக்கு மேல் மாடி உள்ளது. இங்கு 'ஓம்' என்னும் பிரணவம் வழிபடுவதற்கு அமைந்துள்ளது.

இதை அடுத்து சுவாமி விவேகானந்தர் வசித்த மாடி அறை இருக்கின்றது. அதில் அவர் படுத்த படுக்கை, அணிந்த காவி உடைகள், பயன்படுத்திய மேசை நாற்காலிகள், கால் மிதிகள் முதலியன நினைவுச் சின்னங்களாக வைக்கப்பட்டுள்ளன. அவருடைய படம் ஒன்றும் சுவரை அலங்கரித்தது. மிகப்பெரிய ஞானி ஒருவர் நடமாடித் தங்கிய இடம் என்ற புனித எண்ணத்தோடு அவற்றைத் தரிசித்துக் கொண்டு மீண்டோம்.

அங்கே வசித்துவரும் சுவாமீஜீ ஒருவரை சந்தித்தோம். வயது முதிர்ந்த சாது. சாந்தம் தவழும் முகம். முறுவலித்த வண்ணம் எங்களை வரவேற்றுப் பல செய்திகளை எங்களுக்குச் சொன்னார். மகிழ்ச்சியோடு சிறிதுநேரம் அவருடன் உரையாடிக் கொண்டிருந்து விட்டு அங்குச் சூழ்ந்துள்ள புல்வெளியில் அமர்ந்தோம். அங்கு எங்கும் அமைதி நிலவியது. வருவோர் போவோரெல்லாம் மௌனமாக வழிபட்டுக் கொண்டு சென்றனர்.

பின்னர் அங்குள்ள புத்தகசாலையில் சில புத்தகங்களை வாங்கிக் கொண்டு நதியின் மறுகரையில் உள்ள தட்சிணேஸ்வரர் ஆலயத்துக்குப் போனோம்.

## தட்சிணேஸ்வரர் ஆலயம்

கல்கத்தாவிலிருந்து 10 கல் தொலைவில் இக்கோயில் இருக்கின்றது. ஸ்ரீ இராமகிருஷ்ணர் வழிபட்ட காளி கோயில் இது. அம்மை சாந்த வடிவம். பெயர் பெற்ற மற்றொரு காளிகோயில் கல்கத்தாவில் உண்டு. அதில் நாள்தோறும் உயிர்ப்பலிகள் நடக்கும். இராமகிருஷ்ணர் வழிபட்ட இக்கோவிலில் உயிர்ப்பலிகள் எதுவும் நடப்பதில்லை. இராமகிருஷ்ணர் இக்கோயிலில் எழுந்தருளியிருந்த காளிமாதாவை நாள்தோறும் பூசித்து வந்தார். பக்தியின் முதிர்ச்சியால் அம்மையை நேரில் கண்டு பேசிப் பேரின்பமுற்ற நிலையில் வாழ்ந்து வந்தார். தென்னாட்

டில் வாழ்ந்திருந்த இராமலிங்கரைப் போன்று இவரும் ஓதாது உணர்ந்து, பக்தியின் உறைப்பால் அம்மையின் திருவருளைப் பூர்ணமாகப் பெற்றவர். உலகமெல்லாம் உய்யுமாறு தாமும் வாழ்ந்து நல்ல அருளாளர்களையும் உலகுக்கு அளித்தார். ஞானம் பக்தி இரண்டையும் கலந்து அளித்த புனிதர், சமரச ஞானி. மேலான ஞானப் பொருளைச் சின்னஞ்சிறு கதைகள் மூலம் மக்களுக்கு உணர்த்திய தெளிந்த ஞானி. ஞானச் செல்வரின் பக்திக் கிரங்கி காட்சி நல்கி அருள்பாலித்த அருளம்மையை மன தார வழிபட்டுக் கொண்டு அடுத்திருந்த மண்டபத்துக்குப் போனோம். அங்குப் பக்திப் பெருக்கோடு பஜனை நடந்து கொண்டிருந்தது. இனிமையாக மனமுருகிப் பாடிக் கொண்டிருந்தனர். இசையமுதைப் பருகிய வண்ணம் எதிர்ப்புறம் வரிசையாக ஒரு மேடையின்மீது தனித்தனிக் கோயில்களில் எழுந்தருளியிருந்த 12 ஜோதிர் லிங்கங்களை வழிபட்டோம். பிறகு இராமகிருஷ்ணர் வாழ்ந்த காலத் தில் தங்கியிருந்த அறைக்குப் பயபக்தியோடு போனோம். அன்றிருந்தது போலவே இன்றும் அது பாதுகாத்து வைக்கப் பட்டுள்ளது. இது 20 அடி சதுரமான அறை. இதில் இராமகிருஷ்ணரும் சாரதாமணி அம்மையாரும் பயன் படுத்திய இரண்டு கட்டில்களும், படுக்கை திண்டு தலை யணைகளும் உள்ளன. படுக்கைகள் மீது இராமகிருஷ்ணர் சாரதாதேவியார் படங்கள் வைக்கப்பட்டுள்ளன. சுவரிலும் அவ்விருவர் படங்கள் மாட்டப்பட்டுள்ளன. இங்கு வரு வோர் மௌனமாக உள்ளே வந்து சிறிதுநேரம் அமர்ந் திருந்து போகின்றனர். பேசுவதே தொழிலாகக் கொண்ட எங்கள் குழுவினரும் தெய்வ சிந்தையுடனே அடக்க ஒடுக்க மாக உள்ளே சென்றனர். பேச்சற்றுச் சிறிது நேரம் அமைதியாக அமர்ந்திருந்து பின் அங்கு ஒரு துறவி அளித்த தீர்த்தப் பிரசாதத்தைப் பெற்றுக்கொண்டு வெளியேறினர். நான் சிறிது நேரம் தியானத்தில் அமர்ந்தேன். மன ஒடுக்கம் பெற்றுத் தியானிக்க முடிந்தது. அந்த இடத்தில்

புனிதம் விளங்கியது. மனத்திற்குச் சாந்தி ஏற்பட்டது. சிறிதுநேரம் அவ்வாறாக இருந்து வணங்கி விட்டுத் தீர்த்தப் பிரசாதத்தையும் பெற்றுக்கொண்டு அகன்றேன். அதன்பின் நாங்கள் ஜைனர் கோயிலுக்குப் போனோம்.

## ஜைனரின் கண்ணாடிக் கோயில்

இது, ஜைனர்களுடைய ஏழாவது தீர்த்தங்கரரான பரசுதேவரின் கோயிலாகும். ஜைனர்களின் குருமார்கள் 'தீர்த்தங்கரர்' என்று அழைக்கப்படுகின்றனர். தீர்த்தங்கரர்கள் 24 என்று இவர்கள் கொள்கின்றனர். இவர்களின் தலைவர் விருஷப தேவர். அஹிம்சையையே நினைந்து நினைந்து பேசிப் பேசிக் கடைப்பிடித்து ஒழுகுபவர்கள்.

இக்கோயில் முழுவதும் கண்ணாடியாலானது. தூண்கள், சுவர்கள், மேல்விதானம் யாவும் பல நிறமான கண்ணாடித்துண்டுகள் பதிக்கப்பெற்று மிக அழகாக ளிளங்குகின்றது. கோயிலின் முன் மண்டபத்தில் பல இலட்சம் விலை மதிப்புள்ள மிகப்பெரிய கண்ணாடிச் சர விளக்குத் தொங்கியது. இது நூற்றுக்கணக்கான விளக்குகளோடு கூடியது. இந்த அழகிய சரவிளக்கு எரியும்போது பார்த்தால் கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும். கோயிலின் பிராகாரச் சுற்றுச் சுவர்களில் மிகப் பெரிய நிலைக்கண்ணாடிகளை வைத்துள்ளனர். இவற்றில் நம்முடைய உருவங்கள் நூற்றுக்கணக்கில் தெரிகின்றன. ஜீவ காருண்ய ஒழுக்கச் சீலரான 7 ஆவது தீர்த்தங்கரரை வழிபட்டுக் கொண்டு வைகுண்டப் பெருமாள் கோயிலுக்குப் போனோம்.

## வைகுண்டப் பெருமாள் கோயில்

இது பளிங்குக் கல் கோயில். நல்ல வேலைப்பாடுடன் கூடிய தூண்கள் இக்கோயிலை அலங்கரிக்கின்றன. கோயில் மிகத் தூய்மையாக வைக்கப்பட்டுள்ளது. இக்கோயிலில்

திருமால், திருமகள், பூமகள் ஆகியோருடன் எழுந்தருளி யுள்ளார். இக்கோயிலுள் வந்ததும் தென்னாட்டுக் கோயிலில் இருப்பது போன்ற உணர்வு உண்டாயிற்று. நுழைவாயிலில் இருந்த இராஜகோபுரம் தென்னாட்டுப் பாணியில் கட்டப்பட்டிருந்தது. கோயிலின் அமைப்பும் ஆகம முறைப்படி இருந்தது. வடநாட்டுக் கோயில்கள் ஆகம முறைப்படி அமைந்தவை அல்ல.

இங்கு வழிபாடு நடத்தும் அய்யங்கார்கள் தமிழ் நாட்டைச் சார்ந்தவர்கள். எங்களைக் கண்டதும் நாங்கள் தமிழ்நாட்டைச் சார்ந்தவர்கள் என்பதை அறிந்து கொண்ட அர்ச்சகர்கள் 'வாருங்கள்' என்று தமிழில் வரவேற்றபோது நாங்கள் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவேயில்லை. புரியா மொழியைக் கேட்டுக் கேட்டுச் சலித்துப் போயிருந்த எங்கள் காதுகளுக்குத் தமிழ்ப் பேச்சு அமுதமாயிருந்தது.

நாங்கள் போனபோது 'பத்மாவதி' தேவிக்கு அபிஷேகம் நடந்து கொண்டிருந்தது. பக்தி சிரத்தை யோடு அபிஷேகமும் பின் பூஜையும் நடந்தது. இறுதியில் பஞ்சாமிர்தமும் தீர்த்தப் பிரசாதமும் வழங்கினர். யாவரும் அமைதியாகப் பெற்றுச் சென்றனர். அம் மக்களின் அடியொட்டி நாங்களும் பெற்றுக் கொண்டோம்.

இக்கோயிலை வடநாட்டுச் செல்வர் ஒருவர் ரூ. 10 இலட்சம் செலவில் கட்டித் தமிழர்களிடம் ஒப்படைத்துள் ளார். நண்பகல் 12-30 மணிக்கு அங்கிருந்து பிரசித்தி பெற்ற கல்கத்தா காளி கோயிலுக்குப் போனோம்.

## காளி கோயில்

அம்மனைத் தரிசிக்க நில மட்டத்துக்குக் கீழ் குகை போன்ற வழியில் இறங்கிப் போனோம். அங்குள்ள பூசாரிகள் வழிபட வந்தவர்களை ஆடுமாடுகளைப் போலத் தடுத்து நிறுத்தி வைத்துக்கொண்டு ரூ. 1 தயாராக

எடுத்துக் கொள்ளுமாறு கூச்சலிட்டனர். ஒருவன் அம்மன் இருக்கும் மேடைமீது ஒரு காலையும் எதிர்ப்புறத்தில் ஒரு காலையும் வைத்துக் கொண்டு உயர நின்றவாறு ரூபாயை பறித்துக் கொண்டு அம்மன்முன் போகவிட்டான். போகின்றவர்கள் அவனுடைய இரு கால்களுக்கிடையில் தான் புகுந்து போகவேண்டும். அம்மன்முன் போனதும் அங்கிருந்த ஒருவன் மடிபிடித்துத் தட்சணை போடும்படி வம்பு செய்தான். இதற்குள் கூட்டத்திடையே நாங்கள் பட்ட இடிபாடுகளுக்கு அளவே இல்லை. இவ்வாறு அமைதி யற்ற நிலையில் அம்மனை தரிசித்துக் கொண்டு அங் கிருந்து தப்பி வந்தோம். அம்மனின் முக அமைப்பே தெரியவில்லை. திருவுருவம் பயங்கரக் கோலம். அங் கிருந்த பூசாரிகள் அதைவிடப் பயங்கரமானவர்கள்.

நாள்தோறும் இங்கு உயிர்ப்பலி நடக்கின்றது. கோயிலின்முன் ஆட்டுக்கு ஒரு பீடமும் மாட்டுக்கொரு பீடமும் தனித்தனியாக உள்ளன. பலியிட்ட விலங்குகளின் குருதி நிலத்தில் படிந்து உறைந்திருந்தது. அதைப் பார்த் ததும் மனம் மிகவும் வேதனைப்பட்டது. அங்கு வந்த பலர் அந்த இரத்தத்தைத் தொட்டு நெற்றியில் பொட்டிட்டுக் கொண்டனர். இன்னும் இதுபோன்ற கொடுமை தெய்வத்தின் பெயரால் நடைபெறுகின்றதே என்று வருந்தினேன்.

இவ்வுயிர்ப்பலியை எதிர்த்துத்தான் சமண பௌத்த சமயங்கள் தோன்றின. 2500 ஆண்டுகளுக்கு முன்னமேயே பௌத்தரும், மகாவீரரும் தோன்றி வேள்வியில் நடந்த உயிர்ப்பலிகளை எதிர்த்து நின்றனர். 2500 ஆண்டுகளாக எதிர்ப்பு இருந்தும் கோயில்களில் இன்னும் பலி நடப்பது வியப்புக்குரியதாக உள்ளது.

தென்னாட்டில் திருவள்ளுவர் எதிர்ப்பைக் காட்டி னார். சிலர் யாகத்தில் பலிகொடுத்தால் பாவமில்லை என்று கூறினர். அதையும் எதிர்த்து "அவி சொரிந்து

ஆயிரம் வேட்டலின் ஒன்றன் உயிர் செகுத்து உண்ணாமை நன்று'' என்று திருவள்ளுவர் அருளினார். புலாலுண்ணாமையும் கொல்லாமையும் அருளை நாடுபவர்க்கு விதிக்கின்றார். அண்மைக் காலத்தில் தோன்றிய வள்ளற் பெருமான் பலிநடவாது இருப்பதற்குப் பெருஞ் சக்தியாக இருந்தார். ஆடு, மாடு, கோழி முதலிய உயரினங்களைப் பலியிட்டு வணங்கும் சிறு தெய்வ வழிபாட்டை மிகவும் கடிந்தார்.

## விக்டோரியா நினைவு மண்டபம்

காளி கோயிலிலிருந்து 1-30 மணிக்கு விக்டோரியா நினைவு மண்டபத்துக்குப் போனோம். மண்டபத்துக்குள் சாமான்கள் எதையும் எடுத்துக்கொண்டு போகக்கூடாது. எங்கள் கைப் பைகளையும் குடைகளையும் கவுண்டருக்குள் கொடுத்து இரசீது பெற்றுக்கொண்டோம்.

முன் மண்டபத்தில் இந்நாட்டை ஆண்ட ஆங்கிலப் பெருமக்களின் பளிங்கு உருவங்கள் கம்பீரமாக நின்றன. உள் மண்டபத்தில் இந்திய நாட்டின் பல்வேறு பகுதிகளில் வாழும் நடை உடை பாவனை பழக்க வழக்கங்களைக் காட்டும் பன்னிறச் சித்திரங்களைத் தொகுத்து வைத்துள்ளனர். முகம்மதிய மன்னர்களின் தர்பார் காட்சிகளும் அவர்கள் வாழ்க்கை முறைகளையும் காட்டும் சித்திரங்களும் உள்ளன. ஆங்கிலேய ஆட்சியில் ஆட்சி செய்த கவர்னர்கள், வைசிராய்கள், அதிகாரிகள் முதலியோரின் மிகப்பெரிய படங்கள் சுவரை அலங்கரித்தன. இமயம் முதல் குமரிமுனை வரை இந்நாட்டில் உள்ள திருத்தணி, பழநி, இராமேச்வரம், திருச்சி, திருச்செந்தூர் முதலிய பெயர் பெற்ற திருத்தலங்களின் அழகான சித்திரங்களும் எல்லோரா அஜந்தாவில் உள்ள அருமையான சிற்பங்கள் சித்திரங்களின் வண்ணப் படங்களும் காட்சிக்கு இனியவாக உள்ளன.

மனிதன் முதலில் வில்லும் வேலும் கொண்டு வேட்டையாடினான். பிறகு மனிதர்களைக் கொல்லும் ஆயுதங்களைக் கண்டு பிடித்தான். பீரங்கி, குண்டு, துப்பாக்கி, வானஊர்தியும் அதிலிருந்து ஏவக்கூடிய குண்டுகளும் ஆகிய இவற்றை வரிசையாக வைத்துப் போர்க்கருவிகள் வளர்ந்த விதத்தைக் காட்டியுள்ளனர். வாள், வேல், தண்டம், கவசங்கள் போன்ற பழங்காலப் போர்க்கருவிகள் வரிசையாக வைக்கப்பட்டு உள்ளன.

மன்னர்கள் பயன்படுத்திய இரத்தினங்கள் பதித்த அருமையான வாளாயுதங்கள் கண்ணாடிப் பெட்டிகளில் காட்சி அளித்தன. பண்டைய நாட்களில் அவர்கள் அணிந்த அழகான ஆடைகள் அலங்காரமாகக் கண்ணாடி பீரோக்களில் தொங்கின. இந்த ஆடைகளின் விதங்கள் தான் எத்தனை விதம்!

இவற்றைப் பார்த்துக்கொண்டு மாலை 4-30 மணிக்கு மிருகக் காட்சிச்சாலைக்குப் போனோம்.

மிருகக் காட்சிச் சாலை

கட்டணம் 0-50 பைசா செலுத்தி உள்ளே போனோம். முதலில் புலிக்கும் சிங்கத்துக்கும் பிறந்த 'டைகான்' என்னும் விலங்கைப் போய்ப் பார்த்தோம். இது சிங்க முகமும் வரிகளுடைய புலி உடம்பும் கொண்டு இருந்தது. இது 1972ல் பிறந்தது. உலகத்தில் இது போன்ற விலங்கு இது ஒன்றே. மேலும் இங்கிருந்த சிங்கங்கள், புலிகள், சிறுத்தைகள், கரடிகள், மனிதக்குரங்குகள், பலவகைப் பாம்புகள், வெள்ளை மான், பல வகை பறவை இனங்கள் முதலியவற்றைப் பார்த்துக் கொண்டு நியூ மார்க்கெட்டுக்குப் போனோம். பின்னர் பஸ்ஸில் 7-15 மணிக்கு ஸ்டேஷனை அடைந்தோம். அங்கேயே எங்களுக்கு சிற்றுண்டி வழங்கப்பட்டது. வண்டி 9-ம் நெம்பர் பிளாட்பாரம் வந்தடைந்ததும் எங்கள் பெட்டிகளுக்குப் போய் உணவருந்திப் படுத்தோம். வண்டி கயாவை நோக்கிப் போயிற்று.

## கயா

புதன்கிழமை 3—5—78 காலை 9-30 மணிக்குக் கயா ஸ்டேஷனை அடைந்தோம். காலை 7-00 மணிக்கே சிற்றுண்டி அருந்திவிட்டோம். கயையில் இறந்த முன்னோர்களுக்குப் பிண்டம் வைப்பது முக்யம். பத்ரியில் பிரம கபாலத்தில் பிண்டம் வைத்தவர் எங்குமே பிண்டம் வைக்க வேண்டியதில்லை.

## விஷ்ணு பாதம்

நாங்கள் யாவரும் காலை 10-00 மணிக்குக் குதிரை வண்டிகளில் விஷ்ணு பாதம் போய்ச் சேர்ந்தோம். இங்குதான் இறந்த முன்னோர்களுக்குப் பிண்டம் வைப்பது.

போர் முடிந்து, இராமரும் அயோத்தியை ஆண்டு கொண்டிருந்தபோது சீதை, இலட்சுமணர் தாய் சுமித்திரையோடு இங்கு வந்து தமது தந்தைக்குப் பிண்டம் வைத்துக் கடன் செய்ததாகப் புராணம் கூறுகிறது.

இக்கோயில் பல்குனி நதிக்கரையின்மீது இருக்கின்றது. கோயிலின் நடு மண்டபத்தில் விஷ்ணு பாதம் இருக்கின்றது. சதுரமான பள்ளத்தில் இரண்டு திருவடிகள் உள்ளன. இதுதான் விஷ்ணுபாதம் எனப்படுகின்றது. இதற்கு இரவில் சந்தனக்காப்பு செய்து பொட்டிட்டு அலங்கரித்து வழிபாடு செய்கின்றனர். இதற்குப் பக்கத்தில் மேல் கூரையிலிருந்து நீர்த்துளி அவ்வப்போது சொட்டுகின்றது. அந் நீர்த்துளி எங்கிருந்து எப்படி சொட்டுகின்றது என்பது மர்மமாயிருக்கின்றது. பிண்டம், பல்குனி நதிக்கரை, விஷ்ணுபாதம், அட்சயவிடம் என்னும் மூன்று இடங்களில் வைக்கவேண்டும். ஒரு இடத்தில் பிண்டம் வைக்கக் கட்டணம் ரூ. 7-75 ஆகும். பலர் பிண்டம் வைக்கும் சடங்கைச் செய்தனர். முதலில் பல்குனி நதிக்கரை மண்டபத்தில், இரண்டாவதாகக் கோயில் மண்டபத்தில்,

மூன்றாவதாக அட்சயவட மரத்தடியில் பிண்டம் வைத்துச் சடங்கைச் செய்தனர். மூவேழு இருபத்தொரு தலை முறையினருக்குப் பிண்டம் வைக்கப்படுகின்றது. மூன்றிடங் களில் வைத்த பிண்டப் பிரசாதத்தை வைத்திருந்து முடிவில் விஷ்ணு பாதத்தில் வைத்து வழிபட்டனர். அட்சய வட மரத்தடியில், பிண்டம் வைக்கும் சடங்கு முடிந்த பிறகு ஒரு **பழம்** ஒரு **இலை** ஒரு **காய்** இனி தமது வாழ்நாளில் பயன்படுத்துவதில்லை என்று உறுதி எடுத்துக் கொள்ளுமாறு புரோகிதர் பணித்தார். அவ்வாறே எல்லாரும் தமக்கு விருப்பமில்லாத பிடிக்காத மூன்றை விட்டனர். இந்த ஏற்பாடு நம்மிடமுள்ள பற்றுக்களைக் குறைத்துக் கொள்வதற்காக ஏற்பட்டது. பந்த பாசங் களை விடுவதற்கு ஆதாரமாயுள்ள இந்தப் பழக்கம் பயனற்ற பழக்கமாகப் போய்விட்டது. பிண்டம் இடுவது இறந்த முன்னோர்களுக்கு அவர்கள் நினைவாக நாம் செய்யும் முக்கியமான சடங்காகும். இதை நம்பிக்கை யுடனும் அன்புடனும் செய்யவேண்டும். நம் முன்னோர் களை அன்போடு எண்ணிச் செய்வது நல்லது 2000 ஆண்டுகளுக்கு முன்னாலேயே இச்சடங்கு பழக்கத்தில் இருந்தது. அதற்கு ஆதாரம் புறநானூற்றிலும் திருக் குறளிலும் உள்ளன.

"தென்புலம் வாழ்னர்க்கு அருங்கடன் இறுக்கும்
பொன்போற் புதல்வர் பெறாதீரும்." —(புறம்)

"தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல்தான் என்றாங்
கைம்புலத்தார் ஓம்ப றலை." —(குறள் 43)

இவற்றில் இறந்த முன்னோர்களைத் 'தென் புலத் தார்' என்று குறிக்கப்பட்டுள்ளது.

அங்கிருந்து நாங்கள் பிற்பகல் 2-00 மணி அளவில் கயா இரயில் நிலையத்தை அடைந்து எங்கள் பெட்டிகளில் உணவருந்தினோம். வெய்யில் மிகக் கடுமையாக இருந்தது. களைத்தும் இருந்தோம் என்றாலும் பிற்பகல்

3-30 மணிக்குத் தனி பஸ்ஸில் 7 மைல் தூரத்தில் உள்ள புத்த கயாவுக்குப் போனோம்.

புத்தகயா

முதலில் தாய்லாந்து புத்தர் கோயிலுக்குப் போனோம். இதில் தூய பித்தளையாலான 12 அடி உயர புத்தர் திருவுருவம் கோயில் கொண்டிருக்கின்றது. இத் திருவுருவமும் கோயிலும் தாய்லாந்து கலாச்சாரப்படி அமைந்துள்ளது. கோயில் முகப்பு தங்கமுலாம் பூசப் பட்டுத் தங்கக் கோயிலாகக் காட்சியளித்தது. தூரத்தி லிருந்து பார்த்தபோது இதன்மீது சூரிய ஒளி பட்டுப் பல மின்விளக்குகள் எரிவது போன்று இருந்தது. கோயிலுக்குள் புத்தர் பெருமான் கருணை பொழியும் முகத்தோடு அமர்ந்துள்ளார். கோயிற் சுவரில் மற்ற நாட்டுப் பௌத்தக் கோயில்களின் சித்திரங்கள் உள்ளன. இவற்றை எல்லாம் பார்த்துக் கொண்டு, ஜப்பான் சைனா நாட்டார் தங்கள் தங்கள் நாட்டு முறைப்படிக் கட்டியுள்ள புத்தர் கோயில் களுக்குப் போனோம். பிறகு திபேத் நாட்டுப் புத்தர் கோயிலுக்குப் போனோம். அங்குப் புத்தரின் வரலாற்றைச் சுவர் முழுவதும் பன்னிறங்களில் சித்திரங்களாகத் தீட்டி யுள்ளனர். புத்தரின் திருவுருவம் திபேத் நாட்டு அலங்காரங்களுடன் இருக்கின்றது. இதைத் தரிசித்துக் கொண்டு அக்கோயிலின் அடுத்த பகுதிக்குப் போனோம். அங்கு ஒரு பெரிய சக்கரம் இருக்கக் கண்டோம். இது தம்மசக்கரம் எனப்பட்டது. இதை 50 தரம் சுற்றினால் நம் பாவம் போகும் என்று சொல்லி ஓர் அறிவிப்புப் பலகை அங்கு வைக்கப்பட்டிருந்தது. ஆனால் இச்சக்கரத் துக்கு புத்தருடைய வேதப் புத்தகங்களில் நல்ல விளக்கம் தரப்பட்டுள்ளது. புத்தர் உலகில் பரப்பிய தர்மமே இச்சக்கரம். தூய்மையான ஒழுக்க விதிகளே இதன் ஆரக்கால்கள். ஒரே அளவான இதன் நீளம் நீதி உணர்வைக் குறிக்கும். இதன் சுற்றுப்பட்டை ஞானம்.

தீச்செயல், தற்பெருமையில் நாணம் இதன் குடம். இக் குடம் உருள, நற்சிந்தனைகள் என்னும் பாதையில் நாம் போகலாம். சத்தியம் இச்சக்கரத்தின் இருசு. இன்னெறிப் படி நம் வாழ்க்கைச் சக்கரம் சுழன்றால் நாம் மேலான பதவியை அடையலாம்.இக்கருத்தில் இச்சக்கரம் அமைக்கப் பட்டுள்ளது. புத்தரின் உபதேசப்படி இச்சக்கரத்தை உருட்டுவோர் நிர்வாணம் அடைவர். (விடுதலை அடை வர்). புத்தரின் உபதேசங்கள் அடங்கிய நூல் 'தம்மபதம்' எனப்படும். இது திருக்குறளைப் போன்றது. இதில் கூறியுள்ள அறநெறிகளின்படி வாழ்ந்தால் நாம் பிறவிப் பயனை அடையலாம்.

அடுத்து புத்தர் ஞானம் பெற்ற புனித இடத்துக்குப் போனோம். இப்போது இது பெரிய கோயிலாக இருக் கின்றது.

புத்தர் 2500 ஆண்டுகளுக்கு முன் (கி. மு. 535 முதல் 485 வரை) இருந்தவர். கபிலவாஸ்து என்னும் இடத்தில் அரச குடும்பத்தில் பிறந்தார். மரணமிலாப் பெரு வாழ்வைப் பெற அரசையும் மனைவி மக்களையும் துறந்தார். அமைதியின்றி நாட்டிலும் காட்டிலும் அலைந்தார். இறுதியில் கயாவை அடைந்தார். இங்குள்ள போதி மரத்தடியில் தவங்கிடந்தார். ஏழு மரங்களின் அடியில் மாறி மாறித் தவமிருந்து கடைசியில் ஞானம் பெற்றார். அம்மரங்களில் நான்கு இப்போதும் இருப்ப தாகக் கூறினர். முதலில் இங்கு இவர் ஞானம் பெற்றதன் அடையாளமாக சிறிய நினைவுச் சின்னத்தை எழுப் பினார்கள். அது இப்போது பெரிய கோயிலாக விளங்கு கின்றது. இது 1700 ஆண்டுகளுக்கு முன் கட்டப்பட்டது. புத்தர் பெருமான் நின்ற கோலத்தில் உள்ளார். கோயிலின் மாடிமீதும் புத்தரின் பல உருவங்கள் உள்ளன. நம் கோயிலில் நிலவும் கூச்சலும் குழப்பமும் இங்கு முற்றிலும் இல்லை. பெருங்கூட்டத்துக்கிடையில் மிகுந்த அமைதி நிலவுகின்றது. இங்கு கூடும் மக்கள் மௌனம்

வசித்து அமைதியோடு இயங்குகின்றனர். இந்த அமைதி நம் மனத்துக்கும் அமைதியை அளிக்கின்றது. கோயிலை அடுத்துள்ள இடத்தில் வழிவந்த பல பிக்குகளின் சமாதி கள் உள்ளன. மற்றொருபுறம் பஞ்ச பாண்டவர்களின் திருவுருவங்கள் சிறு அறைகளில் வைக்கப்பட்டுள்ளன. இங்கு வழக்கம் போல் சிலர் வருவோரைக் கூவி அழைத்துத் தட்சணை போடுமாறு கூச்சலிட்டனர்.

புத்தர் பெற்ற ஞானத்தின் சாரம்: துக்கம், துக்க உற்பத்தி, துக்க நிவாரணம், துக்க நிவாரண மார்க்கம் என்பனவாகும். இவற்றைப் பற்றிய உண்மைகளை உணர்ந்து துக்க நிவர்த்தி பெற்று எல்லா மக்களும் இன்பப் பேற்றை அடையவேண்டும் என்பதே புத்தரின் விருப்பம். பெரும் ஆராய்ச்சியில் ஈடுபட்டு வாழ்க்கையை வீணாக்கிக் கொள்வதை விட அநுபவ சாத்தியமான நன்னெறிகளைப் பின்பற்றி வாழ்க்கைப் பயனை அடைய வேண்டும் என்று மக்களை ஊக்கினார்.

மாலை ஆறு மணிக்கு எங்கள் பஸ்ஸில் கயா இரயில் நிலையத்தை அடைந்தோம்.

## வாரணாசி

வியாழக்கிழமை 4-5-78 காசியை (வாரணாசியை) அடைந்தோம். ஸ்ரீ காசி முத்தித் தலங்கள் ஏழினுள் ஒன்று. இவை துவாரகை, காஞ்சி, மதுராபுரி, அயோத்தி, மாயாபுரி (அரித்துவாரம்), அவந்திகா (உஜ்ஜைனி) ஸ்ரீ காசி என்பன வாகும்.

காசித் தலம் மிகத் தொன்மை வாய்ந்த புண்ணியத் தலமாகும். சர்வசங்காரம் நடந்து உலகம் யாவும் அழிந்த போது இத்தலம் மட்டும் அழியாமல் இருந்தது. தொன்று தொட்டு முனிவர்களும் தவசிகளும் விரும்பி இருந்து தவம் செய்த இடமாகும். துளசிதாசர், சூர் தாஸர், கபீர் தாசர்

போன்ற வடநாட்டுப் பக்தர்களும், தென்னாட்டுக் குமர குருபரரும் வாழ்ந்து அருள் பரப்பிய இடமுமாகும். கயாவில் போதி மரத்தடியில் ஞானம் பெற்ற புத்தர் இத்தலத்துக்கு அருகில் உள்ள சாரநாத்தில்தான் தமது கொள்கைகளை உலகு அறியச் செய்தார். ஆன்மீகத் தலமான காசியில் கல்விக் கழகங்களும் உள்ளன.

இது எல்லா தெய்வ வழிபாட்டினருக்கும் புனிதத் தலமாயிருக்கின்றது. ஒவ்வொரு மனிதனும் தன் வாழ் நாளில் ஒரு முறையேனும் இங்கு வந்து போக வேண்டும் என்ற மரபு உளது. கங்கையில் குளித்து விசுவேசுவரரை வணங்க வேண்டும் என்பது ஒவ்வொரு இந்துவின் கடமை என்று சாத்திரங்கள் பகருகின்றன. இறுதி நாளில் நினைக்க வேண்டிய புண்ணியத்தலம் ஸ்ரீ காசியே என்பதை யாவரும் அறிவர். 'காசியில் இறக்க முத்தி' என்ற ஆன்றோர் வாக்கும் உளது.

மனித இனத்துக்கு மட்டுமின்றி எல்லா உயிரினங் களுக்கும் உய்தியளிக்கும் உயர்வான இடமும் இதுவே யாகும். ஏனெனில் இத்தலம் மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற மூன்றாலும் சிறப்புப் பெற்றுள்ளது.

ஞானிகள் தமது இறுதி நாள்களை இங்குக் கழித்து உயிர்விட எண்ணினர்.

நதிகளில் சிறந்தது கங்கை. கங்கையை விடச் சிறந்த நதி உலகில் எங்குமேயில்லை. உமாதேவியார் பரமனின் பாதி உடம்பைப் பெற்றிருக்க, கங்கையோ பெருமானின் முடிமீதே கொலு வீற்றிருக்கும் பெருமையைப் பெற்று உள்ளாள். கங்கையாலன்றோ இத்தலம் பெருமை பெற்றுள்ளது. எத்தனை எத்தனை ஞானிகளின் உடலங் களை இத்தேவி புனிதப்படுத்தி ஏந்தியிருக்கின்றாள். இவள் தோன்றிய வரலாறும் புனிதமானது.

சகர மன்னர்கள் நூறு பேர் முனிவரிட்ட சாபத்தால் சாம்பலாயினர். இவர்களை உய்விக்க, இவர்கள் வழிவந்த

பகீரதன் கடுந்தவமியற்றிக் கங்கையைச் சிவபெருமான் திருவருளால் உலகுக்குக் கொண்டுவந்தான். இவன் முயற்சியில் வந்ததால் கங்கைக்குப் பாகீரதி என்ற பெயரும் வந்தது. சிவபெருமான் கங்கையைத் தமது முடிமீது தாங்கியிருப்பதால் இவர் கங்காதரன் என்ற பெயரும் பெற்றார்.

அடுத்து உலகம் போற்றும் விசுவேசுவரர் இங்கு எழுந்தருளியிருக்கும் சிறப்பால் இக் காசிக்குப் பெருமை உண்டாயிற்று.

விசுவம் — எல்லாம். விசுவேசுவரர் — எல்லாமாயிருப்பவர். இப்பெருமானே எங்குமுள்ள எல்லா மூர்த்திகளுமாயிருக்கிறார். அதனால் மூர்த்திகளில் சிறந்த மூர்த்தியாய் இம்மூர்த்தி இருக்கின்றது.

இவ்வாறு ஸ்ரீகாசி தலம், தீர்த்தம், மூர்த்தி என்னும் மூன்றாலும் சிறப்புப் பெற்றிருக்கின்றது.

காசியஸ் என்ற ஆரியப் பிரிவினர் இங்கு வந்து தங்கியதால் இது காசி என்ற பெயரைப் பெற்றது என்றும் காசா என்னும் மன்னன் இதை ஆண்டதால் இது காசி என்ற பெயரைப் பெற்றது என்றும் சொல்வர்.

ஔரங்கசீப் என்னும் முகலாய மன்னன் காசி என்ற பெயரை மாற்றி '**முகமதாபாத்**' என்று பெயரைச் சூட்டியும் அப்பெயர் நிலைபெறவில்லை.

காசிக்கு வடக்கே 'வரணா' என்ற ஆறும், தெற்கே 'அசி' என்ற ஆறும் இந்நகரைச் சுற்றி வளைத்துக்கொண்டு ஓடி கங்கையில் கலப்பதால் காசி இப்போது **வாரணாசி** என்ற பெயரைப் பெற்று விளங்குகின்றது.

உலகம் மாபெரும் உடம்பு என்றால் அதற்குப் புருவனடுவாகக் காசி இருக்கிறது என்று கொண்டு காசி ஒளி வடிவானது என்று கூறுவார்கள்.

புறவொளி புற இருளை ஓட்டும். புருவ நடுவில் விளங்கும் ஒளி அகவிருளை ஓட்டும். அகவிருள் அஞ்ஞானம்

ஆகும். எனவே அஞ்ஞான இருளை ஓட்டும் இது ஞானம் எனப்படும்.

இனி, ஞானபூமியாயுள்ள இதை அடைந்தவர்கள் சாகமாட்டார்கள். ஆனால் முத்திப்பேறு அடைவர். அதனால் இங்கு வந்து உடம்பை விட்டவர்கள் இன்னொரு பிறப்பை அடையாது இறையடி சேர்வர். ஆதலால் 'காசியில் இறந்தால் முத்தி' எனப்படுவதாயிற்று.

காசியில் உயிர்விடும் உயிர்களைப் பெருமாட்டி கருணையோடு தமது மடித்தலத்து வைத்து முந்தானையால் விசிறி அயர்வைப் போக்குவாள். சிவபெருமான் அவர்கள் காதில் தாரக மந்திரத்தை ஓதி ஆட்கொள்வான். அதனால் இது அவிமுக்தம் எனப்படுகிறது.

இது முத்தி மாத்திரமன்றி உலக வாழ்க்கைக்கு இன்றியமையாது வேண்டப்படும் எல்லாச் செல்வங்களையும் அளிக்கும் என்று தருமபுர ஆதீன பத்தாவது குரு மகா சன்னிதானம் அருளியுள்ளார்.

மற்றும் இது சிவபெருமான் விரும்பித் தங்கியதால் **தெய்வகாசி** எனவும் உலகியற் பொருள்களை அளிப்பதால் **அர்த்தவனம்** எனவும், மேலான போகங்களை அளிப்பதால் **முத்திவனம்** எனவும், காசியிலன்றி வேறு எங்காயினும், காசியை எண்ணி உயிர் விட்டாலும் அவ்வுயிர்களுக்கு எம்பிராட்டி அருள்காட்டி அயர்வு போக்கவும், எம்பிரான் தாரக மந்திரத்தை அவர்கள் வலது காதில் ஓதி உய்தி அளிக்கவும் உள்ளதால் **தாரக க்ஷேத்திரம்** எனவும் சான்றோர் கூறுவர். மற்றும் கௌரிமுகம், ருத்ரவாசம், மகாமசானம், அபிமுக்தேசம், பஞ்சக்ரோச சொரூப லிங்கம் எனவும் பல பெயர்களைப் பெற்றுள்ளது.

இங்கு விசுவேசுவரர் ஆண் பெண் வருண பேதமின்றி அனைவரும் தொட்டுக்கும்பிட்டு வழிபட வழி விட்டுள்ளார்.

எல்லாச் செல்வங்களையும் அளிக்கும் அன்னபூரணியோடும், எவர் எங்கு வழிபட்டாலும் அருள்பாலிக்கும்

விசாலமான கண்களையுடைய விசாலாட்சியோடும் எழுந்தருளியுள்ளார்.

வட நாட்டில் உள்ள புனிதத் தலங்கள் ஒன்றேனும் முஸ்லிம்களின் தாக்குதலுக்குத் தப்பவில்லை. இராமபிரான் பிறந்த இடத்தையும், கண்ணன் அவதரித்த தலத்தையும் அழித்து மசூதி கட்டினர். அதைப்போலவே காசி விசுவேசுவரர் ஆலயத்தையும் பலமுறை இடித்துத் தள்ளித் தமது வழிபடும் இடமாக ஆக்கிக் கொண்டனர்.

விசுவேசுவரரின் பழங்கோயில் குத்புதீன் என்னும் கொள்ளைக்காரனால் அழிக்கப்பட்டுக் கொள்ளை போயிற்று. பின் அன்பர்களால் புதிதாகக் கோயில் கட்டப்பட்டது. அதையும் அலாவுதீன் என்பவன் இடித்துத் தள்ளி அந்த இடத்தில் 'ஜெனன்புரி' என்னும் மசூதியைக் கட்டினான். அக்பரின் அமைச்சன் தோடர்மால் மீண்டும் விசுவநாதருக்கு கோயில் எழுப்பினான். இதையும் பின் வந்த ஔரங்கசீப் என்னும் மொகலாய மன்னன் 1759-ல் அழித்து அதிலிருந்த சிவலிங்க மூர்த்தியை எடுத்துக் கங்கையில் எறிந்தான்.

விசுவேசுவரரை பக்தியோடு பூசித்து வந்த நாராயண பட்டர் என்னும் அந்தணர் மிகவும் வருந்தி மீண்டும் ஒரு கோயிலை அமைக்காது உண்ணுவதில்லை என்று உண்ணா நோன்பிருந்து ஊண் உறக்கமின்றித் தவங்கிடந்தார். ஒரு நாள் பெருமான் அவர் கனவில் தோன்றி சிவலிங்கத் திருமேனி இருக்கும் இடத்தையும், கோயில் அமைக்க வேண்டிய இடத்தையும் அமைப்பையும் காட்டி, அமைப்பாளரையும் உணர்த்தி மறைந்தார். பட்டர் பெருமகிழ்ச்சியோடு இறைவன் உணர்த்திய இடத்திலிருந்து சிவலிங்கத்தை மீட்டார்.

இறைவன் குவாலியர் மகாராணி அகல்யாபாயின் கனவிலும் தோன்றித் தமக்குக் கோயில் அமைக்குமாறு பணித்தார்.

கோயிலை எழுப்ப இறைவனால் பணிக்கப்பட்டவர் குவாலியர் மகாராணி என்பதை அறிந்திருந்த பட்டர் மகாராணியாரை அணுகி, அவரை அழைத்து வந்து இறைவன் காட்டிய இடத்தில் ஆலயத்தைக் கட்டுவித்தார். இதுவே இப்போதுள்ள காசி விசுவேசுவரர் ஆலயமாகும். பிற்காலத்தில் இந்த ஆலய விமானத்துக்கு ரணஜித் சிங் என்னும் மன்னன் பொன்வேய்ந்தான். இங்குள்ள தூண்கள் யாவும் அற்புதமான வேலைப்பாடுகளோடு கூடியவை.

அன்னபூரணி தேவிக்கும் விசாலாட்சி அம்மைக்கும் தண்டபாணிக்கும் தனிக்கோயில்கள் உள்ளன. அன்ன பூரணி தேவிக்குத் தங்கத் திருமேனி.

மாலை ஏழு மணி பூஜையில் சிவலிங்க மூர்த்திக்கு நாகாபரணம் அணிவித்து வழிபாடு செய்கின்றனர். அப்போது மக்களைத் தொட்டுக் கும்பிட உள்ளே அனுமதிப்பதில்லை. அந்நேரத்தில் நடைபெறும் பூஜை மிகவும் சிறப்பானது.

ஸ்ரீ காசி விசுவேசுவரர் மூர்த்தி பன்னிரண்டு ஜோதிர் லிங்கங்களுள் ஒன்று. அவையாவன: 1. சோமநாதர் 2. மல்லிகார்சுனம். 3. திரியம்பகம். 4. மகாகாளர். 5. ஓம்காரர். 6. பீமசங்கரம். 7. இராமேச்சுரம். 8. குஸ்ருணேஸ்வரம் 9. நாகநாதர் 10. வைத்தியநாதர். 11. கேதாரீஸ்வரர் 12. விசுவேசுவரர் என்பனவாகும். இவற்றின் வரலாறு வருமாறு:

**1. சோமநாதம்:** சௌராஷ்ட்டிர தேசத்தில் மணி பர்வதத்தில் இந்த ஆலயம் இருக்கின்றது. ஸ்படிகம் போன்ற திருமேனி. முகம்மதியர்களால் சிதையுண்டது. கிருஷ்ண பகவான் வேடன் விட்ட அம்பால் அடியுண்டு உயிர்விட்டதும், அவர் திருமேனி தகிக்கப்பட்டதும் இந்த இடத்தில்தான். கஜனிமுகம்மது இக்கோயிலை முற்றுகை யிட்டுச் சிதைத்து ஏராளமான நவரத்தினங்களை அள்ளிக் கொண்டு போனான். பின் சர்தார் வல்லபாய் படேலின்

முயற்சியால் இப்போதுள்ள கோயில் நிர்மாணம் செய்யப்பட்டது. பழைய இலிங்கம் நிலவறையிலும் வேறோர் இலிங்கம் மேல் தளத்திலும் உள்ளன.

2. **ஸ்ரீ சைலம் (மல்லிகார்சுனம்):** தெலுங்கு நாட்டில் நந்தியாலிலிருந்து 70 கல் தொலைவில் மலைமீது இருக்கின்றது. இது தேவாரப் பாடல் பெற்றது.

3. **திரியம்பகம்:** நாசிக் பஞ்சவடிக்குப் பதினெட்டு கல் தொலைவில் கோதாவரி நதி உற்பத்தியாகும் இடத்தில் இருக்கின்றது. திருமாலும் நான்முகனும் தாமே பெரியவர் என்று தருக்கி நின்றபோது சிவபெருமான் ஜோதி வடிவாகத் தோன்றி அவர்களுடைய செருக்கை அடக்கிய நிகழ்ச்சி இங்கு நடந்ததாகத் தலபுராணம் கூறுகின்றது. கௌதம முனிவர் இங்கு இருந்து வாழ்ந்து பெருமானை வழிபட்டதாக ஒரு கதையும் உளது.

4. **மகாகாளர்:** உஜ்ஜையின் நகரத்தில் சிப்ரா தீரத்தில் இருக்கின்றது.

5. **ஓம்காரர்:** உஜ்ஜைனிக் கருகில் நர்மதா காவேரி கலக்குமிடம் ஓங்கார வடிவாய் இருக்கின்றது. இங்குப் பெருமான் இருக்குமிடம் மாந்தரதா என்று அழைக்கப்படுகின்றது.

6. **பீமசங்கரம்:** பூனாவிலிருந்து 57 மைலில் உள்ள மாஞ்சர் என்ற ஊரில் மலைமீது இருக்கின்றது. கும்பகர்ணனின் மகன் பீமன் செய்த கொடுமைகளினின்றும் தேவர்களையும் மக்களையும் காக்கப் பீமனை வதைத்த மூர்த்தி பீமசங்காரம் ஆகும். பீமனைக் கொன்ற சங்கரன் என்பது இதன் பொருள்.

7. **இராமேச்சுரம்:** இராமநாதபுர வட்டத்தில் கடலின் மத்தியில் இருக்கின்றது. தேவாரப்பாடல் பெற்றது. இராமபிரானால் ஸ்தாபிக்கப்பட்டு வழிபடப்பட்டது. தீர்த்த விசேடமும் உடையது.

**8. குஸ்ருணேஸ்வரம் ;** எல்லோரா குகைகளுக்கருகில் இருக்கின்றது. இந்தோர் மகாராணியால் கட்டப்பட்டது. சிவலிங்கம் செந்நிறம். அதனால் இது குஸ்ருணேஸ்வரர் என்று அழைக்கப்பட்டது. இம்மூர்த்தியை அம்மை குங்குமப் பூவால் அர்ச்சித்து வழிபட்டார்.

**9. நாகநாதர் :** இம்மூர்த்தி உள்ள தலம் நாகேசம் எனப்படும். இது சோண்டிக்கு அருகில் இருக்கின்றது. தாருகாவனம் என்ற பெயரும் இதற்கு உண்டு. தாருகாவன முனிவர்களின் செருக்கை அடக்கச் சிவபெருமான் பிட்சாடணராகவும் திருமால் மோகினியாகவும் வந்து முனிவர்களின் செருக்கை அடக்கிய இடம் இது. சிவபெருமான் தாருகன் என்னும் அரக்கனைக் கொன்று உலகுக்கு வாழ்வளித்த இடமும் இதுவேயாகும்.

**10. கேதாரம் :** இத் திருக்கோயில் இமாலயத்தில் இருக்கின்றது. ஆறு திங்கள் பனி மூடிக் கிடக்கும். இறைவர் கேதாரீஸ்வரர். இங்கிருக்கும் கங்கணத்தைக் கையில் அணிபவர்களும், மூர்த்தியைத் தரிசிப்பவர்களும் இஷ்டசித்தி அடைவர்.

**11. வைத்தியநாதம் :** பாட்னாவில் வைத்தியநாதம் என்னும் ஊர் இருக்கின்றது. இம்மூர்த்தி இலங்கையிலிருந்து இராவணனால் கொண்டு வரப்பட்டது. இது தரிசன விசேஷம் உடையது.

**12. விசுவேசம் :** ஸ்ரீ காசியில் இருப்பது. தேவார வைப்புத் தலமாய் இருக்கின்றது. முத்தித் தலங்கள் ஏழினுள் இதுவும் ஒன்று.

இனி இங்கு முக்யமாகத் தரிசிக்க வேண்டிய மூர்த்திகள் வருமாறு:

துண்டிராஜ கணபதி, விசுவேசுவரர், அன்னபூரணி, விசாலாட்சி, கேதாரேஸ்வரர், பிந்து மாதவர், துர்க்கை, கால பைரவர், தண்டபாணி ஆகும்.

கங்கையில் 64 கட்டங்கள் உள்ளன. முடிந்தால் எல்லாக் கட்டங்களிலும் முழுகுதல் சிறப்பு. இயலாதவர்கள் வருணை மணிகர்ணிகா, தசாஸ்வமேதம், பஞ்ச கங்கா, அசி என்னும் கட்டங்களில் அவசியம் தீர்த்தமாடுதல் வேண்டும்.

வருணா என்னும் ஆறு கலக்குமிடம் இருப்பது வருண கட்டம் ஆகும். இங்கு தீர்த்தமாடி இதன் கரைமீது உள்ள ஆதிகேஸ்வரர், வருணேசுவரரை வழிபட வேண்டும்.

**மணிகர்ணிகா :** இது கங்கைக்கரைமீது உள்ள ஒரு குளம் ஆகும். இது திருமாலால் உண்டாக்கப்பட்டது. இதன் வரலாறு வருமாறு:

ஒரு சமயம் திருமால் இக் கரைமீது அமர்ந்து சிவபெருமானை நோக்கித் தவம் செய்தார். பெருமான் திருமால் முன் தோன்றி அவர் தவத்தை மெச்சிச் சிரக் கம்பம் செய்தார். அப்போது சிவபெருமான் காதில் இருந்த குண்டலத்தின் நாகமணி நழுவி இக்குளத்தில் விழுந்து விட்டது. அதனால் இக்குளம் 'மணிகர்ணிகா' என்ற பெயரைப் பெற்றது.

இக்குளம் திருமாலின் சக்கரத்தால் தோற்றுவிக்கப் பட்டது. அதனால் இது 'சக்கர தீர்த்தம்' என்றும் அழைக்கப்பட்டது. காசியில் உள்ள தீர்த்தங்கள் யாவற்றிலும் இது மிகவும் உயர்ந்தது. இதில் தீர்த்த மாடியே இதன் கரைமீது சங்கல்பம் முதலிய கர்மங்கள் செய்ய வேண்டும்.

விசுவேசுவரர் ஆலயம் பல சின்னச் சந்துகள் கூடிய ஊரின் நடுவில் இருக்கின்றது. கோயில் சின்னது. ஆனால் மூர்த்தியின் கீர்த்தி பெரிது. ஒரு சதுரமான அறையில் ஈசான மூலையில் இரண்டடி சதுரமுள்ள வெள்ளித் தகடு வேய்ந்த பள்ளத்தில் சிவலிங்க மூர்த்தி எழுந்தருளி யுள்ளார். மரகத வடிவு. அருச்சுனனின் வில்லடிபட்ட

தழும்புடன் கருணை பாலித்துக் கொண்டுள்ளார். பக்தர்கள் யாவரும் தாமே கொண்டு வந்துள்ள கங்கா தீர்த்தத்தால் அபிஷேகம் செய்து வில்வமும் பூவும் கொண்டு அர்ச்சித்துத் தொட்டுக் கும்பிட்டு வழிபடுகின்றனர். அந்த அறைக்கு நாற்புறமும் வாசல்கள் உள்ளன. அதனால் அன்பர்கள் நாற்புறமும் இருந்து வழிபடுவதற்கு வசதியாயுள்ளது. முன்புறம் நந்தியும், சுற்றுப் பிராகாரத்தில் விநாயகர், பார்வதி, அன்னபூர்ணா, கால பைரவர் சன்னதிகளும் உள்ளன. கோயில் தரை முழுவதும் பளிங்காலானது.

நாள் முழுவதும் கோயில் திறந்து வைக்கப்பட்டுள்ளது. மாலை ஏழு மணிக்கு நடக்கும் பூஜை **சப்தரிஷி பூஜை** ஆகும். இப்பூஜையின்போது மூர்த்தி நாகாபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு வழிபாடு நடைபெறுகின்றது. இது கண்கொள்ளாக் காட்சியாகும். தன வணிகர் கட்டளையாக இது நடைபெறுகின்றது.

### துண்டிராஜ விநாயகர்

ஸ்ரீ காசியை துராசனன் என்னும் அசுரன் கவர்ந்து கொண்டு போனான். இதைத் தேவர்கள் அம்மையிடம் போய் முறையிட்டனர். அப்போது அம்மையின் முகத்திலிருந்தும் இம்மூர்த்தி தோன்றிக் காசியை மீட்டுத் தந்தார். இம்மூர்த்தி ஐந்து திருமுகங்களும் பத்து தோள்களும் உற்ற ஆயுதங்களும் கொண்டு வக்ர துண்ட மூர்த்தியாக உள்ளார்.

### காலபைரவர்

காசியின் விசேஷ மூர்த்திகளில் இவரும் ஒருவர். இவர் விருப்பத்தாலேயே எவரும் காசிக்கு வருகின்றனர். இவருடைய சங்கல்பமின்றி எவரும் வரமுடியாது. இவரைப் பற்றிய வரலாறு ஒன்று உளது.

இராமர், இராவண சம்ஹாரத்துக்குப் பின் இராமேச் சுரம் வந்தார். சிவபூஜை செய்ய விரும்பிக் காசியிலிருந்து சிவலிங்கம் கொண்டு வருமாறு அநுமனை அனுப்பினார். காசிக்கு வந்த அநுமன் அங்கு எங்கும் சிவலிங்க மயமாய் இருக்கக் கண்டார். எது சுயம்பு மூர்த்தி என்பதை அறி யாது திகைத்து நின்றார். அப்போது ஒரு கருடன் ஒரு சிவலிங்கத்துக்கு மேலே வட்டமிட்டது. ஒரு பல்லி நற் சகுனம் காட்டி ஒலித்தது. இக்குறிப்புகளைக் கொண்டு அநுமன் அச்சிவலிங்கமே சுயம்பு மூர்த்தி என அறிந்து அதைப் பெயர்த்து எடுத்துக்கொண்டு புறப்பட்டார். இதைக் கண்ட கால பைரவர் சினங்கொண்டு 'என் அனுமதி இன்றிச் சிவலிங்கத்தை எப்படி எடுத்துச் செல்லலாம்?. என்று கூறி அநுமனை எதிர்த்தார். இருவரும் சளைக்காது போரிட்டனர். இப்போர் உலகுக்கு தீமையளிக்கும் என்பதை உணர்ந்த தேவர்கள் அங்குத்தோன்றி 'உலக நலங் கருதி அச்சிவலிங்க மூர்த்தி தென்னாடு போக அனுமதிக்க வேண்டும்' என்று காலபைரவரை வேண்டினர். பைரவரும் சினம் தணிந்து சிவலிங்கத்தை அநுமன் எடுத்துச் செல்ல அனுமதித்தார். ஆனால் சிவலிங்கத்தை அடை யாளம் காட்டி உதவிய கருடன் காசி நகர் எல்லைக்குள் பறக்கக் கூடாது என்றும் ஒலித்த பல்லி அந்நகருக்குள் ஒலிக்கக் கூடாது என்றும் சாபமிட்டார். அதனால் இப் போதும் கருடன் பறப்பதில்லை. பல்லி ஒலிப்பதில்லை.

காசிக்கு போய் வருபவர்கள் காசிக்கயிறு கொண்டு வருவது வழக்கம். கயிற்றைக் கால பைரவர் கோயிலில் வாங்கி அவர் சன்னிதியில் வைத்து வழிபட்டு எடுத்து வருவதுதான் காசிக்கயிறு ஆகும். இவருடைய அருள் நோக்கின்றிக் காசிக்குப்போகும் பேறு கிடைக்காதல்லவா? காசிக்கயிறே காசிப் பிரசாதமாகக் கருதப்படுகின்றது,

## வியாச காசி

வியாசர் தமது மாணவர்களுக்குப் பரத்துவத்தைப் பற்றி போதித்து வந்தார். அது தெளிவின்றி இருந்தது.

அதனால் மாணவர்கள் பரமபதி எது? என்று அறுதியிட்டுத் தெளிவாகக் கூறுமாறு அவரை வேண்டினர்.

வியாசர் கேசவனின் மறு பிறப்பு ஆவார். அவர் உள்ளத்தில் அப்போது 'நாம் எல்லாம் உணர்ந்தவர்' என்ற அகங்காரம் மேலிட்டிருந்தது. அதனால் அவர் செருக்கோடு 'நாராயணனே பரமபதி' என்றார். இதைக் கேட்ட மாணவர்கள் 'தாங்கள் இதைக் காசியில் விசுவேச வரர் முன்னிலையில் சொல்ல வேண்டும். அப்போதுதான் எங்களுக்கு உறுதி பிறக்கும்' என்று பணிவோடு வேண்டினர். அவரும் அதற்கு இணங்கி மாணவர்களோடு காசியை அடைந்து, விசுவேசுவரர் சன்னதிமுன் போய் நின்றார். உள்ளுணர்வு வேறு விதமாய் உணர்த்தியும் அதைப் புறக் கணித்துவிட்டு முனைப்போடு இரு கைகளையும் தலை மேல் கூப்பிய வண்ணம் 'கேசவனைக் காட்டிலும் மேலான தெய்வம் இல்லை சத்தியம், சத்தியம், சத்தியம்' என்றார்.

இவ்வாறு உரக்கக் கூறியதும் வியாசரின் கூம்பிய கரங்கள் தூக்கியபடியே நின்றுவிட்டன. சிவாபராதம் செய்த வியாசன்மீது சினங்கொண்ட நந்தியம் பெருமான் தமது வேத்திரப்படையால் அவருடைய கைகளைத் துண்டித்துவிட்டார். பலர் அறிய அவரை அங்கேயே இருக்கச் சபித்தார்.

வியாசரின் கூற்றைக் கேட்ட நாராயணன் ஓடோடியும் வந்து 'வியாசனே, நீ கெட்டது மல்லாமல் என்னையு மன்றோ கெடுத்தாய்; சத்தியமாகச் சொல்கின்றேன்; 'சிவமே பரம் பொருள். மற்றுள்ள பிரமா விஷ்ணு தேவர்கள் யாவரும் பசுக்களே' என்று சொல்லிவிட்டு மறைந்தார்.

வியாசர் ஆணவம் அழிந்து இறைவனிடம் மன்னிப்புக் கோரி தான் என்றும் அப்போதிருந்த நிலையிலேயே இருக்கப் பணிக்குமாறு வேண்டினார். இறைவனும் கருணை கூர்ந்து அவ்வாறே அருள் செய்தார். பெருமானின்

முன் உள்ள கொடிமரம் இவ்வரலாற்றின் நினைவாக இன்றும் இருக்கின்றது என்று புராணம் கூறுகின்றது.

சிவாபராதம் செய்த வியாசர் காசியில் இருக்கும் தகுதியை இழந்து விட்டதால் கங்கையின் கீழ்க்கரையில் வியாசகாசி என்னுமிடத்தில் ஒரு குகையில் தங்கினார் என்றும் அவர் மீண்டும் காசிக்கு வரக்கூடாது என்ற தடையும் இருந்தது என்றும் புராணம் புகல்கிறது. இது போன்ற புராணச் செய்திகள் பல உள்ளன.

காலை 9-00 மணிக்கு வாரணாசிக்குப் போய்ச் சேர்ந்தோம். 8-30 மணிக்கே சிற்றுண்டி முடித்துக் கொண்டோம். இரயிலடியிலிருந்து காசி விசுவேசுவரரை வழிபட 2 பேர் செல்லக்கூடிய சைகிள் ரிக்ஷாவில் போனோம். ரிக்ஷாவுக்கு வாடகை ரூ. 1-50. நாங்கள் 50 பேர் 'இராம் குமார்ஜி' தங்குமிடத்தில் தங்கினோம். எங்களுக்கு வழி நடத்த 'வழி காட்டி' இல்லை. மேனேஜ்மெண்டார் மீது குறையாக இருந்தது. அறையில் சாமான்களை வைத்து விட்டு இராம் குமார்ஜி அலுவலகத்துக்குப் போனோம்.

காசியில் செய்ய வேண்டிய சடங்குகளும் அறங்களும் பல உள்ளன. அவற்றை இராம்குமார்ஜி குழுவினர் செய்து வைக்கின்றனர். அவர்கள் தாங்கள் தங்குமிடத்தில் தங்குவதற்கு கட்டணம் வாங்குவதில்லை. ஆனால் தங்குவோர் ஒவ்வொருவரும் கட்டணம் ரூ. 7. 75 செலுத்தி மணிகர்ணிகா கட்டத்தில் சங்கல்பம் செய்து கொள்ள வேண்டும். நாங்கள் அலுவலகம் சென்றபோது ராம்குமார்ஜி நாங்கள் செய்து கொள்ளக்கூடிய சடங்குகள் தானங்கள் பற்றிய விளக்கங்களைச் செய்தார். ஆயிரக் கணக்கில் செய்யக்கூடிய தானங்கள் சடங்குகள் பல உள்ளன. பசுவை முன்னால் நிற்கவைத்துப் பசுதானம் செய்தால் அதற்குக் கட்டணம் ரூ. 101. பசு தானம் என்று சொல்லி (வாயால்) தானம் கொடுத்தால் அதற்கு ரூ. 51. அதையே பத்து ரூபாயிலும் செய்யலாம். அன்னதானம்

செய்ய ஒரு நபருக்கு ரூ. 6-00 கட்டணம். இது வாயால் சொல்லிப் பணம் பெறுவதே ஒழிய உண்மையில் யாருக்கும் அன்னம் அளிப்பதில்லை. பெயரளவில் நடைபெறும் தானங்கள் பல உள்ளன. பிராமணர்களுக்கு பணம் கொடுத்து விட்டுத் தானம் செய்ததாக நிறைவு கொள்ள வேண்டியதே. திரு. B. S. பெருமாள் செட்டியார் ரூ. 250-ல் பலவித தானங்களுக்குப் பதிவு செய்து கொண்டார். சிலர் சுமங்கலி பூஜைக்குப் பதிவு செய்து கொண்டனர். இதற்குக் கட்டணம் ரூ. 16-00. மற்றுள்ள நாங்கள் சங்கல்பம் செய்து கொண்டோம்.

பின்னர், ஞானிகளும் முனிவர்களும் சித்தர்களும் முழுகிப் புனிதமுற்ற கங்கையில் நாங்களும் புனித நீராடிப் புனிதர் விசுவேசுவரரை வழிபட ஆலயத்துக்குப் போனோம். கோயிலுக்குப் போகும் வழியிலுள்ள தெருக்கள் எல்லாம் மிகவும் குறுகலான சந்துகளாயுள்ளன. தெருவின் இரு புறமும் உயர்ந்த மாடிகள். அதனால் அத்தெருக்கள் சூரிய ஒளியையே கண்டதில்லை. அவை குப்பையும் கூளங்களும் திரம்பி அசுத்தமாயிருந்தன. தெருக்களில் எங்குப் பார்த்தாலும் பசுக்களின் நடமாட்டம் இருந்தன. மக்களும் அழுக்கு உடையுடன் இருந்தனர். மக்களிடமும் தெருக்களிலும் சுத்தம் அறவே இல்லை.

இக்குறுகிய சந்துகளின் வழியே சென்று விசுவேசுவரர் ஆலயத்தை அடைந்தோம். கோயில் முழுதும் நீரால் நனைந்திருந்தது. பளிங்குக்கல் தரை. விழிப்புடன் கோயிலுக்குள் சென்றோம். முதலில் நந்தியெம்பெருமானை வணங்கி விட்டு விசுவேசுவரர் சன்னதிக்குள் போனோம். 15 அடி சதுரமான ஓர் அறையில், ஈசான மூலையில், வெள்ளித்தகடு பதித்த 2 அடி சதுரத் தொட்டியில், பெருமான் சிவலிங்க மூர்த்தமாய் எழுந்தருளியுள்ளார். மூர்த்தி மரகத நிறத்தோடு அர்ச்சுனன் அடித்த விற் தழும்போடு விளங்கினார். சுவாமி மேற்கு நோக்கி இருந்தார். நுழைவாயிலில் பெருங் கூட்டம் திரண்டிருந்தது. இடிபாடுகளுக்கிடையே உள்ளே

போனோம். எடுத்துச் சென்றிருந்த கங்கை நீரால் அபிஷேகம் செய்து, வில்வம் பூ முதலியன தூவி அர்ச்சித்துத் தொட்டுக் கும்பிட்டு வழிபட்டோம். நிதானமாக அமைதியோடு வழிபட வழியில்லை. மற்றவர்களுக்கு இடங் கொடுக்க விரைவாகத் தொட்டுக் கும்பிட்டுவிட்டுப் போக வேண்டியிருந்தது. பின் சுவாமி சன்னிதியைச் சுற்றிப் பிராகாரத்தில் இருந்த பார்வதி, அன்னபூர்ணா, கணபதி, காலபைரவர் சன்னதிகளுக்குச் சென்று வழிபட்டுக் கொண்டு திரும்பினோம். பின் அடுத்த தெருவிலுள்ள விசாலாட்சி அம்மையின் கோயிலுக்குச் சென்று அன்னையின் அழகு கொழிக்கும் திருவுருவத்தில் ஈடுபட்டு அமைதியாக வழி பட்டோம். அன்னை மேற்கு நோக்கி எழுந்தருளியுள்ளாள். பெருமாட்டியின் கோயில் பிராகாரத்திலிருந்த மற்ற தெய்வங்களையும் வழிபட்டுக் கொண்டு 1-00 மணி சுமாருக்கு ராம்குமார்ஜி சத்திரம் சென்றடைந்தோம். நாங்கள் எதிர்பார்த்த நண்பகல் உணவு வந்து சேரவில்லை. மேனேஜ்மெண்டார் மீது வருத்தமும் சினமும் கொண்டோம். நாங்கள் 6 பேர் இரயிலடிக்குப் போய் உணவருந்தி விட்டு சத்திரத்திலிருந்த மற்றவர்களுக்கு உணவு கொடுத்தனுப்பினோம். திரு. முதலியாரிடம் ஒரு வழிகாட்டியை எப்போதும் எங்களுடன் இருக்கச் செய்யு மாறு வேண்டினோம். அவரும் ஏற்றுக்கொண்டார். என்றாலும் அது நடைமுறைக்கு வரவில்லை.

பிற்பகல் பலர் கடைவீதிக்குப் போய் காசிப்புடவை களையும், காசிச் செம்புகளையும் வாங்கி வந்தனர். இரவு 10-00 மணிக்குச் சிற்றுண்டி அருந்திவிட்டுப் படுத்தோம்.

## வாரணாசி 2ஆம் நாள்

5-5-78 வெள்ளி 2ஆம் நாள் அதிகாலை 5-00 மணிக்கே எழுந்து இராம்குமார்ஜி அலுவலகத்துக்கு அநுஷ்டானம், தானம் முதலியவற்றைச் செய்யப் போனோம்.

5-00 மணிக்கு விடிந்து விட்டது. காபி பருகிவிட்டுப் படகில் மணிகர்ணிகா கட்டத்துக்குப் போனோம். படகுக்குக் கட்டணம் 0-25 பைசா. மணிகர்ணிகா குளக்கரையின் மீதுள்ள மண்டபத்தில் அநுஷ்டானம் செய்தோம்.

முதலில் கங்கையில் குளித்தோம். ஈர உடையுடனேயே அமர்ந்து அநுஷ்டானம் செய்தோம். சுமார் 100 பேர் ஏக காலத்தில் அமர்ந்தோம். புரோகிதர் ஒருவரே இவ்வளவு பேருக்கும் சங்கல்பத்தைச் செய்து வைத்தார். சுமார் 45 நிமிடங்கள் இந்நிகழ்ச்சி நடந்தது. இதற்குக் கட்டணம் நபர் ஒன்றுக்கு ரூ. 7-75.

அநுஷ்டானம், வடமொழி மந்திரங்கள் சொல்லி நடந்தது. மந்திரப் பொருள் வருமாறு:

"திருமாலின் உந்திக் கமலத்திலிருந்து பிரமா தோன்றினார். இவர் உலகைப் படைத்தார். இந்த உலகத்தில் இந்த உடம்பைப் பெற்ற நாங்கள் ஐந்து பொறிகளாலும் புலன்களாலும், மனத்தாலும் வாக்காலும் காயத்தாலும் செய்த பாவங்களைப் போக்கிக் கொள்ள நவ நதிகளில் ஸ்நானம் செய்கிறோம். காசியில் கங்கையில் மணிகர்ணிகா கட்டத்தில் குளிக்கிறோம். எல்லா தெய்வங்களும் கூடி இருந்து எங்கள் பாவங்கள் நீங்க, உதவி அருளுமாறு வேண்டுகின்றோம்" என்பதாகும்.

இவ்வாறு சங்கல்பம் செய்து முடித்துக் கொண்டு மணிகர்ணிகா குளத்தில் முழுகினோம். பின் மறுபடியும் கங்கையில் குளித்துவிட்டு மாற்றுடைகள் அணிந்து கொண்டோம். களைந்த ஆடைகளை அங்கேயே விட்டு விட்டோம். இது முறையாகச் செய்யப்படுகின்றது. இது தொகுத்த பாவமூட்டையை விட்டுவிட்டதாகப் பொருள் போலும்.

அங்கிருந்து படகேறி விசுவேசுவரர் ஆலயத்துக்குப் போனோம். வழியில் அரிச்சந்திரா கட்டத்தைக் கடந்தோம். அங்குப் பிணங்கள் எரிந்து கொண்டிருந்தன.

பல பிணங்கள் எரிப்பதற்காகக் கரைமீது கிடந்தன. எரிந்த பிணங்களைக் கங்கையில் தள்ளிவிடுகின்றனர். பிணங்கள் முழுவதும் எரிந்து சாம்பலாவதில்லை. அரையும் குறையுமாக எரிந்து கொண்டிருக்கும்போதே பிணங்களைத் தள்ளிவிடுகின்றனர். இப்பிணங்களில் ஒன்று கரையோரம் ஒதுக்கப்பட்டு கழுகுகள் சூழ்ந்து கொண்டு கொத்தித் தின்னக் கண்டோம்.

ஊர் சாக்கடைநீரும் இதில் கலக்கின்றது. இவ்வாறு பிணங்களும் சாக்கடைநீரும் இதில் கலந்தாலும் இந்நீர் அசுத்தமாவதில்லை. இது விஞ்ஞான முறைப்படி சோதனை செய்து கண்ட முடிவாகும். உலகில் உள்ள பேரதிசயங்களில் இதுவும் ஒன்றாகும்.

எங்கள் படகு விசாலாட்சிக் கட்டத்தை அடைந்தது. அங்கிருந்து கங்கா நீரோடு விசுவநாதர் ஆலயத்துக்குப் போனோம். வில்வமும் பூவும் வாங்கிக் கொண்டு பெருமான் சந்நிதியை அடைந்து அவன் திருமுடிமீது கங்கை நீரை ஊற்றி அபிடேகம் செய்து, வில்வமும் பூவும் அன்போடு தூவித் தலையால் பெருமானைத் தொட்டுக் கும்பிட்டு உளமார வணங்கினோம். பின் கணபதி, பார்வதி, அன்னபூர்ணா தேவி, காலபைரவர்களை வணங்கி விட்டு இராம்குமார்ஜி அலுவலகம் சென்றடைந்தோம். சிற்றுண்டி அருந்தினோம். சுமங்கலி பூஜை செய்கின்றவர்கள் ஒன்றும் அருந்தாது பூஜை நடக்கும் இடத்துக்குப் போய் பூஜையில் கலந்து கொண்டனர். மாங்கல்ய பலம் கருதி இது செய்யப்படுகின்றது. தம்பதிகளாக இருந்து செய்து கொண்டனர். பின்னர் விசாலாட்சி அன்னபூர்ணா ஆலயங்களுக்குச் சென்று வழிபட்டுக் கொண்டு இரயிலடியை அடைந்தோம். உணவுக்குப்பின் பிற்பகல் 2-30 மணிக்குத் தனி பஸ்களில் பலவேறு தலங்களை தரிசிக்கப் போனோம். முதலில் கங்கையின் அக்கரையிலிருக்கும் வியாச காசிக்குப் போனோம்.

## வியாச காசி

இங்குக் காசி மன்னரின் அரண்மனை இருக்கின்றது. இதில் காசி மன்னர்கள் பயன்படுத்திய ஆடைகள், பல்லக்குகள் ஆயுதங்கள் வைக்கப்பட்டுள்ளன. 1872 ஆம் ஆண்டில் தயாரித்த அற்புதமான தானியங்கி (Automatic) கடிகாரத்தைப் பார்த்தோம். இது 12 இராசிகளையும் சூரியன் சந்திரன் உதிக்கும் நேரங்களையும் பௌர்ணமி அமாவாசை தினங்களையும் காட்டுகின்றது. இதுவரை இது ஒரு தடவைதான் பழுது பார்க்கப்பட்டிருக்கின்றது. மின் விசிறியைப் போன்று மண்ணெண்ணெயில் ஓடும் விசிறி ஒன்றும் உளது. மிகப் பெரிய கண்ணாடிச் சரவிளக்கு ஒன்று தொங்குகின்றது. நுட்பமான வேலைப்பாடுடைய தந்தப் பொம்மைகளையும் தர்பார் மண்டபத்தையும் பார்த்துக்கொண்டு மறுபகுதியிலுள்ள அன்னபூர்ணா தேவி விசுவேசுவரரை வணங்கிவிட்டுக் காலபைரவர் கோயிலுக்குப் போனோம்.

## காலபைரவர்

இக்கோயில் மேடு பள்ளங்களோடு கூடிய மிகச்சிறிய சந்துகளுக்குள் இருக்கின்றது. காலபைரவர் காசிக்குக் காவலர். காசிக்கயிறு என்று சொல்லப்படும் கறுப்புக் கயிறு இங்குத் தயாரித்து விற்கப்படுகின்றது. காசிக்குப் போகின்றவர்கள் எல்லாரும், காலபைரவர் முன் வைத்து வழிபட்ட இக்கயிற்றைத்தான் வாங்கிப்போய் பிரசாத மாக எல்லோருக்கும் வழங்குகிறார்கள்.

கோயிலுக்குப் போன நாங்கள் காசிக்கயிற்றை வாங்கிக் கொண்டு காலபைரவர் சன்னதிக்குப் போனோம். அங்குள்ள புரோகிதரிடம் கயிற்றுக் கற்றையை அளித்தோம். அவர் அதையும் ரூ 1.00 தட்சணையையும் பெற்றுக் கொண்டு கயிற்றில் ஒன்றை எங்கள் கையில் கட்டிவிட்டு முதுகில் பலமாக ஒரு தட்டுத்தட்டி ஆசீர்வாதம் செய்து கயிற்றைத் திருப்பியளித்து அனுப்பினார்.

காலபைரவர் காசி விசுவநாதரின் அமைச்சர் என்று சொல்லப்படுகின்றது. இவருடைய அருள் இன்றி யாரும் காசிக்கு வரமுடியாது. இவர் சங்கல்பம் செய்தால் காசிக்கு வரலாம்.

காசி விசுவேசுவரர் மன்னர். காலபைரவர் அமைச்சர். அன்னை அன்னபூர்ணாதேவி அரசி என்றும் சொல்லப் படுகின்றது. இங்கிருந்து கௌடியம்மைக் கோயிலுக்குப் போனோம்.

## கௌடியம்மை

காசிக்குப் போகின்றவர்கள் இக்கோயிலுக்குப் போனால்தான் காசிப்பயணம் நிறைவு பெறுகின்றது. உயரமான இடத்தில் 8 அடி சதுரமான சின்ன அறையில் அம்மை எழுந்தருளியுள்ளார். அம்மைமீது எறிவதற்காக கௌடி விற்கப்படுகின்றது. அதை 10 பைசா கொடுத்து வாங்கிக் கொண்டு அம்மையின் சன்னிதிக்குப் போனோம். கோயிலுக்குள் ஒரு அம்மையார் அமர்ந்திருந்தார். அவர் சொற்படி நாங்கள் கௌடியை அம்மைமீது எறிந்து 'கௌடி உனக்கு; காசிக்கு வந்த பயன் எனக்கு' என்று சொல்லி வணங்கினோம். கோயிலினுள் இருந்த அம்மை யார் தட்சணை பெற்றுக் கொண்டு ஆசீர்வாதம் செய்து அனுப்பினார். பின்னர் பக்கத்திலிருந்த துர்க்கையம்மன் கோயிலுக்குப் போய் அம்மையைத் தரிசித்துக் கொண்டு துளசி மானச மந்திருக்குப் போனோம்.

## துளசி மானச மந்திர்

இது ரூபாய் 4 கோடி செலவில் கட்டப்பட்ட பளிங்கா லான கோயில். பெருஞ் செல்வர் ஒருவர் தமது பெற்றோர் களின் நினைவாக இதைக் கட்டியுள்ளார். இது இரண்டு மாடிகள் கொண்டது. கீழ்த்தளம் மிகப் பெரிய கூடம். சுற்றுச் சுவர்கள் முற்றிலும் துளசி இராமாயணம்

பொறிக்கப்பட்டுள்ளது. நடுநாயகமாய் இராமர், இலட்சுமணர், சீதை கோயில் கொண்டுள்ளனர். அச்சன்னிதியின் இருபுறங்களிலும் இராதாகிருஷ்ணரும், இலட்சுமி நாராயணரும் எழுந்தருளியுள்ளனர். பளிங்குத் திருவுருவங்கள். இந்த தெய்வக் காட்சி கண்டோர் உள்ளங்களைக் கொள்ளைக் கொண்டன. வணங்கிவிட்டு மேல் மாடிக்குப் போனோம். இங்கு மின்சாரத்தால் இயங்கும் இதிகாசக் காட்சிகள் உள்ளன. மாடிப்படி ஏறுமிடத்தில் ஒரு துறவி வடிவம், தன் கையில் உள்ள புத்தகத்தைத் தலையை ஆட்டியவாறு படித்துக் கொண்டே ஏட்டைப் புரட்டிக் கொண்டிருந்தது.

மேல் மாடியில் ஏறியவுடன் முதலில் காண்பது பக்திப் பாடல்களைப் பாடும் ஒரு பெண்ணின் வடிவம். உண்மையாகவே ஒரு பெண் அமர்ந்து பாடுவது போலவே இருந்தது. பின்னால் ஒலிபரப்பிய பாட்டின் ஒலிகளுக்கிசையப் பெண்ணின் உதடுகள் அசைந்தன.

ஒரு பெண் பசுவின் மடியில் பால் கறக்கிறாள். பால் கறப்பதைப் போன்று கைகள் அசைகின்றன. ராமனின் தாடகை வதம், வாலி வதம், இராமர் பட்டாபிஷேகம், இராமன் காட்டில் பர்ணசாலையில் இருப்பது, ஜடாயு மோட்சம், கண்ணனின் லீலைகள் நேரில் நடப்பது போன்று உருவங்கள் யாவும் அசைந்து நிகழ்ச்சிகளை விளக்கின. தேரில் பூட்டிய குதிரைகள் கால்களின் அசைப்பால் உண்மையாகவே ஓடுவன போன்று காட்சி அளித்தன. சீதையின் தீக்குளிப்புக் காட்சி உண்மையில் நிகழ்வது போன்று பிரமிப்பை ஊட்டியது. காட்சிகள் யாவும் அற்புதமாக அமைந்து நம்மை அவை நடந்த காலத்துக்கே கூட்டிச் சென்றன. இவற்றைப் பார்த்துக் கொண்டு காசி பல்கலைக்கழகத்துக்குப் போனோம்.

## காசி பல்கலைக்கழகம்

இது 1700 ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்திருக்கின்றது. நாங்கள் சென்றபோது இரவு சுமார் ஏழரை மணி. மருத்துவக் கல்லூரி, நர்ஸ் கல்லூரி, சட்டக்கல்லூரி, கலைக் கல்லூரி முதலியவற்றின் மிகப்பெரிய கட்டிடங்களைப் பஸ்ஸிலிருந்தவாறே பார்த்துக் கொண்டு சென்றோம். இந்தப் பல்கலைக்கழகத்தின் நடுவில் மாணவர்கள் வழி படுவதற்கென்று பிர்லாவால் கட்டப்பட்ட பிர்லா மந்திர் என்னும் கோயில் இருக்கின்றது. இது ரூபாய் ஐந்து கோடி செலவில் கட்டப்பட்ட இரண்டு மாடிகள் கொண்ட கோயில். முழுவதும் சலவைக் கல்லாலானது. காசி விசுவநாதரை பல்கலைக் கழகத்துக்குள்ளேயே மாணவர்கள் வழிபடுவதற் கென்றே இது கட்டப்பட்டது. இக்கோயிலில் காசி விசுவேசுவரரும், இராமன், கிருஷ்ணன், திருமாலும், அநுமனும் கோயில் கொண்டுள்ளனர். விசுவநாதர் எங்கும் நிறைந்தவரல்லவா! அதற்கேற்ப மிகப் பெரிய மண்டபத்தில் நீர் சொட்டும் பாத்திரத்தின் கீழ், பிரம்மாண்டமான சிவலிங்க மூர்த்தியாய்த் தண்ணளி பரப்பிக் கொண்டிருந்தார். கோயிலும் அதைச் சுற்றியுள்ள நிலப்பரப்பும் முழுக்க முழுக்க பளிங்காலானது. இக் கோயிலைத் தரிசித்துக் கொண்டு சங்கட விமோசன ஆஞ்சநேயர் கோயிலுக்குப் போனோம்.

## சங்கட விமோசன ஆஞ்சநேயர்

ஆஞ்சநேயர் வழிபாடு வடநாடெங்கும் சிறப்பாகவும் பரவலாகவும் நடைபெறுகின்றது. தென்னாட்டில் எவ்வாறு ஒவ்வொரு சிவன் கோயிலிலும் நடராஜப் பெருமான் எழுந் தருளியுள்ளாரோ அதைப் போல வடநாட்டில் எல்லாக் கோயில்களிலும் ஆஞ்சநேயர் கோயில் கொண்டுள்ளார். ஆஞ்சநேயர் இல்லாக் கோயிலே இல்லை என்னும்படி அவர் சர்வவியாபகமாக உள்ளார்.

சங்கட விமோசன ஆஞ்சநேயர் எல்லோராலும் பாராட்டி வழிபடப் படுகின்றார். வந்து வழிபடுவோரின் சங்கடங்களை நிச்சயமாக நீக்கும் சிறப்பு இந்த ஆஞ்ச நேயருக்கு உண்டு என்று உறுதியாக நம்புகின்றனர். நாங்களும் எங்கள் சங்கடங்களை எல்லாம் நீக்கி ஆட் கொள்ளுமாறு வேண்டி வழிபட்டோம். அங்குள்ள இராம இலட்சுமண சீதை சன்னிதிகளையும் வணங்கிவிட்டுப் புறப்பட்டோம். இப்போது மணி இரவு 8-00. அதனால் எங்கள் பயண வண்டியை அடைந்தோம். இரவு பத்தரை மணிக்கு எங்கள் வண்டி அயோத்தியை நோக்கிப் புறப்பட்டுச் சென்றது.

## அயோத்தி

சனிக்கிழமை 6-5-78 அதிகாலை 4-30 மணிக்கு அயோத்தி நகரை அடைந்தோம். இது முத்தித் தலங்கள் ஏழினுள் ஒன்று. இங்குக் காலை 5-00 மணிக்கே நன்றாக விடிந்து விடுகின்றது. சரயு நதியில் குளித்துவிட்டு, எல்லா முதன்மையான இடங்களையும் பார்த்துக் கொண்டு திரும்பி வரத் தலைக்குக் கட்டணம் ரூ 3-00 என்று பேசிக் குதிரை வண்டிகளில் ஆறு ஆறு பேர்களாகச் சென்றோம். முதலில் ஸ்நானம் செய்யச் சரயு நதிக்குப் போனோம். நதி 2-கல் (மைல்) அகலம் உடையதாய் இருக்கின்றது. இதில் 'சுவர்க்கத் துவாரம்' என்னும் துறை உளது. இராமர் பதினோராயிரம் ஆண்டுகள் நாட்டை ஆண்ட பிறகு இந்த நதியின் வழியாகத் தான் தமது தம்பியருடன் வைகுந்தம் சேர்ந்தார். நதி ஆழமில்லை. நடு ஆறுவரைப் பலர் சென்று குளித்தனர். பலர் இங்கு அநுஷ்டானம் செய்து கொண்டனர். அதற்கெனப் புரோகிதர்கள் பலர் இங்கு உள்ளனர். பின்னர் **சங்கட விமோசன ஆஞ்சநேயர்** கோயிலுக்குப் போனோம். காசியிலும் இதே போன்ற ஆலயத்துக்குப் போய் வழிபட்டோம். அந்தப் பெயரிலேயே

இந்த ஆலயமும் இருக்கின்றது. சங்கடம் நீக்குபவர் ஆஞ்சநேயரே என்பதை இங்குள்ளோர் உறுதியாக நம்பு கின்றனர். இக்கோயில் உயரமான இடத்தில் இருக் கின்றது. சுமார் 100 படிகள் வரை ஏறிப்போக வேண்டும். இக்கோயிலிலும் ஆஞ்சநேயப் பெருமானிடம் எங்கள் சங்கடங்களையெல்லாம் சொல்லி நீக்கியருளுமாறு வேண்டிப் பணிந்தோம். இங்கு இராமர் இலட்சுமணர் சீதைக்கு சன்னிதிகள் உள்ளன. அவற்றை வணங்கிவிட்டு அவற்றின்முன் உள்ள குறை போக்கும் பளிங்குக்கல் சிம்மா சனத்துக்கும் ஒரு கும்பிடு போட்டுவிட்டுக் கிளம்பி இக் கோயிலுக்குச் சிறிது தூரத்தில் உள்ள சாதுக்கள் மடத்தை அடைந்தோம்.

## சாதுக்கள் மடம்

இம்மடத்தில் நாள்தோறும் 400, 500 பேர்களுக்கு உணவு அளிக்கப்படுகின்றது. இது வடலூர் தருமச் சாலையை நினைவுபடுத்தியது. இங்குத் தமிழ் பேசும் துறவி ஒருவர் இருந்தார். அவர் எங்களிடம் தமிழில் உரை யாடினார். இது மிகவும் மகிழ்ச்சியாக இருந்தது. இந்த மடம் அமைத்து 200 ஆண்டுகள் ஆகின்றனவாம். தொடங்கிய அன்று முதல் தொடர்ந்து அன்னதானப்பணி இடையீடின்றி நடைபெற்று வருகின்றது. இம்மடத்தை ஆரம்பித்தவர் 'மணிராம் தாஸ்' என்னும் சாது ஆகும். இம்மடத்துக்குச் சொந்தமான சொத்துக்கள் இல்லை. என்றாலும் அருளுள்ளம் கொண்ட அன்பர்களின் உதவி யால் அன்னதானம் தடையின்றி நடைபெற்று வரு கின்றது. அரிசி, கோதுமை முதலிய பண்டங்கள் நன்கொடையாக வருகின்றன. தினம் காலையில் சுண்டலும் நண்பகலில் சப்பாத்தியும் சோறும் சுமார் 500 சாதுக்களுக்கு அளிக்கப்படுகின்றன. தற்போது தினமும் ஒரு மூட்டை கோதுமையும் ஒரு மூட்டை அரிசியும் செலவாகின்றது. இங்குள்ள சமையலறைத் தீயும் 200 ஆண்டுகளாக

அணையாது எரிந்து வருகின்றது. இங்கு வரும் அன்பர்கள் நடைபெறும் அன்னதானச் சிறப்பை உன்னித் தாமாகவே அன்போடு நன்கொடைகளை வாரி வழங்குகின்றனர். இவ்வருட் பணியை அருளாளர் ஒருவர் அருள் நோக்கோடு துவக்கினார். ஆகையால் இத்தெய்வப் பணி தடைபடாமல் தொடர்ந்து நடைபெற்று வருகின்றது. தென்னாட்டில் வள்ளற்பெருமான் தருமச்சாலையைத் துவக்கி 107 ஆண்டுகள் ஆயின. ஆனால் இதற்கு ஒரு நூற்றாண்டுக்கு முன்னமேயே ஒரு வள்ளல் வடக்கே தோன்றி ஒரு தருமச் சாலையைத் தோற்றுவித்தார் என்பதைஅறிய எவ்வளவோ மகிழ்ச்சியாக இருந்தது. தடைபடா அறமும் அணையாத தீயும் ஈரிடத்தும் ஒன்றுபோல் இருப்பதை அறிந்தும் மகிழ்ந்தோம். எங்களாலானதை நன்கொடையாக அளித்து விட்டுப் புறப்பட்டோம்.

இந்த மடத்துக்கு எதிரில் காசியில் உள்ளது போன்ற துளசி மானச மந்திர் கட்டப்பட்டு வருகின்றது. இதைப் பார்த்துக் கொண்டு 'கனக பவனம்' என்னும் கோயிலுக்குப் போனோம்.

### கனகபவனம்

இக்கோயிலைக் கட்டியவர் ராணா பிரதாப்சிங். இதில் உள்ள ராம லட்சுமண சீதை பரத சத்துருக்கணர் திருவுருவங்கள் தங்கச் சிலைகளாகும். கோயிலின் மேல்தளம் தங்கத் தகடுகளால் வேயப்பட்டுள்ளது. கோயிலின் வாயிலில் கண்ணாடி அடைப்புக்குள் தங்கத்தாலான தசாவதாரக் காட்சிகள் உள்ளன. கோயில் வழிபாட்டை முடித்துக் கொண்டு கோயிலை வலம் வந்தோம். கோயிலைச் சுற்றியுள்ள பரந்த இடமும் பளிங்குத் தரையாயுளது. கோயில் மிக அழகாகவும் தூய்மையாகவும் இருக்கின்றது. பின்னர் தசரதர் பட்டாபிஷேகம், இராமர் பட்டாபிஷேகம் நடந்த மண்டபங்களைப் போய்ப் பார்த்.

தோம். இதிகாசத்தில் வரும் பட்டாபிஷேகம் மண்டபங்களுக்கும் இவற்றுக்கும் ஒரு சம்மந்தமும் இல்லை. இவற்றை வெறும் நினைவுச் சின்னங்களாகத்தான் கொள்ள வேண்டும். பிறகு இராமர் பிறந்த இடத்துக்குப் போனோம்.

ஔரங்கசீப் காலத்தில் முஸ்லிம்கள் இந்த இடத்தில் ஒரு மசூதியைக் கட்டிவிட்டனர். இது தங்கள் இடம் என்று இந்துக்கள் சொல்ல, முஸ்லிம்கள் கோரிக்கையைக் காட்டி அது தங்கள் இடம் என்று சொல்ல இருவருக்கும் வழக்கு ஏற்பட்டு 1949 ஆம் ஆண்டிலிருந்து நீதிமன்றத்தில் வழக்கு நடந்து வருகின்றது. அதனால் இந்த இடம் பூட்டப்பட்டுப் போலீஸ் பந்தோபஸ்தில் இருக்கின்றது. இதனருகில் இந்துக்கள் அகண்ட பஜனை நடத்தி வருகின்றனர்.

பின்னர் சீதா குகைக்குப் போனோம். சீதை சமயல் செய்த அடுப்பும், சப்பாத்தி செய்த கல்லும் இவைதான் என்ற காட்டினர். சக்கவர்த்தித் திருமகனின் மனைவி, ஜனக மகாராஜாவின் மகள் பாதாளக் குகையில் சப்பாத்தி செய்ய இராமபிரான் உண்டார் என்று நம்பவேண்டுமாம். இதிகாச நிகழ்ச்சிகளை ஆங்காங்கே பொம்மைகளை வைத்துக் காட்டுகின்றனர். அவற்றை நினைவுச் சின்னங்களாகக் கொள்ள முடியுமே ஒழிய உண்மை நிகழ்ச்சிகள் நடந்த இடம் என்று கொள்ள முடியவில்லை.

பின்னர் இரயில் நிலையத்துக்குப் போய் எங்கள் பெட்டியில் உணவருந்தினோம்.

## அலகாபாத்

7-5-78 ஞாயிற்றுக்கிழமை காலை 5-00 மணிக்கு வண்டி பிரயாகை ஸ்டேஷனை அடைந்தது. 7-30 மணிக்குக் காபி மட்டும் பருகிவிட்டுப் பஸ்ஸில் திரிவேணி சங்கமத்துக்குப்

போனோம். மூன்று நதிகள் பின்னிக் கலப்பதால் இது திரிவேணி என்று அழைக்கப்படுகிறது.

இதன் சிறப்பைக் குமரகுருபரர் ஒரு பாடலில் திருவாரூரின் மாடங்களின் சிறப்பை வருணிக்கும் இடத்தில் வருணித்திருக்கின்றார்.

திரிவேணி சங்கமத்தில் கங்கை, யமுனை, சரஸ்வதி என்னும் மூன்று நதிகள் கலக்கின்றன. கங்கை வெண்மை நிறம், யமுனை கறுப்பு நிறம், சரஸ்வதி என்னும் மூன்று நதிகள் கலக்குமிடம் போனோம். கரு நிறத்தோடு யமுனையும் வெள்ளை நிறத்தோடு கங்கையும் ஒன்றோடொன்று கலக்குமிடம் கோடு போட்டதுபோல் தெரிகின்றது. சரஸ்வதி அக முகமாக இங்குக் கலக்கின்றதாம். இதைக்கடந்து கங்கைக் கரையில் போய் இறங்கினோம். இந்த இடத்தில் பிரம தேவன் 10 அசுவமேத யாகங்கள் செய்ததாகப் புராணம் கூறுகிறது. சிறந்த யாகங்கள் நடந்த இடமாதலால் இது பிரயாகை எனப்பட்டது. உலகிலுள்ள தீர்த்தங்களுக்கெல்லாம் இது அரசன் என்றும் சொல்லப்படுகின்றது. அதனால் இது தீர்த்த விசேடம் உடையது. பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை இங்கு நடைபெறும் கும்பமேளா மிகவும் விசேஷமானது. இந்தியநாடு முழுவதிலும் உள்ள ரிஷிகள் முனிவர்கள், ஞானிகள், சித்தர்கள் முதலியோர் ஒன்றுகூடி அன்று அங்குக் குளிக்கின்றனர். அதனாலும் இது பெரிதும் சிறப்புப் பெறுகின்றது.

இவ்வாறு பலவகையாலும் சிறப்புற்றுள்ள இப்புனித நீரில் குளித்தோம். உடலும் உள்ளமும் குளிர்ந்தது. உடற் தூய்மையோடு உள்ளமும் தூய்மை உற்றது.

பிண்டம் வைப்போர் குளித்துவிட்டு ஈர உடையுடனேயே அமர்ந்து அநுஷ்டானத்துக்குபின் இறந்த முன்னோர்கள் 21 தலை முறையினருக்குப் பிண்டம் வைத்தனர். எல்லாரையும் ஒரு சேர உட்கார வைத்துப் புரோகிதர்

ஒருவரே சடங்கைச் செய்து வைத்தார். இதற்குக் கட்டணம் தலைக்கு ரூ. 5-00.

இதற்குப் பின் வேணிதானம் நடந்தது. இதற்குக் கட்டணம் ரூ. 16-00 சடங்கைச் செய்து கொள்ளும் தம்பதிகள் புத்தாடைகள் அணிந்துகொண்டு அமர்ந்தனர். புரோகிதர் பாண்டு வாத்தியம் முழங்கத் திருமணச் சடங்குகளை நடத்தி வைத்தார். பின்னர் கணவன், மனைவியின் தலைமுடியைக் கோதிப் பின்னலிட்டு அதன் நுனியைக் கத்தரித்து மனைவியின் கையில் கொடுத்து அதற்கு மஞ்சள் குங்குமம் இட்டார். பின் இருவரும் சேர்ந்து ஆற்றின் நடுவில் போய் அம்முடியைத் தண்ணீரில் மூழ்க விட்டனர். அது மூழ்கிவிட்டது. சரஸ்வதி அதை வாங்கிக் கொள்வதாக ஐதிகம். பின்னர் தம்பதியர் இருவரும் குளித்துவிட்டுக் கரையேறி மாற்றுடை அணிந்து கொண்டு களைந்த புத்தாடைகளைப் புரோகிதருக்குத் தானமாக அளித்தனர். அதோடு அன்னதானத்திற் கென்று பணமும் அளித்தனர்.

திரிவேணியில் வேணிதானம் செய்து கொள்ளும் தம்பதிகள் அடுத்த பிறவியிலும் கணவன் மனைவியராக இணைவார்களாம்.

பிறகு, படகில் அமர்ந்து சிற்றுண்டியருந்திய பின் யமுனைக் கரையை அடைந்தோம். அங்குள்ள ஆஞ்சநேயர் கோயிலை வணங்கிவிட்டுப் பஸ்ஸில் 'ஆனந்தபவனம்' போனோம்.

## ஆனந்த பவனம்

ஜவஹர்லால் நேருவை உலகுக்கு அளித்த மோதிலால் நேரு வாழ்ந்த இடம் ஆனந்த பவனம் ஆகும். இது இப்போது தேசியச் சின்னமாக இருக்கின்றது. ஜவஹர்லால் நேருவின் வாழ்க்கை இங்குதான் பின்னி உருப்பெற்றது. நேரு குடும்பத்தின் போட்டோப் படங்கள் யாவும் இங்குத்

தொகுத்து வைக்கப்பட்டுள்ளன. ஜவஹரின் படுக்கை அறை, அலுவலகம், படித்த நூல்கள், காங்கிரஸ் காரியக் கமிட்டி கூடிய அறை முதலியவற்றைப் பார்த்தோம். இது இந்நாட்டின் விடுதலைப் போரில் அளவற்ற தியாகங்களைச் செய்த வீர குடும்பத்தை நினைவு படுத்திக்கொண்டிருக் கின்றது. சுகபோகங்களில் மூழ்கியிருந்த மோதிலால் நேரு வும் செல்வச் சீமானுக்குப் பிறந்து செல்வக் கொழிப்பில் வளர்ந்த ஜவஹர்லால் நேருவும் அவர் குடும்பமும் நாட்டின் விடுதலைக்காகச் செய்த தியாகங்கள் கொஞ்ச நஞ்சமா? சுகபோகங்களைத் துறந்து சிறைபட்டு அடி பட்டு உதைபட்டு அடைந்த துன்பங்களுக்கு அளவேது! தியாகச் சின்னமாக விளங்கிய இது போன்ற தியாகக் குடும்பத்தை உலகில் வேறெங்கிலும் காண முடியுமா? நேரு குடும்பத்தின் பெருமை ஜவஹர்லால் நேருவை இந் நாட்டுக்கு அளித்த ஒன்றாலே வானுற ஓங்கி வளர்ந்து விட்டது. நேரு குடும்பம் இந்நாட்டுக்குச் செய்த சேவை களை நினைவுகூர்ந்தோம். இது தேசியச்சின்னம் மாத்திரம் அல்ல. தியாகத்தின் சின்னமாகவும் விளங்குகின்றது.

இதைப் பார்த்துக் கொண்டு அலகாபாத் இரயில் நிலையத்தில் எங்கள் வண்டிக்குப் போனோம் இரவு 11-00 மணிக்குத்தான் எங்கள் வண்டி லட்சுமணபுரி நோக்கிப் போயிற்று.

## இலட்சுமணபுரி

8-5-78 திங்கட்கிழமை இலட்சுமணபுரி சேர்ந்தோம். இது மிகவும் அழகான நகரம். இது இராமன் தம்பி இலட்சுமணனால் நிர்மாணிக்கப்பட்டது. பின்னர் முகலாய மன்னர்களின் கைக்கு வந்தது. அவர்களுடைய தலை நகராக இருந்திருக்கின்றது. அவர்கள் தங்கள் காலத்தில்

மிகப்பெரிய மாளிகைகளையும் மசூதிகளையும் கட்டினார்கள்.

காலை 9-00 மணிக்கு இந்நகரை அடைந்தோம். இங்குக் கோமதி ஆறு ஓடுகின்றது.

## ஆஞ்சநேயர் கோயில்

ஏழு ஏழு பேராக 'டெம்போ' என்னும் காரில் போனோம். தலைக்கு வாடகை ரூ 5. முதலில் ஆஞ்சநேயர் கோயிலுக்குப் போனோம். இது 10 அடி அளவுள்ள சின்ன மண்டபத்தில் அமைந்திருக்கின்றது. தென்னாட்டில் மாரியம்மன் கோயில்கள் இருப்பதைப் போன்று இங்கு ஆஞ்சநேயர் கோயில்கள் உள்ளன. பலசாலியான ஆஞ்சநேயரை மிகவும் போற்றி வழிபடுகின்றனர். அதனாலேயே வடநாட்டினர் பலசாலிகளாகவும் போர்க்குணம் உடையவர்களாகவும் உள்ளனர் போலும். ஆஞ்சநேயரை வணங்கிவிட்டு நவாப் அசிபுதுல்லாவின் மனைவியர் மூன்று பேரின் சமாதிகள் உள்ள மிகப்பெரிய மாளிகையைப் பார்க்கப் போனோம்.

உள் மண்டபத்தின் மேல் விதானம் தங்கத்தால் ஆனது. 100 கிலோ தங்கத்தில் அமைந்தது. கலைத்திறமை பெற்று மிக அழகாக இருக்கின்றது. முன்னால் இதில் இரத்தினங்கள் பதிக்கப்பட்டிருந்தனவாம். இப்போது இரத்தினங்கள் இல்லை. பதித்துள்ள தங்கத்தைப் பேர்த்தெடுத்தால் மேல் விதானம் விழுந்துவிடும் என்பதால் இரத்தினக்கற்களைப் பெயர்த்தெடுத்தவர்கள் தங்கத்தை விட்டுவிட்டார்கள் போலும். இங்கு வெள்ளி மேடை ஒன்றிருக்கின்றது. இதில் அமர்ந்து கொண்டு திருக்குர்ரானைப் படிப்பார்கள். இதற்குப் பக்கத்தில் மெக்காவில் உள்ளதைப் போன்ற தொழுகை இடத்தைத் தந்தத்தாலும் சந்தன மரத்தாலும் செய்து வைத்துள்ளனர். மெக்காவுக்கு போக வசதி இல்லாதவர்கள் இங்கு வந்து தொழுகை நடத்துகின்றனர்.

இவற்றைப் பார்த்துக் கொண்டு இதற்குப் பக்கத்தில் உள்ள 'படா இமாம் பானா'வுக்குப் போனோம்.

## படா இமாம் பானா

இது நவாப் அசப்புடௌலா கட்டிய மிகப்பெரிய மூன்றடுக்கு மாளிகை. இது மக்களின் துன்பத்தைத் துடைக்கும் தொண்டாகக் கட்டப்பட்டது. 1784ஆம் ஆண்டில் மிகக் கடுமையான பஞ்சம் உண்டாயிற்று. பஞ்சத்தால் வாடிய மக்களின் துன்பத்தைத் துடைக்க நவாப் இக்கட்டிடப் பணியைத் துவக்கி ஒரு கோடி ரூபாய்க்கு மேல் செலவழித்தானாம். இதில் தூண்களே இல்லாத வளைந்த மேற்கூரை உள்ள மிகப்பெரிய மண்டபம் இருக்கின்றது. இதன் நீளம் 163 அடி. அகலம் 53 அடி. உயரம் 49½ அடி. சுவரின் கனம் 16 அடி. இது போன்ற மண்டபம் உலகிலேயே இது ஒன்றுதான் என்று சொல்லப்படுகின்றது.

இம்மண்டபத்தை சுற்றிலும் மேல் பகுதியில் காலரி ஒன்று இருக்கின்றது. இந்த காலரியின் ஒரு முனையில் நாங்கள் நின்றோம். 163 அடி தூரத்திலிருக்கும் காலரியின் மறுமுனையில் இருந்து ஒருவர் ஒரு நெருப்புக் குச்சியைக் கிழித்தார். குச்சி கிழித்த சிறு சப்தத்தை 163 அடி தூரத்தி லிருந்த நாங்கள் தெளிவாகக் கேட்டோம். இதன் மேல் மாடிகள் இரண்டிலும் 1000 வாசல்கள் அல்லது இரகசிய தடங்கள் என்று சொல்லப்படும் குறுகிய தடங்கள் உள்ளன (காலரி). இப்பாதைகள் முழுவதும் காற்றும் வெளிச்சமும் உடையனவாக உள்ளன. இவற்றினூடே வழிகாட்டியின் உதவியின்றிப் போய்வர முடியாது. இப்பாதையின் ஒரு முனையிலிருந்து மெதுவாகப் பேசினாலும் 60, 70 அடி தூரத்தில் மறுமுனையில் நிற்பவர்கள் மிகத் தெளிவாக அப்பேச்சை கேட்க முடிந்தது. இங்கு எவரும் இரகசியமே பேசமுடியாது.

மூன்றாவது மாடியிலுள்ள காவல் கூண்டுகளிலிருந்து மாளிகையின் வழியாக மாளிகையை நோக்கி வருவோரையும், போவோரையும் பார்க்கலாம். அங்கிருந்து பார்த்தால் இலட்சுமணபுரி நகர் முழுவதும் தெரிகின்றது. இதன் பிறகு சோடா இமாம் பானா பார்க்கப் போனோம்.

## சோடா இமாம் பானா

இது 1839ஆம் ஆண்டில் முகம்மது ஷா என்பவரால் கட்டப்பட்டது. மிக அழகான சின்னமாளிகை. இதில் அமர்ந்து குர்ரான் படிக்கும் வெள்ளி சிம்மாதனம் ஒன்று இருக்கின்றது. சந்தன மரத்தாலும் தந்தத்தாலும் செய்யப்பட்ட, மக்கா மதினாவில் உள்ள மசூதிகளின் மாதிரி உருவங்கள் உள்ளன. ஹசன் உசன் என்பவர்களின் நினைவாகக் காகிதத்தாலான மசூதி ஒன்றும் இருக்கின்றது. ஜப்பான், சீனா நாடுகளிலிருந்து வரவழைக்கப்பட்ட மிகப் பெரிய அழகான கண்ணாடி சரவிளக்கு தொங்கவிடப் பட்டுள்ளது. மெக்காவில் முஸ்லிம்கள் தொழும் புனிதச் சுவரின் மாதிரி (Model) ஒன்று வெள்ளியில் செய்து வைத்துள்ளனர். ஜெர்மன் நாட்டில் செய்த அற்புதமான நிற்கும் சரவிளக்குகள் இரண்டு உள்ளன. இவற்றின் கம்பங்களைத் தட்டினால் சப்த சுவரங்கள் ஒலிக்கின்றன. இந்த மாளிகையின் நடுப்பகுதியில் மன்னனின் சமாதியும் அவன் தாயாரின் சமாதியும் உள்ளன. மாளிகையின் வட பகுதியில் அவர்கள் வழிபட்ட அழகான மசூதியும் ஒன்று உள்ளது. ஓர் இடத்தில் மன்னரின் கிரீடமும் சின்னங்களும் வைக்கப்பட்டுள்ளன. மொகரம் விழாவில் இம்மாளிகை முழுதும் விளக்கீடு செய்யப்படும். அப்போது இது இந்திர சபைபோல் கண்கொள்ளாக் காட்சியாக ஜொலிக்கும். இதைப் பராமரிக்கவும் கல்விக்காகவும் அறங்களுக்காகவும் மன்னன் 36 இலட்சம் அறக்கட்டளை செய்து வைத்துள்ளான்.

இங்கு வெய்யிலின் கொடுமை மிக அதிகம். நீர் பருகி மாளவில்லை. மாலை 4-30 மணிக்கு எங்கள் வண்டி இலட்சுமணபுரி விட்டு அரித்துவாரம் நோக்கிப் போயிற்று.

## அரித்துவாரம்

புதன்கிழமை 10-5-78 காலையில் சிற்றுண்டி அருந்தி விட்டுக் கங்கையில் குளிக்கவும் தீர்த்தம் எடுத்துக் கொள்ளவும் குதிரை வண்டிகளில் கங்கை ஆற்றுக்குப் போனோம். கங்கை படுவேகமாக ஓடியது. கரையோரம் 3, 4 படிகள்தான் இறங்கிக் குளிக்கலாம். பாதுகாப்புக்காக ஆற்றின் கரையோரம் 3 அடி தூரத்தில் நதி நெடுகிலும் இரும்புச் சங்கிலி அமைத்துள்ளனர். அதைப் பிடித்துக் கொண்டாலன்றி பாதுகாப்பாகக் குளிக்கமுடியாது. நீரின் வேகம் மிகுதியாக இருந்தது. குளித்து விட்டுப் பிளாஸ்டிக் கேன்களிலும் குடங்களிலும் மற்ற பாத்திரங் களிலும் கங்கை நீரை நிரப்பி எடுத்துக் கொண்டோம். பல வகையான தீர்த்தச் செம்புகளை ரூ. 1-50, 3-00, 5-00, 10-00 விலைகளில் வாங்கிக் கொண்டோம். பத்ரியில் குளிர் அதிகமாக இருக்கும் ஆகையால் அங்குப் பயன்படுத்திக் கொள்ளக் கையுறைகள் தலைக்குல்லாய் முதலியன வாங்கிக் கொண்டோம்.

சப்தரிஷி கோயிலுக்குப் போனோம். இங்குச் சரஸ்வதி கண்ணாடி அறையில் கொலுவீற்றிருக்கிறாள். அறைக்குள் இடமும் வலமும் நோக்கினால் அம்மனின் திருவுருவம் இருபுறமும் நூற்றுக்கணக்கில் தெரிகின்றன. அதற்கு அடுத்து கங்கேஸ்வர மகாதேவனும் அவரைச் சுற்றிச் சப்தரிஷிகளும் உள்ளனர். இவர்கள் 1. விசுவாமித்திரர், 2. ஜமத்கனி, 3. பரத்துவாஜர், 4. கௌதமர், 5 அத்திரி, 6. வசிட்டர், 7. கஸ்யபர் ஆவர். இக்கோயிலுக்கு முன்னால் குண்டம் ஒன்றிருக்கின்றது. இக்குண்டத்தில் தீ வளர்க்கப் பட்டு இது 20 ஆண்டுகளாக அணையாமல் எரிந்து

கொண்டிருக்கின்றது. இவ்வேள்வி 108 ஆண்டுகளுக்குத் தொடர்ந்து நடக்கும் என்றனர்.

### பரமார்த்த ஆசிரமம்

அடுத்து, பரமார்த்த ஆசிரமம் போனோம். இதன் நுழைவாயிலில் கஜேந்திர மோட்சம் சிலைகளாக உள்ளன. யானையின் காலைப்பற்றியுள்ள முதலையின் கழுத்தைத் திருமால் ஏவிய சக்கரம் அறுக்கின்றது. காட்சி அற்புதமாக அமைந்துள்ளது. அதற்குப் பக்கத்தில் ஓர் அறையில் சகஸ்ரலிங்கம் உளது. 1100 லிங்கங்கள் கொண்ட பெரிய சிவலிங்கம் இது. வணங்கி விட்டு அடுத்துள்ள கண்ணாடி அறையில் இருந்த கங்காமாதா, சந்தோஷிமா, மகிஷாசுரமர்த்தினி திருமகள்களை தரிசித்துக்கொண்டு உள்ளே சென்றோம். இந்த ஆசிரமத்துக்கு மூலவராக உள்ள ராதாகிருஷ்ணன், ஜானகிராமன் மூர்த்திகளை வணங்கிப் போனோம். மூர்த்திகள் பளிங்கு உருவங்கள். இவற்றை அலங்கரிக்கும் கிரீடமும், நகைகளும் வெள்ளைக் கற்களாலானவை. ஆடைகளும் வெள்ளையே. திருவுருவங்களும் வெள்ளை. இவ்வாறு வெள்ளை வெளேறென்று திகழும் இந்த ஆசிரமும் தெய்வப் படிவங்களும் கண் கொள்ளாக் காட்சியாகத் திகழ்ந்தது. தூய்மைக்கு நிறம் வெள்ளை. தெய்வ வடிவம் தூய்மை. இவ்வாறு தூய்மையே வடிவாய்த் தெய்வ சான்னித்தியம் பெற்ற அந்த ஆசிரமத்தை மன நிறைவோடு தரிசித்துக்கொண்டு பாவன்தாம் என்னும் அநுமார் கோயிலுக்குப் போனோம்.

**பாவன்தாம் :** இது அநுமார் கோயில். மூர்த்தி மிகப் பெரியது. அற்புதமான திருவுருவம். வணங்கி விட்டு உள்ளே போனோம். உள் சுவர்களில் இராமலிங்கேஸ்வரர், பகீரதன் தவம், துர்க்கை, பார்த்தசாரதி ஆகியவை அலங்கரிக்கப் பார்த்தோம். இக்காட்சிகளைச் சின்னச் சின்ன கண்ணாடித் துண்டுகளைக் கொண்டு அமைத்திருக்கின்றனர். இவற்றின் எழில் கொழிக்கும் அழகைச்

சொல்லால் சொல்லி முடியாது. பார்க்கப் பார்க்கப் பார்த்துக் கொண்டே இருக்கலாம் போல் இருந்தது. வைத்த கண் வாங்காமல் பார்த்தோம். இவற்றை படம் பிடித்தோம். மேலும் இதன் மேற் கூரையும் தூண்களும் சுவர்களும் கண்ணாடி மயமாய்ச் சித்திர வேலைப்பாடு களுடன் விளங்கின. இவற்றைக் காமராவில் படம் எடுத்துக் கொண்டோம். அதன் மேற்பார்வையாளரையும் படம் பிடித்தோம். அதைக் கண்டு அவரடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை.

இந்த ஆசிரமத்துக்கு அன்பளிப்புகள் உலக முற்றிலு மிருந்து வருகின்றன. இங்கிருந்து 7-15 மணிக்குக் கங்கா பூஜை பார்க்கக் கங்கா நதிக்குப் போனோம்.

கங்கா பூஜை நடக்கும் இடத்தைச் சுற்றிக் கங்கை யானது சூழ்ந்து ஓடுகின்றது. இந்த இடம் படகு வடிவில் இருக்கின்றது. கரையிலிருந்து அந்த இடத்தை அடைய அதன் இரு முனைகளில் பாலங்கள் உள்ளன. இந்த இடத்தின் மத்தியில் கடிகாரத் தூபி ஒன்று இருக்கின்றது.

இதன் தெற்கு முனையில் பிரம்மா, விஷ்ணு, சிவம், கங்கா, துர்க்கா கோயில்கள் உள்ளன. இந்த இடம் பிரம்ம குண்டம் என்று அழைக்கப்படுகின்றது. கங்கையில் வேறெங்கும் குளிப்பதிலும் இங்குக் குளிப்பது சிறப்பு. கங்கா தீர்த்தம் எடுப்பதும் இங்குதான். இங்கு குளிப் பவர்கள் வானுலகம் சேர்வர் என்று கருதப்படுகின்றது. அதற்குக் காரணம் கங்கையின் புனிதத் தன்மை மட்டு மன்று. அதற்கு வேறொரு காரணமும் உண்டு.

ஒரு சமயம் தேவர்களும் அசுரர்களும் சேர்ந்து சாகா நிலையைக் கொடுக்கும் அமிர்தத்தைப் பெறப் பார்க் கடலைக் கடைந்தனர். அமிர்தம் வந்தது. அதைப் பங்கிட்டுக் கொள்வதில் தேவாசுரர்களுக்கு இடையே பூசல் விளைந்தது. அதனால் இரு சாராரும் சண்டை யிட்டுக் கொண்டனர். அப்போது அங்கிருந்த பிரமா

அமுத கலசத்தைக் கைப்பற்றிக் கொண்டு அரித்துவாரத் துக்கு வந்தார். அவ்வாறு வந்தபோது அமுத கலசத்தில் இருந்த அமுதத்தில் சில துளிகள் தெரித்துக் கங்கையில் விழுந்து கலந்து விட்டன. அதனால் இங்குள்ள கங்கை நீர் தனக்கு இயல்பாக உள்ள புனிதத்தோடு இறவாத் தன்மையையும் பெற்றுவிட்டது. இங்குதான் ராஜா பர்த் ருஹரி தவம் செய்து வானுலகடைந்தான். அதனால் இங்குக் குளிப்பவர்கள் தேவகதி அடைவார்கள்.

மாலை ஏழு முப்பது மணிக்குக் கங்கா பூஜை ஆரம்ப மாயிற்று. இப்பூஜை நாள்தோறும் அதே நேரத்தில் துவங்கி நடைபெறுகின்றது. இதைப் பார்க்கவும் பூஜையில் கலந்து கொள்ளவும் பெருங்கூட்டமாக மக்கள் திரள் வார்கள். இன்றும் பெருங்கூட்டம் திரண்டிருந்தது.

மக்கள் கங்கையில் தீபமேற்றி விடுவதற்கென்று பூ நிறைந்த நெய் விளக்கோடு கூடிய தாமரை இலைகளை விலைக்கு வாங்கிக் கையில் வைத்துக் கொண்டு நின்றனர். இத்தாமரை இலைகளைப் பலர் விற்கின்றனர். நாங்களும் ஆளுக்கொன்று வாங்கி வைத்துக் கொண்டோம்.

அப்போது தெற்குப் பகுதியில் இருந்த தெய்வங் களுக்கும் கங்கைக்கும் ஒரே சமயத்தில் வழிபாடு துவங்கியது. டாண் டாண் என்ற மணியோசை வான் முட்ட ஒலித்தது. மிகப் பெரிய தீப ஒளிகள் பெருஞ் ஜோதியாகத் தோன்றின. எல்லா தெய்வங்களுக்கும் ஜோதி காட்டி வழிபாடு நடந்தது. கம்பீரமாகக் கரை புரண்டு ஓடும் கங்கா தேவியை ஜோதி காட்டி வழிபாடு செய்தனர். அப்போது 'கங்கா மாதாவுக்கு ஜே' என்ற மக்கள் குரல் வானத்தை முட்டியது. அதே நேரத்தில் மக்கள் யாவரும் தம் கைகளில் வைத்திருந்த தாமரை இலை விளக்குகளை எரியவிட்டுக் கங்கையில் மிதக்க விட்டனர்.

கரைமீது ஐம்பெரும் ஜோதிகள் சுடர்விட்டுப் பிரகாசிக்க, ஆற்றில் விடப்பட்ட நூற்றுக் கணக்கான தாமரை இலை விளக்குகள் நீரின் ஓட்டத்தில் இக்கரைக்கும் அக்கரைக்குமாகப் பறந்து தாரைகள் போல் அசைந்தாடிச் செல்ல, இத் தெய்வக் காட்சி கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. நீண்ட நேரம் அக்காட்சியைக் கண்டு களித்த வாறு நின்றோம். களிதுளும்பிய உள்ளத்தோடு அவ் விடத்தை விட்டு நீங்கி 'கீதா பவனம்' என்னும் கண்ணன் கோயிலுக்குப் போய்க் கண்ணனை வணங்கி விட்டு இரயில் நிலையத்தை அடைந்தோம்,

## ரிஷிகேசம்

வியாழக்கிழமை 11-5-78 காலை ஐந்து மணிக்கு ரிஷிகேசம் ஸ்டேஷனை அடைந்தோம். அங்கிருந்து 2 மைல் தொலைவிலுள்ள 'இலட்சுமண ஜூலா' என்னும் இடத்துக்குப் போனோம்.

**இலட்சுமண ஜூலா:** இது இமயத்தின் அடிவாரத்தில் இலட்சுமணன் அமைத்த இடமாகும். இங்கு வானோங்கி வளர்ந்துள்ள இருபெரும் மலைகளினூடே கங்கை ஆறு பெரு வெள்ளமாகப் பெருக்கெடுத்து ஓடி வருக்கின்றது.

கங்கையின் பேரெழிலும், வானுற ஓங்கி நிற்கும் கயிலைக் குவடுகளும், செழித்தோங்கி பச்சைப் பசேலென நிற்கும் அடர்ந்த மரங்களின் வனப்பும் உள்ளத்தை அள்ளியது. இயற்கையின் வனப்பை இங்கேதான் பார்க்க வேண்டும். இந்த இயற்கைச் சூழலின் நடுவில் பல முனிவர் களும் தவசிகளும் தவஞ் செய்கின்றனர். இத்தெய்வத் தலத்திடைத் தெய்வத் திருத்தலங்கள் பல உள்ளன.

'இலட்சுமண ஜூலா' கங்கையாற்றின்மீது அமைந் துள்ள குறுகலான சின்ன பாலம் ஆகும். இப்பாலத்துக்குத் தூண்கள் இல்லை. இரும்புக் கயிறுகளின் பலத்தில் அந்தரத்தில் தொங்குகின்றது. இப்பாலத்தின் மீது நடந்து

சென்று நடுமையம் சேர்ந்ததும் இப்பாலம் அசைவதை உணர்கிறோம். இதன்மீது சின்ன கார்கள் மட்டும் அனுமதி பெற்றுப் போகலாம். இதன் நீளம் 440 அடி. அகலம் 6 அடி. இதைக் கடந்து போய் எதிர்க்கரையிலிருந்த 13 மாடி கோயிலுக்குப் போனோம். இதில் உலகில் உள்ள எல்லாத் தெய்வங்களும் கோயில் கொண்டுள்ளன. கீழ்த் தளத்தில் இராமர், இலட்சுமணர், சீதை, கண்ணன் கோயில் கொண்டுள்ளனர். இவர்களை வணங்கி விட்டு மேல் மாடிகளுக்குப் போனோம். மாடிகள் தோறும் உள்ள கன்னியாகுமரி அம்மன், முருகன், சிவபெருமான், துர்க்கை, இலட்சுமி, சரஸ்வதி முதலிய தெய்வங்களை வணங்கிக் கொண்டு 11வது மாடிக்குப் போனோம். இங்குக் 1008 சிவலிங்கங்கள் கொண்ட சகஸ்ரலிங்கமும், தனித்தனி கோயில்களில் நவக்கிரகங்களும் இருக்கக்கண்டோம். வழி பட்டுக் கொண்டு 12வது மாடிக்குப் போனோம். இங்கு கோயில் கொண்டுள்ள இராமலிங்கேஸ்வரவரை வணங்கி விட்டு உச்சி மாடியாகிய 13வது மாடிக்குப் போனோம். இங்குக் கயிலையில் 13000 அடி உயரத்தில் வீற்றிருக்கும் அமர்நாத் பெருமான் எழுந்தருளியிருக்கக் கண்டு களிப்போடு வழிப்பட்டோம். 13000 அடி உயரத்திலிருக்கும் சிவபெருமான் 13வது மாடியில் கொலுவீற்றுள்ளார். மலைமீது பலநாள்கள் நீண்டதூரம் நடந்து போய் பார்க்க வேண்டிய பெருமான் இங்கும் 13 மாடிகளின் படிகளைக் கால் கடுக்க நடந்துபோய் பார்க்கும்படி அமர்ந்துள்ளார். அன்போடு வணங்கி பணிந்து விட்டுக் கீழிறங்கினோம். சிறிது களைப்பாறிவிட்டு அருகிருந்த சங்கரர் கோயிலைத் தரிசித்துவிட்டு டாக்ஸியில் சிவானந்த ஆசிரமத்தை அடைந்தோம்.

### சிவானந்த ஆசிரமம்

ஆசிரமத்தில் இப்போது சிவானந்தர் இல்லை. இவர் 14-7-63-ல் மறைந்துவிட்டார். இவரிடத்தில் இப்போது

சிதானந்த சுவாமிகள் இருக்கின்றார்கள். இவர்கள் நல்ல துறவி. பழுத்ல் ஞானியும் கூட.

சிவானந்த சரசுவதி சுவாமிகள் தென்னாட்டைச் சார்ந்தவர். இவர் சிறந்த ஞானியும் யோகியும் ஆவார். சுமார் 300 நூல்கள் ஆங்கிலத்தில் எழுதியுள்ளார். இவை தத்துவம் சமயம் யோகம் பக்தி பற்றியவையாகும். பல மேல்நாட்டு அறிஞர்கள் இங்கு வந்து தங்கியிருந்து அவருடைய பெருமையை அறிந்து அவரைப் பாராட்டிப் பல நூல்கள் எழுதியுள்ளனர்.

ஆசிரமத்தில் பல சாதுக்கள் தங்கியுள்ளனர். நாள் தோறும் நாம சங்கீர்த்தனமும் சொற்பொழிவும் நடைபெறுகின்றன. இங்குக் கோயில் ஒன்றும் இருக்கின்றது. இதில் நாராயணனையும் சிவலிங்கமூர்த்தியையும் எழுந்தருளச் செய்து வழிபடுகின்றார்கள். சிவானந்தரின் சமாதிக் கோயில் ஒன்றும் உளது. கோயில் வழிபாடு முடித்துக் கொண்டு சுவாமிகளின் ஆசீர்வாதத்தையும் பெற்றுக் கொண்டு அவ்விடமிருந்து புறப்பட்டுக் கங்கையின் மறுகரையிலிருக்கும் கீதா பவனத்தையும் சொர்க்காசிரமத்தையும் பார்க்கப் போனோம்.

### கீதாபவனம் சொர்க்காசிரமம்

இவை கங்கையின் மறுகரையில் உள்ளன. இவற்றைச் சென்று பார்க்க இக்கரையிலிருந்து மறுகரைக்குப் போக மோட்டார் படகுகள் உள்ளன. இவற்றுக்கு கட்டணம் இல்லை. பாபா கம்பளி வாலாவின் அறக்கட்டளையின் கீழே இவை ஓடுகின்றன.

கீதாபவனமும் சொர்க்காசிரமும் பாபா கம்பளி வாலாவால் கட்டப்பட்டவை. இவற்றில் பத்ரி முதலிய புண்ணிய தலங்களுக்குப் போகும் யாத்ரீகர்களுக்கு மூன்று நாள்களுக்குத் தங்கும் வசதியும் உணவும் அளிக்கப் படுகின்றன. முன்னால் யாத்ரீகர்களுக்கு கம்பளிகளையும்

இலவசமாக அளித்து வந்தனர். இக்கம்பளிகளை வேண்டா தவர்கள் பெற்றுப் பணமாக்கும் தொழிலில் ஈடுபட்டதால் இத்தர்மம் நிறுத்தப்பட்டுவிட்டது. கேதார்நாத், பத்ரிநாத், கங்கோத்ரி, யமுனோத்ரி முதலியவற்றுக்குப் போகும் பிரயாணிகளுக்கு வழியில் ஆங்காங்கே தங்கிப்போக மடங்களை அமைத்து அவர்களுக்குக் கோதுமை மாவையும் இலவசமாக அளித்து வருகின்றனர். கம்பளிவாலாவால் ஏற்படுத்தப்பட்ட அறக்குழு இந்த அறங்களை இப்போது நடத்தி வருகின்றது.

இமய மலையின் அடிவாரத்தில் அடர்ந்த காடுகளுக்கு இடையே இந்த ஆசிரமங்கள் அமைந்துள்ளன.

தூர இருந்து பார்க்கும்போது பச்சை பசேலென வானோங்கி வளர்ந்துள்ள காடுகளும் கம்பீரமாகப் பாய்ந்தோடி வரும் கங்கையாறும் அதன் கரையிலுள்ள கீதாபவனம் கட்டிடங்களும் கண்கொள்ளாக் காட்சியாக விளங்குகின்றன.

சொர்க்காசிரமம்

இது பெரிய ஒரு தோட்டத்தில் பசுமையான பரந்த புல்வெளியில் இருக்கின்றது. இப்புல்வெளியில் கண்ணனின் திருவிளையாடல்களை விளக்கும் காட்சிகளும் இராமனின் வரலாற்றுக் காட்சிகளும் உள்ளன. அதை அடுத்துப் பாபா கம்பளிவாலா அவர்களின் கோயிலும் உளது. அதைத் தாண்டிப் போனால் நவக்கிரகக் கோயில்களும் அதன் பக்கத்தில் கண்ணாடி அறைகளில் கண்ணனின் விசுவரூபமும் வீணாகானம் செய்யும் வாணியின் திருவுருவமும் உள்ளன. அறைக்குள் இடமும் வலமும் நோக்கினால் அத்திருவுருவங்கள் நூற்றுக் கணக்கில் வரிசையாகத் தோன்றுகின்றன. இவற்றைப் பார்த்துக் கொண்டு கீதாபவனத்தார் நடத்தும் கடையில் அருமையான விரிப்புகளை ரூ. 40/-, 45/- விலைகளில் வாங்கிக் கொண்டு மீண்டும் மோட்டார் படகுகளில்

மறுகரைக்குப் போய் டாக்ஸிகளில் நண்பகல் ஒரு மணிக்கு இரயில் நிலையத்தை அடைந்தோம். உணவருந்தி விட்டு ஓய்வு எடுத்துக் கொண்டோம்.

## பத்ரிநாத்

வெள்ளி 12-5-78 அதிகாலை நான்கு மணிக்கே குளித்து விட்டுப் பதினோரு தனி பஸ்களில் பத்ரிநாத் நோக்கிப் புறப்படத் தயாரானோம். பத்ரி நாராயணன் திருக் கோயில் இமயமலைச் சிகரங்களுக்கிடையில் ரிஷிகேசத்தி லிருந்து 292 கி. மீ. தூரத்தில் இருக்கின்றது. இதன் உயரம் 10248 அடி. பத்ரி வரை செல்லும் பாதை தார்போட்ட பாதை. இப்பாதை 200-க்கும் மேற்பட்ட மலைச் சிகரங் களைச் சுற்றிச் செல்கின்றது.

காலை ஏழு-முப்பது மணிக்கு எங்கள் புனிதப் பயணம் துவங்கியது.

இந்தியநாடு இயற்கையைப் போற்றி வணங்கிய நாடு ஆகும். இந்தியர் மலைகளையும் ஆறுகளையும் தெய்வ இயல்போடு கண்டவர்கள்.

திருவாசகத்தில் திருத்தசாங்கம் என்னும் தலைப்பில் இறைவனுக்குப் பத்து உறுப்புக்கள் சொல்லப்படுகின்றன. 'ஆணவமல அழுக்கைக் கழுவும் ஆனந்தம் ஆறு' என்றும், 'முத்தியை அருளுகின்ற மலை' என்று மலையையும் அருளியிருக்கக் காண்கிறோம்.

நதியில் நீராடி மலநீக்கம் பெற்று மலைமீது ஏறிப் பரமனை தரிசித்து முத்திப் பேறு அடையவேண்டும்.

இதைக் கருதியே போலும் சங்கரர் புனித வெற்பின்மீது நடமாடிப் பல திருக்கோயில்களை அமைத்தார். நாடு முழுவதிலுமுள்ள புனிதத் தலங்கள் எல்லாவற்றிலும் சங்கரருடைய அருட்பதிவு காணப்படுகின்றது. இவர் பல

ஞானநூல்களை இயற்றி அறிவுப்பணியையும் திருக்கோயில் களை அமைத்துப் பக்திப் பணியையும் இயற்றியுள்ளார். மனிதன் உய்ய ஞானம் பக்தி இரண்டும் வேண்டும்.

உயர்ந்த மலையின்றி மழை இல்லை. மழை இன்றேல் நதிகளில்லை. நதியில் ஓடும் நீர்தான் உயிர்களுக்கு ஜீவாதாரம். நீரின்றி உலகமில்லை.

'நீர் இன்று அமையாது உலகு' என்பது பொய்யா மொழியார் அருள்வாக்கு.

நாடு நகரங்களும், நாகரிகங்களும், நதிக்கரைகளின் மீதே தோன்றி வளர்ந்தன. அதனால் நதிகளும் மலை களும் புனிதமுடையன ஆகின்றன.

வடக்கே காஷ்மீர் முதல் அஸ்ஸாம் வரை 1500 மைல்கள் நீண்டு பரந்துள்ள மலைகள் இமயம் ஆகும். இது இந்திய மக்களுக்குக் கல்லின் திரட்சியன்று. பரம்பொருள் கொலு வீற்றிருக்கும் தெய்வ நிலையமாகும். இங்கிருந்துதான் கங்கையும் யமுனையும் சிந்து பிரம்மபுத்திராவும் தோன்றி இந்நாட்டை வளம்படுத்தின. இங்கிருந்தே ஆன்மிக உணர்வுகளும் தோன்றி இந்தியப் பண்பாட்டை வளர்த்தன. யுகம் யுகமாக முனிவர்களும் சித்தர்களும் ஞானிகளும் தவங்கிடந்து ஞானம் பெற்று தத்துவ ஞானங்களைத் தோற்றுவித்து உலகுக்கு அளித்த இடமும் இதுவேயாகும்.

இமயம் பரம்பொருளின் இருப்பிடம். இதைச் சேக்கிழார் பெருமான் பெரியபுராணம் திருமலைச் சிறப்பில்

"தன்னை யார்க்கும் அறிவரியா னென்னும்
மன்னி வாழ்கயிலைத்திரு மாமலை." (1)

"நிலவும் எண்ணில் தலங்களும் நீடொளி
இலகு தண்தளிர் ஆகவெ ழுந்ததோர்
உலகம் என்னும் ஒளிமணி வல்லிமேல்
மலரும் வெண்மலர் போல்வதம் மால்வரை." (2)

என்று அருளிப் போற்றியுள்ளார்.

இத்தெய்வத் திருமலைத் தொடர்களில் உள்ள திருத்தலங்கள் பல. கங்கோத்ரி, யமுனோத்ரியும்; அமரநாதம், கேதாரம், பத்ரிகாஸ்ரமம் போன்ற திருத்தலங்களும் இங்கு உள்ளன.

22023 அடி உயர பனிச் சிகரத்தில் திருக்கயிலாயமும் அதைத் தழுவி மானசரோவரம் என்னும் புனித ஏரியும் உள்ளன. கயிலையை அப்பனாகவும் ஏரியை அருளம்மையாகவும் கொண்டு 'கௌரி சங்கரம்' என்று, இவற்றை ஒன்றுபடுத்தி அழைக்கின்றனர்.

தேவர்களும் முனிவர்களும் சூழ்ந்திருந்து தவஞ்செய்ய, திருமாலும் நான்முகனும் அண்ணலின் அழகான வாயிலின் முன் தவங்கிடக்க அண்ணல் அம்மையோடு யாவரும் உய்ய அருட்டிருமேனி கொண்டு வீற்றிருக்கும் புண்ணியத் திரட்சி இமயம் ஆகும் என்று சேக்கிழார் அருள்கின்றார்.

இப்புனித வெற்பின்மீது காரைக்காற் பேய் அம்மையார் காலால் நடக்க அஞ்சித் தலையால் நடந்தார். ஞானிகளெல்லாம் பரவித் துதிக்கும் பெருமையுடைய இம்மலை மீது அம்மை அப்பரைக் காண அப்பர் பெருமான் உடம்பெல்லாம் தேய ஊர்ந்தும் உருண்டும் சென்றார். இத்தகைய பெருமை மிக்க இமயம் உலகிலுள்ள மலைகளிலெல்லாம் உயரமான மலையுமாகும். இவ்வாறு எல்லாவகையிலும் ஏற்றம் பெற்ற இப்புனித மலைமீது ஏறிச் செல்லும் பேறுபெற்றோமே என்று எண்ணியபோது உள்ளத்தில் பேரானந்தம் பொங்கியது.

இனி, இங்கு ஓர் ஐயம் தோன்றலாம். கயிலை மலை மீது அன்று காரைக்காற்பேய், அம்மை அப்பரைக் கண்டு தரிசித்தார்; அவர்களிடம் உரையாடினார்; அப்பனால் 'அம்மையே' என்று அழைக்கப்பட்டார்.

அப்பர் பெருமான் 'அம்மை அப்பரைத் தரிசித்தல்லால் மீளேன்' என்று உறுதி பூண்டு உடல் தேய உருண்டும்

போனார். இறைவன் முனிவர் வடிவில் தோன்றி அப்பருக்கு திருவையாற்றில் காட்சியளிப்பதாக உறுதி கூறி திருவையாற்றுக்குப் போகுமாறு செய்தார். ஆனால் இப்போது கயிலைக்குப் போகின்றவர்கள் கயிலைச் சிகரத்தின் மீது பனிமலைக் காட்சியைக் காண்கின்றனரேயன்றி அம்மை அப்பரைக் காணவில்லையே? ஏன்? என்ற வினா எழுகின்றது.

அருளாளர்கள் அகக்கண் திறக்கப்பட்டவர்கள். அவர்கள் அகக்கண் கொண்டு பார்த்தனர். அம்மை அப்பரைக் கண்டனர். நாமோ புறக்கண் கொண்டு பார்க்கிறோம். தெய்வக்காட்சியைப் பார்க்கவில்லை.

1300 ஆண்டுகளுக்கு முன் 3 வயதுக் குழந்தை சீர்காழித் திருக்கோயில் திருக்குளத்தின் கரை மீதிருந்து, அம்மை அப்பர் தோன்றி அளித்த ஞானப்பாலுண்டு ஞானசம்பந்தராக நின்றது. இவர் தந்தை 'உனக்குப் பால் ஊட்டியது யார்?' என்று வினவியபோது அந்த ஞானக் குழந்தை அங்கு எழுந்தருளித் தனக்குப் பாலூட்டிய அம்மை அப்பரை அடையாளங்களுடன் காணுமாறு காட்டினார். சம்பந்தரின் தந்தையோ அங்குக் கூடியிருந்த மற்றவர்களோ அக்காட்சியைக் காணவில்லை.

அப்பர் பெருமான் சிதம்பரம் சென்று ஆடும் பெருமானைத் தரிசித்தபோது அம்பலக்கூத்தனின் 'என்று வந்தாய்' என்னும் திருக்குறிப்பை உணர்ந்தார். அது போன்ற அநுபவம் அருளாளர்க்கு அன்றி மற்றையோர்க்கு ஏது?

**" அருட்கண் ணிலாதார்க்கு அரும்பொருள் தோன்றா**
**அருட்கண் ணுள்ளோர்க்கு எதிர் தோன்றும் அரனே."**

— (திருமந்திரம் 358)

என்பது திருமூலர் திருமந்திரம்.

இனி பத்ரிக்குச் செல்லும் பாதையும் புனிதம் நிறைந்தது. மாமுனிவர்கள் செய்த தியாகம், தவம்,

பக்தி, அவற்றால் அவர்கள் அடைந்த உயர்வு ஆகியவற்றை அப்பாதை விளக்கிக் கொண்டிருந்தது. சரித்திரமும் புராண வரலாறுகளும் கூறும் பவித்திரமான நிகழ்ச்சிகள் இத்தடத்தில் நடந்துள்ளன. இராமர் தவம் புரிந்தது, பரசுராமர் பிராயச்சித்தம், நரசிம்ம மூர்த்தி சினம் தணிந்தது, அர்ச்சுனன் தவஞ்செய்து அஸ்திரம் பெற்றது, நாரதர் வீணை பெற்றது, கன்வரிஷி சகுந்தலையைப் போஷித்தது, நாரதர் எட்டெழுத்து மந்திர உபதேசம் பெற்றது போன்ற அரும்பெரும் நிகழ்ச்சிகள் நடந்த இடங்கள் இந்த வழி நெடுகிலும் உள்ளன. அதனால் பத்ரி நாராயணன் எழுந்தருளியுள்ள பத்ரி சிகரமேயன்றி பயணம் செய்யும் தடமும் புனிதமும் பெற்றுள்ளது. மேலும் ஆஞ்சநேயர், காளிமாதா, சிவபெருமான், இராமர் திருக் கோயில்களும் ஆங்காங்கே உள்ளன. பாதையை ஒட்டிப் புனித கங்கை நெடுகிலும் ஓடிப் பாதையைப் புனிதப்படுத்தி வருகின்றது. இவ்வாறு தலம் தீர்த்தம் மூர்த்தி என்னும் மூவகையாலும் புனித முற்று விளங்கும் பாதை வழியே பத்ரிநாத்துக்கே ஜே! என்ற பெருமுழக்கத்தோடு எங்கள் பேருந்துகள் புறப்பட்டன.

பச்சைப் பசேலென்று காடு சூழ்ந்த மலைகளினூடு வண்டிகள் பறந்தன. இமயத்தின் எழில்மிகு காட்சியைப் பார்த்துக் கொண்டே போனோம். இமயத்தின் உச்சியில் புறப்பட்டுக் கம்பீரமாக வானளாவ நின்ற மலைகளி னிடையே கங்கையாறு பெருவெள்ளமாகப் பெருக்கெடுத்து ஓடிவந்தது. இதன் ஒரு கரையில் மலைச்சரிவில் பாதை அமைந்திருக்கின்றது. ஆறு வளைந்து வளைந்து செல்லப் பாதையும் அதை ஒட்டி வளைந்து வளைந்து சென்றது. பாதை பல மலைகளைக் கடந்து செல்வதால் செங்குத்தாக ஏறிச் செல்லாமல் ஏறியும் இறங்கியும் சென்றது. ஒரு பக்கம் பாதாளத்தை எட்டிப் பிடிக்கும் பள்ளம். மறுபக்கம் வானளாவ உயர்ந்தோங்கியுள்ள மலை. இம்மலைச் சரிவுகளில் நிலச் சரிவுகள் ஏற்படும் ஆபத்து உண்டு. சரிவு

ஏற்பட்டால் மக்கள் உயிரோடு புதைக்கப்படுவார்கள் அல்லது பிணமாக உருண்டோடிப் பாதளத்தில் ஓடும் கங்கையாற்றின் வெள்ளத்தில் உருள்வார்கள். இத்தகைய ஆபத்துக்களுக்கிடையேயும் மக்கள் பல்லாயிரம் மைல்கள் கடந்து வந்து இம்மலைமீது பயணம் செய்கின்றார்கள் என்றால் அது பக்தியின் மகிமையாலே தான் நடைபெற முடியும்.

மலையின்மீது மேலே போகப்போக இதுவரை நாங்கள் அநுபவித்த கடுமையான வெப்பமும் தணியாத் தாகமும் தணிந்து விட்டன. உடல்மீது துண்டு போடப் பயந்த நாங்கள் போர்வையைத் தேடினோம். பயணம் மிகவும் சுகமாக இருந்தது. ஒரு சிலர் நடுங்கவும் செய்தார்கள். ஏனென்றால் செல்லும் பாதை குறுகலாகவும் வளைந்து வளைந்தும் சென்றது. ஒருபுறம் உயர்ந்தோங்கிய மலைத் தொடர் மறுபுறம் பாதளத்தில் சளசளவென பிரவாக மாக ஓடும் நதி. இதன் நடுவே குறுகலாகச் செல்லும் பாதை. இதில் கனவேகத்தோடு பஸ் ஓடியது. வண்டி பாதையை விட்டு ஒரு சிறிது விலகினாலும் எல்லோருக்கும் படுபாதளம்தான் கதி. வண்டியின் ஓரத்தில் அமர்ந் திருந்த சிலர் இதை எண்ணி அஞ்சி நடுங்கி நடுப்பகுதிக்குத் தங்கள் இருக்கையை மாற்றிக் கொண்டார்கள். இறைவ னிடத்து பக்தி, அன்பாலும் வரும் அச்சத்தாலும் வரும். அச்சம் தரும் இப்பாதையில் வண்டி ஆபத்தின்றி ஒழுங் காகப் போய்ச் சேரவேண்டுமே என்று அஞ்சியவர்கள் உள்ளத்தில் பக்தி சுரந்தது. பத்ரி நாராயணனின் திருநாமத்தைப் பூஜிக்கத் துவங்கினர். அவர்களோடு மற்றவர்களும் நாம பஜனையில் கலந்து கொண்டனர்.

சிலர் வழிநெடுக இருந்த மலைத் தொடர்களின் எழிலையும், வளைந்து வளைந்து கம்பீரமாகப் பாதளத்தில் ஓடும் கங்கையாற்றின் அழகையும் மலைச் சரிவுகளில் பச்சைப் பசேலென வானுற ஓங்கி வளர்ந்திருக்கும் மரங்

களின் காட்சியையும் கண்டு இயற்கையின் எல்லை இல்லா எழிலை எண்ணித் தெய்வ உணர்வைப் பெற்றனர்.

பேருந்திகளை ஓட்டியவர்கள் அப்பாதையில் வண்டியை ஓட்டிப் பழக்கப்பட்டவர்கள் ஆதலால் அவர்கள் பேருந்தி களை அநாயாசமாக ஓட்டிச் சென்றனர்.

வழியில் பல சிறு கிராமங்களைக் கடந்து சென்றோம். இங்குள்ள மக்கள் பயங்கரமான மலைச் சரிவுகளில் குடியிருந்து கொண்டு நிலைத்தைச் சமப்படுத்திப் பண்படுத்தி வெள்ளாமை செய்கின்றனர். இப்பகுதி மக்கள் சாதாரணமாகக் குதிரைகளின்மீது பயணம் செய்கின்றனர். சாமான்களையும் ஏற்றிச் செல்கின்றனர்.

வழியில் 67 கி. மீ தூரத்தில் உள்ள தேவப்பிரயா கையைக் கடந்தோம். இது அலகநந்தா பாகீரதி நதிகள் கலக்குமிடம். இதை அடுத்து 32 கி.மீ தூரத்திலுள்ள ஸ்ரீநகரை அடைந்தோம். இது காஷ்மீர் ஸ்ரீநகர் அல்ல. இப்பகுதியில் உள்ள ஊர்கள் எல்லாவற்றிலும் இது மிகப் பெரிய ஊர் ஆகும். இங்குச் சிறிது நேரம் தங்கிவிட்டு 53 மைல் தூரத்திலுள்ள ருத்ரப்ரயாகையை அடைந்தோம். இங்கு அலகநந்தாவுடன் மந்தாகினி கலக்கின்றது. இங்கு தான் 'கேதார் நாத்' என்னும் சிவஸ்தலத்துக்குப் போகும் பாதை பிரிகின்றது. இங்கிருந்து 51 மைல்கள் நடந்து போய் அத் திருக்கோயிலை அடையவேண்டும். ருத்ரப் பிரயாகையை விட்டு 40 மைல்கள் தூரத்திலுள்ள 'பிப்புள் கோட்' என்னும் இடத்தை மாலை ஐந்து மணிக்குப் போய் சேர்ந்தோம். இங்கு வருவதற்கு முன் அலக நந்தாவுடன், பிண்டர் கங்கா கலக்கும் கர்ணப் பிரயாகை, நந்தாகினி கலக்கும் நந்தப் பிரயாகை, கருட கங்கா கலக்கும் விஷ்ணுப் பிரயாகையை என்னும் முக்கியமான மூன்று இடங்களைக் கடந்து வந்தோம். 'பிப்புள் கோட்' 4000 அடி உயரத்தில் இருக்கின்றது. 50 பேர் கொண்ட எங்கள் குழுவுக்கு

ஒரு மேல்மாடி ஒதுக்கித் தரப்பட்டது. சன்னமாகத் தூரல் தூரிக் கொண்டிருந்தது. சிறிது குளிராகவும் இருந்தது.

சனிக்கிழமை 13-5-78 விடியற்காலை நான்கு மணிக்கே எழுந்து பயணத்தைத் துவக்கினோம். ஆறு மணிக்கு ஜோஷிமட் அடைந்தோம், இம்மடம் ஆதிசங்கரரால் தோற்றுவிக்கப்பட்டது. இங்கிருந்துதான் இவர் புகழ் பெற்ற கீதா பிரம்ம சூத்திர உபநிஷத் பாஷ்யங்களைச் செய்தார். இங்கிருந்து பத்ரிக்கு செல்லும் பாதை குறுகலான ஒரு வழிப்பாதை. இதில் வண்டிகள் எதிரெதிர் வந்தால் ஒன்றை ஒன்று கடந்து செல்ல முடியாது. அதனால் போகிற வருகிற வண்டிகளைக் கட்டுப்படுத்தி விடுகிறார்கள். இப்பாதை இராணுவத்தின் கட்டுப்பாட்டில் இருக்கின்றது. காலை ஆறு-முப்பது மணிக்கு இங்கிருந்து புறப்பட்டோம். இது 6000 அடி உயரத்தில் இருக்கின்றது. இங்கிருந்து பத்ரி போகும் வரை பாதையின் இருபுறமும் உள்ள மலைகள் பனிபடர்ந்து வெள்ளிப்படாம் போட்டு மூடியது போன்று வெண்மையாக விளங்கியது. எல்லா மலைச் சிகரங்களும் வெள்ளிக் குன்றுகளாகக் காட்சியளித்தன. சில மலைகளின் பனிமூடிய உச்சி சூரியனின் ஒளி பட்டு கண் பூக்கும்படி வெள்ளை வேளேரென்று ஒளிகான்று பிரகாசித்தது. சில இடங்களில் நாங்கள் போகும் பாதையில் மலைமீது படிந்திருந்த பனிக்கட்டி பாதையிலும் படர்ந்து மூடியிருந்தது. அதை வெட்டி அப்புறப்படுத்தி வண்டிகள் போகுமாறு ஆட்கள் செப்பனிட்டு கொண்டிருந்தனர். சில இடங்களில் உருகிய பனிக்கட்டியின் நீர் பாதையைக் கடந்து சளசளவென ஓடிக்கொண்டிருந்தது. பல இடங்களில் மலை மண்ணாக இருந்தது. இந்த இடம் மிகவும் ஆபத்தானது. இப்பகுதியில் மழைபெய்யும் போது மலையின் மண் கரைந்து கல்லும் மண்ணும் கலந்து சரிந்து வந்து பாதையை மூடிக்கொள்ளும். அப்போது அப்பாதையில் எந்த வண்டியும் போக முடியாது. மண்ணை அப்புறப்படுத்தி பாதையைச் சமப்படுத்தியாக வேண்டும்.

இராணுவ வீரர்கள் இவ்வேலையைச் செய்கின்றனர். மழை இல்லாத போதும் சில சமயங்களில் சரிவுகள் ஏற்படுவதுண்டு. இது போன்ற சரிவு ஏற்பட்டு அடைபட்ட பாதையைக் கடந்து வரும் பேரனுபவம் பத்ரியிலிருந்து திரும்பி வரும்போது ஏற்பட்டது.

எங்கள் பஸ் பத்ரியை நெருங்கி வந்து கொண்டிருந்தது. ஊர் நெருங்கிவிட்டது என்னும் அடையாளமாக பல மொழிகளில் வரைந்துள்ள தேவதர்சனி என்னும் பலகை தென்பட்டது. பத்ரி நாராயணின் திருக்கோயிலைத் தரிசித்து விடவேண்டும் என்னும் துடிப்போடு எட்டி எட்டிப் பார்த்தோம். முதலில் கோபுரத்தின்மீது பறந்து கொண் டிருந்த கொடி தென்பட்டது. அது காற்றில் அசைந்தாடி எங்களை வரவேற்பது போன்றிருந்தது. பின்னர் தங்கக் கோபுரம் காட்சிபட்டது. வண்டியிலிருந்து 'பத்ரி நாராயணனுக்குச் ஜே' என்ற முழக்கம் கிளம்பியது. வெற்றியோடு பத்ரியை அடைந்ததில் எல்லாருக்கும் பெரு மகிழ்ச்சி. காலை ஒன்பது மணிக்கு ஊரைச் சேர்ந்தோம். கம்பளிவாலாவின் புத்தம் புதிய சத்திரத்தில் தங்கினோம். அறைகளின் தரைமீது அரையடி உயரத்துக்குப் பலகைகள் பாவப் பட்டிருந்தன. அவற்றின்மீது தேங்காய்நார் விரிப்புக்கள் விரிக்கப்பட்டிருந்தன. வெறுந்தரையில் கால் வைக்க முடியவில்லை. தரை ஐஸ் போன்று மிகுந்த குளிர்ச்சியாக இருந்தது. தண்ணீரையும் தொட முடிய வில்லை.

அறையில் சாமான்களை வைத்ததும் நானும் சங்கரன் என்னும் வாலிபனும் பத்ரி நாராயணனை உடனே சேவிக்க வேண்டும் என்னும் துடிப்போடு கோயிலுக்குப் போனோம். திருக்கோயில் திறந்து மூன்றே நாள்கள் ஆகியிருந்தன. அதுவரைக் கோயிலும் ஊரும் பனிக்கட்டியால் மூடி யிருந்தன. கோயில் ஆண்டுதோறும் டிசம்பர் முதல் மே மாதம் வரை ஆறு மாதங்கள் பனிக்கட்டியால் மூடிக் கிடக்கும். 7-5-78-ல் தான் கோயில் திறக்கப்பட்டது.

கோயிலுக்குப் போகும் வழியில் ஆங்காங்கே பனிக்கட்டிப் பாறைகள் கிடந்தன. நாங்கள் தங்கிய சத்திரத்து வாசல்களின் முன்னும் மிகப்பெரிய பனிக்கட்டிப் பாறைகள் கிடந்தன. பத்ரியைச் சுற்றி உயரமான மலைகள் சூழ்ந் திருந்தன. அவையும் பனிபடர்ந்து வெள்ளிப்படாம் விரித்தது போன்று வெள்ளை வெளேரென்று இருந்தன.

திருக்கோயில் அலகநந்தா நதியின் கரைமீது இருந்தது. நதியின் மீது இந்த நீண்ட இரும்புப் பாலத்தின் மீது சென்று கோயிலை அடைந்தோம். கோயில் உயர மான இடத்தில் இருக்கின்றது. கோயில் சின்னதாயினும் கீர்த்தி பெரிது. நுழைவாயில் வெள்ளித் தகடு வேய்ந்து அழகாக இருந்தது. பலபடிகள் ஏறி உள்ளே போனோம். கோயில் திறந்து மூன்றே நாள்கள் ஆகி இருந்ததால் கூட்டம் இல்லை. வழிபாடும் துவங்காதிருந்தது. மக்கள் கோயிலுக்குள் கியூ வரிசையில் செல்வதற்கென்று மூங்கில் தடுப்புக் கட்டியிருந்தனர். கியூ தடுப்புக்குள் புகுந்து ஸ்ரீ நாராயணன் எழுந்தருளியிருந்த மூலத்தானத்தை அடைந்தோம். அப்போதும் கதவுகளுக்கும் சுவர்களுக்கும் சாயம் தீட்டிக் கொண்டிருந்தனர்.

பெருமாள் ஒரு மேடைமீது பத்மாசனமிட்டு அமர்ந் திருந்தார். இரு கரங்கள் சங்கு சக்கரங்களை ஏந்தி இருந்தன. முறையாக நடைபெற வேண்டிய பூஜைகள் இன்னும் ஆரம்பம் ஆகவில்லை. அதனால் சன்னிதானத் தில் விளக்கும் ஏற்றப்படாமல் இருந்தது. உற்றுப்பார்த்து முகமண்டலத்தைத் தரிசித்தோம். எங்களைத் தவிர அங்கு அப்போது வேறு யாருமே இருக்கவில்லை. நீண்டநேரம் இருந்து மனநிறைவோடு தரிசித்து வழிபட்டுக் கொண்டு கோயிலை வலம் வந்தோம். பின் தங்குமிடம் சேர்ந்தோம்.

சிற்றுண்டி அருந்திவிட்டுப் பின் யாவரும் பத்து-முப்பது மணிக்குக் கோயிலுக்குப் போனோம். பத்ரி நாராயணன்

கோயிலுக்குப் போகின்றவர்கள் குளித்துவிட்டுப் போக வேண்டும் என்ற நியதி இல்லை. குளிர் மிகுந்த பிரதேசம் ஆகையால் கம்பளிச் சட்டையும் போர்வையும் குல்லாயும் தரித்தவாறு அன்பர்கள் நாராயணனை வழிபடக் கோயிலுக்குள் போகின்றனர். கோயில் அர்ச்சகரே அவ்வாறு ஆடை அணிகளுடன் உள்ளார்.

பத்ரி நாராயணரை ஆதி சங்கரர் இங்கு ஸ்தாபிதம் செய்தார். பத்ரி என்பது இலந்தை. நாராயணன் இலந்தை மரத்தடியில் இருப்பதால் பத்ரி நாராயணன் என்று அழைக்கப்பட்டார். மூர்த்தி சங்கு சக்கர தாரியாய்த் தவக்கோலத்தில் பத்மாசனமிட்டுத் தபோ முத்திரையில் இருப்பதால் இது பத்ரிகாஸ்ரமம் என்றும் அழைக்கப் பட்டது. மூர்த்தி சுயம்பு மூர்த்தி. இதைச் சங்கரர் விஷ்ணுப் பிரயாகையில் கண்டெடுத்து வந்து இங்கு ஸ்தாபிதம் செய்ததாகவும் சொல்லப்பட்டது.

நாராயணன் தவமியற்றும் விருப்பத்தில் இங்கு வந்து தவத்தில் அமர்ந்தார். பனி பெய்து அவரை வருத்துவது கண்டு திருமகள் இலந்தை மரமாக அவரருகில் நின்று அவருக்குப் பாதுகாப்பு அளித்தாள் என்று ஒரு புராண வரலாறு கூறுகின்றது.

பத்ரியில் ஆதிசங்கரர் சிவலிங்கம் ஒன்றையும் ஸ்தாபிதம் செய்திருந்தாராம். பத்ரிக்குச் ஸ்ரீ சத்ய சாய் பாபா அவர்கள் வந்திருந்தபோது பாபா அவர்கள் நாராயணன் முன்னிலையில் அமர்ந்திருந்து கை அசைப் பினால் அந்த சிவலிங்கத்தை வரவழைத்து, ஆயிரம் இதழ் தங்கத் தாமரையைத் தோற்றுவித்துச் சிவலிங்கத்தை அப்பொற்றாமரையில் எழுந்தருளச் செய்து கங்கோத்ரி நீரால் அபிஷேகமும் தங்கப்பூக்கள் 108 ஐத் தோற்றுவித்து அர்ச்சித்தும் ஆராதனைகள் செய்தும் அச்சிவலிங்கத்தை மீண்டும் தன் எதாஸ்தானத்தில் எழுந்தருளச் செய்தாராம். இதை பாபா அவர்களின் வரலாறு கூறுகின்றது (வால்யம் 1, பக்கம் 384).

அருளாளர்களும் அவதாரபுருடர்களும் புனிதத் தலங்களுக்கு எழுந்தருளும்போது அத்தலம் மேலும், அருள் நிலையுற்று புனிதம் அடைகின்றன.

சைவ சமயக் குரவர்களால் பாடப்பெற்ற திருக்கோயில்கள் பாடற்றலங்கள் என்று போற்றப்படுகின்றன. ஆழ்வார்கள் பாடிய தலங்கள் மங்களாசாசனம் பெற்ற திருப்பதிகள் என்று சிறப்புற்றன.

திருவருட் செல்வர்கள் வந்து வழிபட்டதால் அத்தலம் மற்ற திருக்கோயில்களினும் அதிகமான மதிப்பைப் பெறுகின்றன. திருவருட் செல்வர்கள் திருவருள் விளங்கப் பெற்றவர்கள். அவர்கள் எண்ணம் சொல் செயல் யாவும் திருவருளில் தோய்ந்து செயல்படுகின்றன. இவர்கள் நடமாடும் இடங்கள் தூய்மை அடைகின்றன. திருவருட் பதிவு பெற்ற இவர்களுடைய அருள் எண்ணங்கள் இறைவனைப் போற்றும் அருட்பாடல்களாக வெளிவருகின்றன. அருளாளர் உள்ளங்களின் வெளிப்பாடே அருட்பாடல்களாகும். ஒலிக்கும், எண்ணங்களுக்கும் வடிவம் உண்டு. வெளிப்பட்ட இவை அழிவதில்லை. அருள் உள்ளத்தினின்றும் உருப்பெற்று வெளிவந்த எண்ணங்களும் ஒலிகளும் வெளியான இடங்களில் வான்வெளியில் தங்கியிருக்கும். அருளாளர்கள் வந்து இறைவனைப் போற்றிப் பாடிய திருக்கோயில்களுக்கு நாம் போய் இறைவனை மெய்யன்போடு வழிபடும்போது அருளாளர்கள் விட்டுச்சென்ற அருள் எண்ணங்கள் நம் எண்ணங்களோடு பொருந்தி நம்மை அருள்நிலைக்கு ஏற்றுகின்றன. அதனால் பாடல் பெற்ற திருக்கோயில்கள் மற்ற கோயில்களினும் ஏற்றம் உடையன ஆகின்றன.

அருளாளர் குளித்துத் தூய்மையுற்ற நதிகள் புண்ணியத் தீர்த்தங்களாகவும் அவர்கள் நடமாடிய இடங்கள் திருத்தலங்களாகவும் வழிபட்ட திருவுருவங்கள் தெய்வ சான்னித்தியம் பெற்ற மூர்த்திகளாகவும் ஆகின்றன.

அதனால் பெரியவர்கள் மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாக ஆட வேண்டும் என்று விதித்தனர்.

நாங்கள் திருக்கோயிலுக்குப் போனபோது வழிபாட்டுக் கான எல்லா ஏற்பாடுகளும் செய்யப்பட்டிருந்தன. ஆறு மாதங்கள் மூடியிருந்து கோயில் திறந்து செய்யப்படும் முதல் வழிபாட்டில் நாங்கள் இப்போது கலந்து கொள்ள இருந்தோம். இது எங்களுக்கு மட்டற்ற மகிழ்ச்சியை அளித்தது.

கியூ தடுப்புக்குள் நுழைந்து திருக்கோயில் வாயிலின் முன் வரிசையாக நின்றோம். கருவறையின் வாயிற் கதவுகள் மூடியிருந்தன. இங்குப் பூஜை செய்யும் அர்ச்ச கருக்கு ராவல் என்று பெயர். இவர் கேரள நாட்டைச் சேர்ந்த நம்பூத்திரிப் பிராம்மணர்.

முதலில் ஒருவர் ஒரு குடத்தில் தண்ணீர் கொண்டு வந்து வழிபாடு செய்ய ராவல் வரும் பாதையில் தெளித் தார். ராவல் வருவதற்கு முன் கோயில் பிராகாரத்தில் இருந்த மகாலட்சுமிக்கு ஒருவர் ஆர்த்தி வழிபாடு செய் தார். அக்கோயிலின் முன் பல செப்புக்குடங்களில் வெள்ளை அன்னம் நிவேதனமாக வைக்கப்பட்டன. இப்போது கருநீலநிற நீண்ட அங்கியும் தலைக்குல்லாயும் அணிந்த ராவல், நீர் தெளித்துத் தூய்மை படுத்தப்பட்ட பாதையில் நடந்து வந்தார். நேராகக் கருவறைக்கு வந்து மூடியிருந்த வெள்ளிக் கதவுகளைத் திறந்து கொண்டு உள்ளே போய் கதவுகளை அடைத்துக் கொண்டார். சிறிது நேரம் கழித்து, ராவல் வலம்புரி சங்கும் பூவும் நீரும் கைகளில் ஏந்திய வண்ணம் வெளியே வந்தார். கோயிலின் முன் மண்டபத்தில் இருந்த கருடபகவானுக்கும் பிராகாரத் திலிருந்த மற்ற தெய்வங்களுக்கும் பிரசாத குடங்களுக்கும் நீரைத் தெளித்து அவற்றைப் புனிதப்படுத்தினார். பின்னர் கருடபகவானையும் மகாலட்சுமியையும் வழிபட்டு விட்டு மீண்டும் நாராயணர் திருக்கோயிலைத் திறந்து

கொண்டு உள்ளே போய் கதவை அடைத்துக் கொண்டார். கதவு எப்போது திறக்கும், நாராயணனை எப்போது தரிசிப்போம் என்று ஆவலோடு காத்து நின்றோம். சிறிது நேரத்தில் கதவுகள் மணிகள் ஒலிக்கப் படாரெனத் திறந்தன. கணீர் கணீர் என கண்டாமணியின் பேரொலி எழுந்தது. மேரு தீபவொளியில் சங்கு சக்கர தாரியாய் ஆடை அலங்காரங்களுடன் மேடைமீது நாராயணன் அமர்ந்திருக்கும் காட்சியைக் கண்டதும் மெய்சிலிர்த்தது. பத்ரி நாராயணனுக்கு ஜே என்று நா ஒலித்தது. ஏக காலத்தில் எல்லாரும் சேர்ந்து முழங்கிய இந்நாம ஒலி பெருமுழக்கமாய் எங்கும் சூழ்ந்தது. நாரணனின் கண் கொள்ளாக் காட்சியைக் கண்கள் கண்டு களித்தன. ராவல் நாராயணனோடு இடப்பக்கம் இருந்த குபேர னுக்கும் வலப்பக்கம் இருந்த நாரணர்களுக்கும் தீப ஒளிகாட்டி வழிபாடு செய்தார். நாங்களும் நெகிழ்ந்த மனத்தோடு வழிபட்டோம்.

ஆபத்தான இடங்களைக் கடந்து வந்த அச்சமும் நீண்ட பயணத்தில் நேர்ந்த களைப்பும் நாராயணனின் தரிசனத்தால் நீங்கியது. வழிபாட்டில் எல்லை இல்லா இன்பம் உண்டாயிற்று. வழியில் ஏற்பட்ட அச்சத்தையும் பயண அசதியையும் கடந்து வெற்றியோடு குறிக்கோளை அடைந்து விட்டோமல்லவா! துன்பத்தின் மிகுதிக்கேற்ப இன்பமும் கூடி உண்டாகும். இப்பயணம் தெய்வப் பயண மல்லவா? தெய்வ சிந்தனையோடு பயணம் செய்யும் தெய்வ எண்ணமே மேலோங்கி நிற்கும். அப்போது ஏற்படும் மனக் கஷ்டங்களும் உடற் கஷ்டங்களும் ஒரு பொருட்டாகத் தெரியாது. எனவே மனநிறைவோடு பலமுறை வணங்கிவிட்டு வெளி வந்தோம். முன் பண்டபத் திலிருந்த கருடபகவானையும் பிராகாரத்திலுள்ள ஆஞ்சநேயர், நான்கு கைகளுடன் தவக்கோலத்திருந்த கணபதி, சாளக்கிராம சுயம்பு மூர்த்தியான மகாலட்சுமி, ஆதிசங்கரர், மேற்குப் பிராகாரத்திலிருந்த ஆஞ்சநேயர்

ஆகிய மூர்த்திகளை வணங்கிவிட்டு மீண்டும் மகாலட்சுமியின் சந்நிதியை அடைந்தோம். அம்மையின் முன் பிரசாதமாகக் குடங்களில் வைத்திருந்த அன்னம் விற்கப்படுகின்றது. அதை அன்பர்கள் விலைக்கு வாங்கி அங்குள்ள சாதுக் களுக்கு விநியோகம் செய்கின்றனர். எங்களில் பல அன்பர்கள் ஒரு குடம் அன்னம் ரூ 10/-ம் ரூ 7/-ம் கொடுத்து வாங்கி அந்த அன்னத்தைக் கையாலேயே சாதுக்களுக்கு வழங்கினார்கள். பிறகு கோயிலை விட்டு வெளிவந்தோம். கோயில் முன் வாயிற்படிகளில் இறங்கி அதை ஒட்டி அங்கிருந்த வெந்நீர் ஊற்றுக்குப் போனோம்.

வெந்நீர் மூன்று குளங்களில் நிரம்பி இருந்தது. நீர் குளிக்கும் அளவுக்கு வெப்பம் உடையதாயிருந்தது.

இயற்கையின் கருணையை என்னென்பது? 10, 000 அடி உயரத்தில் பனிபடர்ந்த மலைகளுக்கு இடையே தண்ணென்ற நீரோட்டத்துக்கு அருகே வெந்நீர் ஊற்று ஒன்றை வறளாது எப்போதும் ஊறச் செய்து தன்னை வணங்கவரும் பக்தர்கள், குளிரிலும் குளித்து உடம்பைத் தூய்மை படுத்திக் கொள்ள உதவும் கருணைச் செயலை நினைந்து அன்பர்கள் உள்ளம் உருகியது. நாராயணனின் கருணை வெள்ளம் வெந்நீர் ஊற்றாகப் பெருக்கெடுத்து ஓடிவந்து, களைத்து வந்த பக்தர்களின் களைப்பை நீக்கி அவர்களை மகிழ்ச்சி வெள்ளத்தில் ஆழ்த்தியது.

இந்நீர் கந்தகநீர் ஆதலால் இதில் அதிக நேரம் இருந்து குளிக்கக் கூடாது என்றனர். நீண்ட நேரம் இதில் படிந்திருந்தால் உடல் நலம் கெடும் என்றதால் நாங்கள் மூன்று குளங்களிலும் 10 நிமிடங்களில் குளித்துவிட்டு வெளியேறினோம். நண்பகல் ஒரு மணிக்குத் திரும்பி னோம். உண்டு களைப்பாறினோம்.

மாலை நான்கு மணிக்கு மீண்டும் நாராயணனை வழிபடக் கோயிலுக்குப் போனோம். கோயிலில் கூட்டம் இல்லை. அமைதியாக ஐயனைத் தரிசித்து வணங்கிவிட்டுக்

கோயிலை வலம் வந்தோம். இக்கோயிலை 108 முறையோ அல்லது சக்திக்கு இயன்றவரையோ வலம் வருவது நல்லது என்று நான் கேள்விப் பட்டதைச் சொன்னேன். இதைக் கேட்ட எங்கள் குழுவைச் சேர்ந்த அன்பர்கள் பலர் அவ்வாறே செய்தனர். ஓர் அம்மையார் தமது கணவரை உடன்கொண்டு வலம் வரத் துவங்கினார். அன்னை நல்ல பக்தி உடையவர். அய்யா கடவுள் பற்றுச் சிறிது குறைந்தவர். அவர் கணக்கில்லாமல் சுற்றி வருவதில் விருப்பம் கொள்ளவில்லை. என்றாலும் மனைவியின் விருப்பத்துக்கு மாறுபட விரும்பாமல் தாமும் சுற்றி வந்தார். வலம் வருவதைச் சீக்கிரம் முடித்துக் கொள்ள விரும்பினார். அம்மையார் அதற்கு இசையாது நாராயணன் திருப்பெயரை உச்சரித்தவாறு வலம் வந்தார். அய்யாவும் வெதும்பிய மனத்தோடு அம்மாவைப் பின் தொடர்ந்தார். முடிவில் பெருங்களைப்போடு வலம் வருவதை நிறுத்திக் கொண்டு இருவரும் ஓரிடத்தில் அமர்ந்தார்கள். அப்போது அவ்விருவர் முகத்தில் கண்ட காட்சி அற்புதக் காட்சியாய் இருந்தது, வழிபாட்டில் நிறைவு கண்ட அம்மையின் முகம் அன்றலர்ந்த செந் தாமரை யென விகசித்தது. அய்யாவின் முகமோ வேண்டா விருப்போடு சுற்றியதால் சினக்குறிப்போடு குமுதம் போன்று கருத்தும் குவிந்தும் இருந்தது.

இன்று உலகில் பக்தி பெண்களால் தான் ஊற்றம் பெற்றிருக்கின்றது. ஆண்களிடம் பக்தி சீர் குலைந்து இருக்கின்றது. எனினும் இச் சீர் குலைவை வீட்டுக்குரிய மனையாள் வீட்டுக்குள் நேர்படுத்தி வைத்துள்ளாள். வெளியில் காட்டும் வீரம் வீட்டுக்குள் நடவாது. இது அனுபவத்தில் காண்பது.

பின்னர், மறுநாள் பிரம கபாலத்தில் இறந்த முன்னோர்களுக்குப் பிண்டம் வைக்கும் பிண்டப் பிரசாதத் துக்காக ரூ. 1-50 செலுத்தி இரசீது பெற்றுக் கொண்டோம். சிலர் கோயிலில் நடைபெறும் திருபணிக்காக ரூ. 101/-

செலுத்தி இரசீது பெற்றுக் கொண்டனர். நாங்கள் 6 பேர் கோயிலின் முன் வாயிலில் நின்றவாறு புகைப்படம் எடுத்துக் கொண்டோம். மாலை ஆறு ஆயிற்று. குளிர ஆரம்பித்தது. படிப்படியாகக் குளிர் அதிகமாயிற்று. விரைவாக அவ்விடத்தை விட்டு அகன்று தங்குமிடம் சேர்ந்தோம். ரஜாய் என்னும் பஞ்சு மெத்தையை ஆளுக்கு இரண்டு வாடகைக்கு வாங்கிக் கொண்டோம். இதற்கு வாடகை ரூ. 1-50. இதைப் போர்த்துக்கொண்டால் குளிர் அவ்வளவாக இருக்காது.

தண்ணீரைக் கையால் தொடமுடியவில்லை. பனிக் கட்டியைத் தொடுவது போன்று மிகுந்த குளிர்ச்சியாக இருந்தது. அதனால் எல்லாவற்றுக்கும் வெந்நீரையே பயன்படுத்தினோம். பத்ரி 10000 அடி உயரத்தில் இருந்த தால் இங்குக் காற்றழுத்தம் குறைவாக இருந்தது. கோயிலுக்குப் போய் வரும் தடம் ஒரு மேட்டைக் கடந்து போய்வரும்படி இருந்தது. இந்தச் சிறிய மேட்டை ஏறி இறங்குவதே கடினமாயிருந்தது. கோயிலுக்குப் போகும் போதும் வரும்போதும் இந்த இடத்தில் மேல்மூச்சு கீழ் மூச்சு வாங்கியது. சிலருக்குச் சிறிது உடல் நலிவும் ஏற்பட்டது. கீழும் மேலும் ரஜாய் மெத்தையைப் பயன்படுத்தியதால் நான் குளிர்த் துன்பமின்றி நன்றாகத் தூங்கிவிட்டேன். இங்கு அதிகாலை நாலரை மணிக்கே விடிந்துவிட்டது. நான் ஐந்து மணிக்கு விழித்து எழுந்து கண்ணாடிச் சாளரத்தின் வழி வெளியே பார்த்தேன். அப்போது பார்த்த அந்த அற்புதக் காட்சி இப்போதும் என் கண் முன் நிற்கின்றது. இருபுறமும் வெண்மையான பனிச்சிகரங்கள். அதன் நடுவே பொற்கோப்பை கவிழ்த்து வைத்ததைப் போன்ற பொற்சிகரம் ஒன்று காட்சி அளித்தது. இந்த கண் கொள்ளாக் காட்சியைப் பலரையும் எழுப்பிக் காட்ட அவர்களும் கண்டு களித்தனர். இந்த பொன் வண்ணச் சிகரம் நீலகண்டசிகரம் எனப்பட்டது. காலை ஞாயிற்றின் ஒளிபட்டு அச்சிகரம் பொன்னிறமாகக் காட்சி அளித்தது.

னரிடம் புரோகிதர் ரூ. 7-00 கேட்டு பெற்றுக் கொண்டார். மற்றொரு குழுவினரிடம் புரோகிதர் தலைக்கு ரூ. 10-00 கேட்டார். உடனே பூசல் விளைந்தது. முடிவில் அவரவர் விருப்பம் போல் தட்சணை வழங்கலாம் என்று முடிவு செய்து தட்சணையை வழங்கி விட்டுச் சடங்கை முடித்துக் கொண்டோம்.

தட்சணை விவகாரம் எங்கும் எப்போதும் உண்டு. சடங்குகளைச் செய்து கொள்வதற்கு முன்னால் புரோகிதர் களிடம் முதலிலேயே பணத்தைப் பற்றி பேசி முடித்துக் கொண்டு சடங்குகளைச் செய்து கொள்வது நல்லது. தவறினால் பெரும் பூசல் ஏற்பட்டுத் துன்பப்பட நேரும். காசியில் புரோகிதர்களிடம் சிக்குண்டு பலர் அவதிக்குட் பட்ட வரலாறுகள் உண்டு. சிலர் கழுத்து நகைகளை விற்றுப் பண்டாக்களுக்குக் கொடுத்து தப்பித்து வந்தார்கள் என்றும் சொல்லப்பட்டன.

இனி, பிண்டம் வைத்த பிரசாதத்தை அலகநந்தா நதியில் கலக்கவேண்டும். நாங்கள் பிரசாதத்தை எடுத்துக் கொண்டு நதிக்கரைக்குப் போனோம். நதியில் பிண்டத்தைக் கலக்குமுன் தர்ப்பணம் செய்துகொள்ளவேண்டுவது முறை. கரைமீது தர்ப்பணம் செய்து வைக்கப் புரோகிதர்கள் இருந்தனர். அவர்களிடம் எள்ளுந் தண்ணீரும் விட்டுத் தர்ப்பணம் செய்து கொண்டு பிண்டப் பிரசாதத்தை நதியில் கலந்து கரைத்து விட்டோம். பிரம்ம கபாலத்தில் பிண்டம் வைத்த பின் வேறு எங்குமே இறந்த முன்னோர் களுக்கு பிண்ட சிரார்த்தம் செய்ய வேண்டியதில்லை என்று புரோகிதர் சொன்னார்.

இங்கிருந்து கோயிலை அடைந்து நாராயணனைக் கடைசி முறையாக வழிபட்டுக் கொண்டு கடைவீதிக்குப் போய் படங்களையும், மாலைகளையும் வாங்கிக் கொண்டு தங்குமிடம் சேர்ந்தோம். அன்று அங்கு அறுசுவை உண்டி அளிக்கப்பட்டது. பிற்பகல் ஒன்று முப்பது மணிக்குப்

பத்ரியை விட்டுப் பஸ்ஸில் புறப்பட்டோம். ஊர் எல்லையில் பல இராணுவ லாரிகள் நின்று கொண்டிருந்தன. அவற்றின் பின்னால் எங்கள் பஸ்களும் போய் நின்று கொண்டன. 30 நிமிடங்கள் கழிந்தன. பின் பல வண்டிகள் பிப்புள் கோட்டிலிருந்து வந்தன. அவற்றுக்காகத்தான் நாங்கள் நின்றிருந்தோம். இங்கிருந்து பிப்புள்கோட் வரையுமே குறுகலான பாதைதான். அதனால் வருகின்ற போகின்ற வண்டிகளைக் கட்டுப்படுத்தி விட்டனர். 'போகலாம்' என்ற அடையாளம் காட்டப்பட்டது. உடனே எல்லா வண்டிகளும் புறப்பட்டுப் போயிற்று. அழகான பனிமலைச் சிகரங்களைக் கண்டு ரசித்த வண்ணம் போனோம். பல மலைச் சரிவுகளில் படிந்திருந்த பனிக்கட்டி உருகி நீர்ப் பெருக்கெடுத்துப் பெருவெள்ளமாக மலைகளின் நடுவே பாய்ந்து ஓடிவரக்கண்டோம். ஒரு மலைச் சரிவில் படிந்திருந்த பனிக்கட்டிப் பரப்பில் சில சிறுவர்கள் ஓடியாடி விளையாடவும் கண்டோம்.

இப்பனிக் கட்டி ஊரில் விற்கும் ஐஸ் போன்றதன்று. இது இறுகாமல் மென்மையான மணல் போன்று இருக்கின்றது. இதைக் கையில் வாரி எடுத்து உருண்டை பிடிக்கலாம்.

ஒருபுறம் உயர்ந்த மலை மறுபுறம் ஆழத்தில் பாய்ந்தோடும் நதி. இவற்றின் நடுவில் மலைச்சாரலில் வளைந்து வளைந்து சென்ற எங்கள் பஸ் கனவேகமாக ஓடியது. சூழ இருந்த இயற்கைக் காட்சிகளைக் கண்டு ரசித்த வண்ணம் போய்கொண்டிருந்தபோது திடீரென்று ஒரு திருப்பத்தில் எங்கள் வண்டி திரும்பியதும் எதிரில் பாதையே தெரியவில்லை. மண்மேடுதான் தெரிந்தது. நாங்கள் திடுக்கிட்டுப் போனோம். ஆனாலும் எங்கள் வண்டி நிற்கவில்லை. நேராக மேடும் பள்ளமுமாக இருந்த அந்த மண்மேட்டின்மீது மெதுவாகச் சென்றது. திடீரென்று வண்டி ஒரு புறம் சாய்ந்தவாறு நகர்ந்து சென்று தடாலென சத்தத்துடன் ஒரு கல்லின் மீது ஏறி இறங்கியதை

உணர்ந்தோம். ஏதோ பெரும் ஆபத்து நிகழப் போகிறது என்ற எண்ணம் எழுந்து மூச்சு ஒரு கணம் நின்றுவிட்டது. ஆனால் நாங்கள் பயந்தது போல ஒரு அசம்பாவிதம் இன்றி வண்டி அந்த இடத்தைக் கடந்து அப்பாற் சென்றதும் 'அப்பாடா' என்று பெருமூச்சு விட்டோம். இது போன்ற சமயங்களில் எவர் உள்ளத்திலும் தெய்வ சிந்தனை உண்டாவது இயல்பு. 'அப்பனே நாராயணா' என்று எல்லார் நாவிலும் எழுந்தது. வண்டி ஓட்டி மிகவும் அநுபவப்பட்ட வர். ஆகையால் அநாயாசமாகத் தயக்கமின்றி அந்த மண் மேட்டைக்கடந்து போய்க்கொண்டே இருந்தார். அப்போது அந்த இடத்தைப் பலபேர் செப்பனிட்டுக் கொண்டிருந் தனர். அந்த இடத்தில் இருந்த மலைப்பகுதி மண்ணா லானது. அதனால் மலையில் சரிவு ஏற்பட்டுப் பாதை மண் ணாலும் கற்களாலும் மூடப்பட்டிருந்தது. அதை அப்போது ஆட்கள் வண்டி போகும் வண்ணம் சீர் செய்து கொண்டிருந் தனர். இதுபோன்ற இடங்களிலெல்லாம் 'ஆபத்தான இடம்' என்று எச்சரிக்கைப் பலகைகள் நட்டு வைத்திருந் தனர். ஒருவித இடருமின்றி ஜோஷி மட்டைக் கடந்து மாலை ஆறு மணிக்குப் பிப்புள்கோட் போய்ச் சேர்ந்தோம். இப்போதும் சிறிது மழை தூரிக்கொண்டிருந்தது. வரும் போது தங்கிய அதே இடத்தில் நாங்கள் 50 பேர் தங்கினோம். உணவருந்திப் படுத்தோம்.

திங்கள் 15-5-78 காலை நான்கு முப்பது மணிக்கே விடிந்து விட்டது. நான்கு நாற்பத்தைந்து மணிக்கு ரிஷிகேசம் நோக்கிப் புறப்பட்டோம். பல கிராமங்களைக் கடந்து போனோம். காலை ஆறுமணிக்கே கிராமத்துச் சிறுவர் சிறுமியர் பள்ளிக்குப் போய்க் கொண்டிருந்தனர், மக்கள் நடமாட்டம் துவங்கி விட்டது. நாடோடி கூட்டத் தார் மேய்க்கும் ஆடுகளுடன் சென்றனர். சிலர் ஆட்டுக் கூட்டத்தை ஓரிடத்தில் தங்கவைத்துக் காலை ஆகாரத்தை ஓர் நீர் நிலையின் அருகே தயாரித்துக் கொண்டிருந்தனர். சிறுவர் சிறுமியர் மலையின் விளிப்புகளிலும் பாதை

ஓரங்களிலும் அச்சமின்றி நடமாடினர். சில இடங்களில் நாம் எட்டிப் பார்க்கவே அஞ்சும் மலைச்சரிவுகளில் சிறு பாத்திகளை அமைத்து வெள்ளாமை செய்துகொண்டும் அச்சரிவுகளிலேயே வீடுகளை அமைத்துக் கொண்டும் அச்சமின்றிக் குடும்பத்தோடு வாழ்வதைப் பார்த்தோம். குளிர்ச்சி மிக்க இந்தப் பகுதியில் வாழும் மக்கள் உயரமாக வும் ஆரோக்கியமாகவும் வெள்ளை நிறத்தோடு உள்ளனர். பெண்களின் உதடுகள் சாயம் பூசாமலேயே பவளம் போன்று கொவ்வைச் செவ்வாயாக உள்ளன.

பத்ரி நாராயணன் திருக்கோயில் திறந்தாயிற்று. ஆகையால் பத்ரி நோக்கிச் சாமியார்களும் சந்நியாசிகளும் காவி கமண்டலங்களுடன் மூட்டை முடிச்சிகளோடு கூட்டம் கூட்டமாகப் போய்க் கொண்டிருந்தனர். ஒரு சாமியார் கூட்ட நடுவில் சமணத் துறவி ஒருவரும் முண்டகத் தலையோடு திகம்பரராய்ப் போவதைக் கண்டோம். நாராயணரை வழிபடப் போன துறவியோ அல்லது வேடமிட்டுப் பணந்திரட்டும் வேடதாரியோ அறியோம்.

ருத்ரப்பிரயாகையில் சிற்றுண்டி அருந்தினோம். பிற்பகல் ஒரு மணிக்கு ரிஷிகேசம் போய்ச் சேர்ந்தோம்.

பத்ரி எப்போதும் ஆறுமாதம் பனிக்கட்டியால் மூடிக் கிடக்கும் ஊர் முழுவதும் ஒரே பனிக்கட்டி மயமாய் இருக்கும். அப்போது அங்கே மக்களோ பிற உயிர்களோ வசிக்கவோ நடமாடவோ முடியாது. நாராயணர் திருக்கோயிலும் பனிக்கட்டியால் மூடிக்கிடக்கும். மே மாதம் முதல் வாரத்தில் தான் ஊரில் படிந்திருக்கும் பனிக்கட்டியை இராணுவத்தினர் வெட்டி எடுத்து அப்புறப்படுத்துவார்கள். பாதைகளில் படிந்துள்ள பனிப் பாறைகளையும் அகற்றிப் போக்கு வரத்துக்கு உரியதாகச் செய்வார்கள். அதற்குப் பிறகுதான் யாத்ரீகர்கள் வர அநுமதிக்கப் படுகின்றனர். பத்ரியிலிருந்து 15 மைல் தூரத்தில் சீனா நாட்டின் எல்லை இருக்கின்றது.

15-5-78 இரவு எட்டு மணிக்கு ரிஷிகேசத்திலிருந்து எங்கள் வண்டி புறப்பட்டு 16-5-78 இரவு எட்டு மணிக்கு அமிர்தசரஸ் போய்ச் சேர்ந்தது. மாலை நான்கு மணிக்குப் போய்ச் சேர வேண்டிய வண்டி ஆங்காங்கே ஸ்டேஷன்களில் நீண்ட நேரம் நின்று நின்றுப் போனதால் அமிர்த சரசுக்கு இரவு எட்டு மணிக்குப் போய்ச் சேர்ந்தது. மறுநாள் காலையில் ஜம்முவிலிருந்து காஷமீருக்குப் பஸ்களில் போகவேண்டியிருந்ததால் அன்றிரவே தங்கக் கோயிலையும் மற்ற இடங்களையும் பார்க்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. முதலில் ஜாலியன் வாலாபாக் படுகொலைகள் நடந்த இடத்துக்குப் போனோம்.

## ஜாலியன் வாலாபாக்

இது சுற்றுச் சுவர்கொண்ட ஓர் இடம். இதற்குள் போக வர ஒரு வழிதான் உண்டு. ஆங்கிலேயர் ஆட்சியில், அவர்கள் கொண்டு வந்த 'ரௌலட்' சட்டத்தை எதிர்த்து இந்திய நாடே கொதித்து எழுந்தது. தங்கள் எதிர்ப்பைக் காட்ட இங்கும் 13-4-1915-ல் மக்கள் கூடினர். இதை அறிந்து ஜெனரல் டையர் என்னும் ஆங்கில அதிகாரி ராணுவத்துடன் இங்கு வந்து சேர்ந்தான். எவ்வித எச்சரிக்கையும் செய்யாது ஆண் பெண் குழந்தை என்னும் பாகுபாடின்றி அரக்கனைப் போல் கண்மூடித் தனமாக மக்களை நோக்கிச் சுட்டான். மக்கள் பீதியுற்று வெளியேறும் வழிநோக்கி ஓடினர். இராணுவத்தினரோ இரக்கமின்றி கண்டபடி சுட்டு அந்த இடத்தைப் பிணக்காடு ஆக்கினர். தப்பி வெளியே வந்தவர்களை ஊர்ந்து போகச் செய்து கொன்றார்கள். பெண்களையும் குழந்தைகளையும் இம்சித்தனர். பயந்து ஓடிய மக்களில் சுமார் 200 பேர் அங்கு இருந்த கைப்பிடியில்லாக் கிணற்றில் விழுந்து மடிந்தனர். அப்போது இராணுவத்தைக் கொண்டு டையர் என்னும் கொடும்பாவி செய்த பயங்கரமான கொடுமைகளுக்கு அளவே இல்லை.

1972 ஆம் ஆண்டு வரை பழைய இடம் அப்படியே இருந்தது. இப்போது அது ஒரு பூங்காவாகக் காட்சி அளிக்கின்றது. குண்டுகள் படிந்த இடங்களும் பாழும் கிணறும் உயிர்த்தியாகம் செய்தவர்களின் நினைவுச் சின்னங்களாக உள்ளன. மனத்தை உருக்கும் கோரச் செயல்கள் நடந்த அந்த இடத்தைப் பார்த்து உயிர் நீத்த உத்தமர்களுக்கு அஞ்சலி செலுத்தி விட்டுச் சீக்கியர்களின் புகழ் வாய்ந்த பொற் கோயிலுக்குப் போனோம்.

## பொற் கோயில்

அமிர்தசரஸில் உள்ள இப் பொற் கோயிலின் சுற்றுச் சுவரில் கோபுரங்களோடு கூடிய அகன்ற நான்கு நுழை வாயில்கள் திசைக்கு ஒன்றாக உள்ளன. உள்ளே போகின்றவர்கள் ஆண்கள் தலைப்பாகையுடனும் பெண்கள் முக்காடு இட்டவண்ணமும் போகவேண்டும். நுழை வாயிலின் முன் கம்பிப் பரப்பின் இடையே தண்ணீர் ஓடு கின்றது. அதில் கால்களை அலம்பிக்கொண்டு உள்ளே போனோம். இது மிகப்பெரிய அகன்ற இடம். இதன் நடுவே ஏரி போன்ற பெரிய குளமும் அதன் நடுவே பிரசித்திப் பெற்ற பொற் கோயிலும் இருக்கின்றது. குளத்தைச் சுற்றியிருந்த அகன்ற இடத்தைப் பளிங்குக் கற்களைப் பரப்பி பரவிச் சுத்தமாக வைத்துள்ளனர். சுற்றுச் சுவரை ஒட்டி நீண்ட கூடம் இருக்கின்றது. அதில் பலர் அமர்ந்து வேத புத்தகம் ஓதிக்கொண்டும் தியானத்தில் அமர்ந்தும் இருந்தனர். இங்கு எங்கும் நிசப்தம் நிலவியது. நாங்களும் மௌனமாகக் குளத்தையும் கோயிலையும்வலம் வந்து கோயிலின் முன் வாயிலை அடைந்தோம். குளத் தின் நடுவிலிருந்த கோயிலை அடைய பாலம் இருந்தது. அதன்மீது சென்று கோயிலை அடைந்தோம். கூட்டமாக இருந்தும் இடிபாடுகள் இல்லை. எல்லோரும் வரிசையாகச் சென்று வரிசையாக வந்தனர். இது இங்குள்ள பழக்கம்.

நாங்களும் வரிசையாகச் சென்று கோயிலுக்குள் போனோம். கோயிலுக்குள் நடு மையமான இடத்தில் ஒரு மேடையும் அதன்மீது சரிகை வேலைப் பாடுகளோடு கூடிய பட்டு விரிப்பின் மீது 'கிரந்த சாஹிப்' என்னும் சீக்கிய வேதம் வைக்கப்பட்டிருந்தது. இதைத்தான் யாவரும் வழிபடு கின்றனர். இதை வணங்கி விட்டுப் பக்கத்தில் மிக இனிமை யாகப் பாடிக்கொண்டிருந்த ஒருவர் முன் போய் அமர்ந்து சிறிது நேரம் இசை கேட்டோம். இங்கு கோயிலைச் சுற்றிலும் ஆங்காங்கே மேஜையின்மீது பட்டு விரிப்பின் மேல் வேத புத்தகத்தை விரித்து வைத்துக் கொண்டு பலர் மௌனமாக ஓதிய வண்ணம் இருந்தனர்.

கலைநுட்பமும் வேலைப்பாடும் அமைந்த தங்கத் தகடுகள் வேய்ந்த சுவர்கள். தங்கத்தாலான வட்ட வடிவமான மேல் விதானம். கோயில் முழுவதும் தங்கு மயமாயிருந்தது. இவற்றின் வேலைப்பாடுகளும் கலை அழகும் சொல்லும் தரமல்ல. பார்க்கப் பார்க்க அதிசய மாயிருந்தது. சுற்றி சுற்றிப் பார்த்தோம். தரை பளிங்குத் தரை. கோயில் மூன்றடுக்கு மாடியாயிருந்தது. கீழ் தளத்திலிருந்து மாடிக்குப் படியேறிப் போனோம். அங்கும் பலர் அமர்ந்து வேத புத்தகம். ஓதிக்கொண்டிருந் தனர். இங்கு நடு மையமான இடத்தில் ஒருவர் மிகப் பெரிய வேத புத்தகம் ஒன்றை விரித்து வைத்துக் கொண்டு ஓதிக் கொண்டிருந்தார். இப்புத்தகம் விரிந்த நிலையில் 10 அடி நீளமும் 2 அடி அகலமும் 1 அடி உயரமும் உடைய தாயிருந்தது. நாங்கள் பெருங் கூட்டமாகச் சூழ்ந்த போதும் வேதம் ஓதிய ஓதுவார்கள் எங்களை ஏறிட்டும் பார்க்கவில்லை. கருமமே கண்ணாய் ஒருமை மனத் தோடு ஓதிக் கொண்டிருந்தனர். அங்கு எங்கும் அமைதி நிலவியது. போன நாங்கள்தாம் ஒருவரோடு ஒருவர் குசு குசுவெனப் பேசி அமைதியைக் குலைத்துக் கொண் டிருந்தோம். தொழ வந்த அவ்வூர் மக்கள் எங்களை அதிசயப் பிறவிகளைப் பார்ப்பதைப் போல் வியந்து

நோக்கினர். கீழ் தளத்திலிருந்து அண்ணாந்து பார்த்த மேல் விதானத்தை இப்போது அருகே இருந்து நெருங்கிப் பார்த்தோம். இத் தங்க விதானம் புதுப்பிக்கப்பட்டு புத்தம் புதிதாக விளக்கொளியில் ஒளிமயமாக விளங்கியது. கொடிகளும் பூக்களுமாய் கலையழகு மிளிர எழில் கொழிக்கும் ஓவியம்போல் திகழ்ந்தது. நீண்ட நேரம் சுற்றிச் சுற்றி வந்து ஆசை தீரப் பார்த்து மகிழ்ந்தோம். ஒருவாறு அந்த இடத்தை விட்டு அகன்று மூன்றாம் மாடிக்குப் போனோம். சுவர்கள் மீதும் கோபுரத்தின் மீதும் தங்கக் கலசங்கள் அலங்காரமாக நின்றன. அதிசயமிக்க இச்கோயிலைப் பார்த்துக் கொண்டு கீழிறங்கி வந்தோம். அங்கே ஒருவர் பெரிய தாம்பாளத்தில் சுடச் சுடக் கேசரி என்னும் இனிப்பை வைத்துக் கொண்டு எல்லாருக்கும் வழங்கினார். பெற்றுக் கொண்டு வெளியே வந்தோம். இது சீக்கியர்களுக்கு சமயமும் உணர்ச்சிகளும் நிரம்பிய புனித இடமாகும். இதை எங்கள் கூட்டம் உணரவில்லை. சீக்கியர்கள் எவ்வளவு பக்தியோடு இங்கு வந்து வழிபடுகின்றனர். இந்த இடத்தின் ஒவ்வொரு அங்குலமும் அவர்களுக்குப் புனிதமானது.

சீக்கிய மதம், தூய்மையே வடிவான குருநானக் முதலாகப் பத்து குருமார்களின் வழி வந்தது. இரண்டாவது குரு அங்காட் என்பவர் தமது முன்னோர் பாடிய பாடல்களையும் ஞான மொழிகளையும் தொகுத்துக் கொடுத்தார். அதுவே சீக்கியர்களின் 'ஆதி கிரந்த சாஹிப்' ஆகும். இவருக்குப் பின் வந்த குரு 'அமரர் தாஸ்' என்பவர். இவர் இந்து முஸ்லிம் ஒற்றுமைக்கு வழிகோலினார். நான்காம் குரு இராம தாசருக்கு அக்பர் அமிர்தசரஸில் ஒரு நிலம் கொடுத்தார். அதில் ராமதாஸர் ஒரு பெரிய குளம் வெட்டினார். அக்குளத்தின் நடுவில் ஐந்தாம் குருவாக வந்த குரு அர்சுன்மல் பிரசித்தி பெற்ற இந்தப் பொற் கோயிலைக் கட்டினார். இது சீக்கியர்களுக்கு ஓர் மைய இடமாக

அமைந்தது. இக்கோயில் முதலில் ஹரிக்குக் கோயிலாகி 'ஹரி மந்திர்' எனப் பெயர் பெறிற்ருந்தது. பின்னர் இது 'தர்பார் சாஹிப்' ஆயிற்று. இதைச் சுற்றிச் சீக்கிய மக்கள் திரண்டனர். இப்போது இது சீக்கிய நாடு ஆயிற்று. இந்நிலையில் குரு அர்சுன்மல் என்பவர் தமக்கு முன் இருந்த குருமார்களின் பாடல்களையும் மொழிகளையும் தொகுத்து இப்போதுள்ள 'ஆதி கிரந்த சாஹிப்' உருப்பெறச் செய்தார். அப்போது ஆட்சியில் இருந்த ஜிஹாங்கீர் மன்னன் அர்சுன்மல் என்பவரைச் சிறை யிலிட்டான். இவர் சிறையிலேயே மாண்டார். இதிலிருந்து சீக்கியச் சமய மக்கள் போர் வீரர்களாகவும் மாறினர்.

மொகலாயப் பேரரசர் அவுரங்கசீப் செய்த கொடுமை களால் சீக்கிய குரு ஹரி கோவிந்தசிங் சீக்கிய மக்களை இந்து முஸ்லிம் என்னும் இரு வகுப்பிலும் சேராத ஒரு தனி வகுப்பாகச் செய்தார். அதன் பின் அவர்கள் வாழ்ந்த இடமும் சீக்கிய மாகாணமாக ஆயிற்று. இவர்கள் தங்களைக் காத்துக் கொள்ளும் முயற்சியில் போர் மறவர்களாக மாறினர். வந்த எதிர்ப்புகளையெல்லாம் எதிர்த்து நின்று வென்று சீக்கியர்கள் நிரம்பிய பஞ்சாப் மாகாணத்தை நாட்டினர். பின்னர் இது ஆங்கில ஆட்சியின் கையில் சிக்கியது. இந்த வீர மரபினருக்கு உயிர்நாடியாய் இருப்பது குருநானக்கின் வாழ்க்கையும் மொழிகளும் ஆகும். இதையே கோயிலில் வைத்து வழிபடவும் செய்கின்றனர்.

## இலட்சுமி நாராயணர் கோயில்

பொற் கோயிலை விட்டு இலட்சுமி நாராயணர் கோயிலுக்குப் போனோம். இது பளிங்காலான மிகப் பெரிய கோயில். மூலத் தானத்தில் இலட்சுமி நாராயணரும் அதன் இடப்பக்கச் சந்நிதியில் ராதா கிருஷ்ணரும் வலப் பக்கம் இராமர் பட்டாபிஷேகமும் உள்ளன. நாங்கள் போனபோது வழிபாடு நடந்து கொண்டிருந்தது. பலர்

இனிமையாகச் சந்நிதி முன் நின்று பக்திப் பாடல்களைப் பாடிக் கொண்டிருந்தனர். ஆரத்தி காட்டி வழிபாடு நடந்தது. வழிபட்டுக் கொண்டு எதிர்ப்புறத் திருந்த துர்க்கையம்மன் கோயிலுக்கும் போய் வணங்கி விட்டு இரயில் நிலையம் போய்ச் சேர்ந்தோம்.

யாத்திரைக் குழுவிலிருந்த பலர் பொற் கோயிலை இரவில் விரைந்து பார்த்ததில் நிறைவு கொள்ளவில்லை. மறுநாளும் தங்கியிருந்து பகலில் சாவதானமாகப் பார்க்க விரும்பினர். பயண நிர்வாகி அதற்கு ஒப்பவில்லை. மறுநாள் காலையில் காஷ்மீர் போவதற்கு ஜம்முவில் பஸ்கள் பேசி வைத்திருப்பதாகவும் திட்டப்படி காலையில் ஜம்மு போய்ச் சேராவிடில் காஷ்மீர் பயணம் தடைப்படும் என்றும் கூறித் தங்குவதற்கு மறுத்தார். இரவே புறப்பட்டு விட்டோம். அதிகாலையில் போய்ச் சேர வேண்டிய இரயில் வண்டி காலை பத்து மணிக்குத் தான் ஜம்மு போய்ச் சேர்ந்தது. வண்டி தாமதமாகப் போய் சேர்ந்த தால் காஷ்மீர் போகும் பஸ்கள் கிடைக்கவில்லை. அமிர்தசரஸில் தங்கிப் போக விரும்பிய அன்பர்கள் முணு முணுத்தனர். ஜம்முவிலும் பார்க்க வேண்டிய பல கோயில்கள் இருப்பதால் அவற்றைப் பார்ப்பதென்று முடிவு செய்யப்பட்டது.

## ஜம்மு தாவி

புதன் 17-5-78 மாலை நான்கு-முப்பது மணிக்கு டெம்போவில் ரகுநாத் கோயிலுக்குப் போனோம். வழியில் தாவி ஆற்றின் மீதுள்ள பாலத்தைக் கடந்து சென்றோம். இந்த ஆறு இங்கு ஓடுவதால் இந்த ஊர் 'ஜம்மு தாவி' என்று பெயர் பெற்றது. கோயிலின் முன் உள்ள கடைகளில் பலர் சால்வைகள் வாங்கிக் கொண்டனர்.

ரகுநாத் கோயிலின் கோபுரங்களின்மீது ஏராளமான தங்கக் கலசங்கள் காட்சி அளித்தன. இக்கோயில் காஷ்மீர்

மன்னர்களால் கட்டப்பட்டது. கோயிலுக்குள் நுழைந்ததும் முதற் சந்நிதியாக இருந்தது அநுமார் கோயில். அதை வணங்கி விட்டுக் கோடி லிங்கங்கள் உள்ள அறைகளுக்குப் போனோம்.

எட்டு அறைகளில் கோடி லிங்கங்கள் உள்ளன. இவை பல்வேறு வடிவில் உள்ள சாளக்கிராமங்களாகும். இவை பல அடுக்குகள் கொண்ட மேடைகளின்மீது பதித்து வைக்கப்பட்டுள்ளன. இம்மேடைகளை முறை யாகச் சுற்றி வந்தால் கோடி லிங்கங்களை வலம் வந்து முடிக்கலாம். அறையின் சுவர்களில் உள்ள கூண்டுகளில் அம்மையின் பல்வேறு வடிவங்களையும் இலட்சுமி சரஸ்வதி திருவுருவங்களையும் இராமாயணம் பாரதம் காட்சிகளை யும் தரிசித்துக் கொண்டு கோடி லிங்கங்களை வலம் வந்து முடித்துக் கொண்டு வெளியே வந்தோம். புறச்சுவர்களை ஒட்டித் தனி அறைகளில் தனித்தனி சந்நிதிகளாக தசாவதாரக் காட்சிகளும், அஷ்டலட்சுமிகளும் உள்ளன. இவற்றைத் தரிசித்துக் கொண்டு எதிர்ப் புறத்திலிருந்த மற்றொரு கோயிலுக்குப் போனோம். இங்கு இரண்டு சந்நிதிகளில் இரண்டு பெரிய படிக லிங்க மூர்த்திகள் எழுந் தருளியுள்ளன. ஒன்று ராஜா அமர்சிங் என்பவரின் சமாதி முன்னும் மற்றொன்று மகாராஜா குலாப்சிங் என்பவரின் சமாதி முன்னாலும் உள்ளன. குலாப்சிங்கின் சமாதி முன்னுள்ள சிவலிங்கம் சிறப்பு உடையது. இந்த லிங்கத்தின் முன் கற்பூர ஜோதி காட்டும்போது, அந்த ஒளியில் லிங்கத்தின் உள்ளே ஐந்து தலை நாகம் காட்சிப்படுகின்றது. அற்புதமான இந்த சிவலிங்க மூர்த்தியை வணங்கிவிட்டு இதை அடுத்திருந்த தனிக் கோயிலுக்குப் போனோம். இங்கு ராஜா ரணவீர் சிங்கின் சமாதியின் முன்னால் மிகப் பெரிய மரகத லிங்கம் கோயில் கொண்டுள்ளது. இது காணுதற்கரிய ஒப்பற்ற சிவலிங்க மூர்த்தியாகும். இப் பெருமான் எல்லாருடைய உள்ளங்களையும் கொள்ளை கொண்டார். நாங்கள் யாவரும் பெருமானைக் கட்டித்

தழுவி வணங்கினோம். அதை விட்டு அடுத்திருந்த இராம லட்சுமண சீதை மூர்த்திகளைத் தரிசித்துக் கொண்டு டாங்காவில் ரயில் நிலையத்தை அடைந்தோம்.

## ஜம்மு காஷ்மீர்

18-5-78 அதிகாலை நான்கு மணிக்கே எழுந்து குளித்து விட்டுச் சிற்றுண்டி அருந்தினோம். ஏழு-முப்பது மணிக்குப் பஸ்களில் காஷ்மீர் நோக்கிப் போனோம். காஷ்மீரின் தலைநகரம் ஸ்ரீநகர் ஆகும். இது ஜம்முவிலிருந்து 300கி.மீ. தூரத்தில் இமயச் சிகரங்களின் நடுவில் 7000 அடி உயரத்தில் இருக்கின்றது. ஸ்ரீநகருக்குப் போகும் மலைப்பாதை அகலமானது. வண்டிகள் போவதற்கும் வருவதற்கும் பாதை தாராளமாய் இருந்தது. இராணுவ லாரிகள் சாரி சாரியாக வரவும் போகவுமாய் இருந்தன. நண்பகல் உணவை வழியில் ஓரிடத்தில் உண்டோம். மாலை நான்கு மணி சுமாருக்கு ஸ்ரீநகரிலிருந்து 75 கி. மீ தூரத்திலிருந்த 'வீரநாக்' என்னும் ஜீலம் நதியின் உற்பத்தி ஸ்தானத்தைப் போய்ப் பார்த்தோம்.

காஷ்மீர் பாதையிலிருந்து பிரிந்து 7 மைல் தூரம் மலைப்பாதையில் கீழ்நோக்கிப் போனோம். பல மலைகள் ஒன்று கூடிய பள்ளத்தாக்கில் இது இருக்கின்றது. ஒரு மலைக்குகையின் முன் 40 அடி சதுரமான பெரிய குளம். இதன் ஆழம் 54 அடி. இக்குளத்திலிருந்து தண்ணீர் எப்போதும் வழிந்தோடிய வண்ணம் இருக்கின்றது. இந்நீர் பனிக்கட்டியைப் போன்று குளிர்ச்சியாய் இருந்தது. குளம் எண்கோண வடிவில் இருந்தது. இதைச் சுற்றியிருந்த கட்டிடமும் அவ்வாறே இருந்தது. இது ஜிஹாங்கீர் காலத்தில் அமைந்தது. இதற்குச் சிறிது தூரத்தில் மற்றொரு ஊற்று கொப்பளித்துக் கொண்டு வெளியே வந்தது. இவற்றைச் சுற்றி அழகிய பூங்கா இருந்தது. குளத்தின் அருகில் இரண்டு சிவாலயங்கள் உள்ளன. இந்த

இடம் முன்னால் 'அமர்நாத்' என்று அழைக்கப்பட்டது. இப்போது 'வீரநாக்' என்று அழைக்கப்படுகின்றது. இது 6000 அடி உயரத்தில் இருக்கின்றது. இதைப் பார்த்துக் கொண்டு ஸ்ரீநகர் நோக்கிப் போனோம். வழியில் இரண்டு குகைப் பாதைகளைக் கடந்தோம். இதில் ஒரு பாதை குறிப்பிடத்தகுந்தது. இது 3 கி. மீ. தூரம் உடையது. குகைக்குள் நெடுகிலும் கூரையில் மின் விளக்குகள் பொருத்தி வைக்கப்பட்டுள்ளன. இது ஜவஹர்லால் நேரு காலத்தில் கட்டப்பட்டது. இப்பாதை வண்டிகள் வருவதற்கு ஒரு வழியும் போவதற்கு ஒரு வழியுமாக இருக்கின்றது. பத்ரிநாத் பாதையில் இமயத்தின் சாரலில் வெள்ளாமை செய்வதைப் போலவே இங்கும் மலைச் சரிவுகளில் 10 அடி 15 அடி அகலத்துக்கு நிலத்தை மட்டம் செய்து அதில் பயிர் செய்கின்றனர். எட்டிப் பார்க்க அச்சம் தரும் அம்மலைச் சரிவில் மக்கள் வீடும் கட்டிக்கொண்டு மனைவாழ்க்கையும் பயிர்த்தொழிலும் செய்யும் அதிசயம் கண்டு வியந்தோம். இங்குள்ள வெள்ளாடுகளின் உடம்பில் 2 அடி நீளமுள்ள உரோமம் வளர்ந்து தொங்கியது. இது ஆடுகளுக்கு அவ்விடத்துக் குளிரைத் தாங்கிச் கொள்வதற்கு இயற்கை அளித்திருக்கும் பாதுகாப்பாகும்.

காஷ்மீர் செல்லும் பாதை மலைத்தொடர்களின் சரிவில் சென்றது. பஸ் மலைமீது ஏற்றப் பாதையில் ஏறிச் சென்றது. இது பெரிய மண்மேட்டின் ஒரு எறும்பு ஊர்ந்து செல்வதைப் போன்று இருந்தது. பாதை நெடுகிலும் அதைச் சூழ இருந்த நிலப்பரப்புக்களும் பள்ளத்தாக்குகளும் கொழுமையான பசும்புல் தரைகளும் வானைத் தொடும் உயர்ந்த மலைக்குவடுகளும் அவற்றின் சரிவில் ஓங்கி வளர்ந்திருந்த பல்வகை மரங்களும் தெய்வ வனப்புடன் விளங்கின. பஸ், மலைமீது வளைந்து வளைந்து ஏறிச் செல்லச் செல்ல இயற்கையின் வனப்பும் எழில் மிகுந்த அழகும் மிகுந்து உள்ளத்தைக் கவர்ந்தது. இந்த உயரத்தில் காற்றழுத்தம் குறைந்தது குளிரின் கடுமை மிகுந்தது. ஜம்முவில்

காற்றைத் தேடிய நாங்கள் இங்கு போர்த்துக் கொள்ள போர்வையைத் தேடினோம். ஸ்ரீநகரை நெருங்கிய நாங்கள் முதலில் உயரமான ஸ்ரீசங்கராச்சாரியார் சிகரத்தையும் கோயிலையும் கண்டோம்.

மாலை ஆறு-முப்பது மணிக்கு ஸ்ரீநகரை அடைந்து அங்குள்ள ரிவர் வியூ (River View) ஓட்டலில் தங்கினோம். ஓட்டல் ஜீலம் நதியின் கரைமீது இருந்தது. அறையின் தரையில் சணல் நார் விரிப்புக்கள் விரிக்கப்பட்டிருந்தன. இது குளிருக்கு இதமாயிருந்தது. இரவு ஒன்பது மணிக்கு உணவருந்திப் படுத்தோம்.

## 19-5-78 முதல்நாள் காஷ்மீர்

பூலோக சுவர்க்கம் எனப்படும் ஸ்ரீ நகர் அசுத்தமா யிருந்தது. ஊரில் மக்கள் நெருக்கம் அதிகம். மக்கள் மண் வீடுகளில் வசித்தனர். வீடுகளும் தெருக்களும் குப்பை நிரம்பி அசுத்தமாயிருந்தன.

ஜனத்தொகையில் நூற்றுக்குத் தொண்ணூற்றைந்து பேர் முஸ்லிம்கள். மீதி ஐந்துபேர் காஷ்மீர் பண்டிதர்கள். பண்டைக்காலத்தில் காஸ்யப முனிவர் இங்கு வாழ்ந்திருந் தார். அதனால் இந்நகரம் அவருடைய பெயரை ஒட்டிக் 'காஷ்மீர்' என்று பெயர் பெற்றது. பண்டிதர்கள் சம்ஸ் கிருதம் நன்கு கற்றவர்கள். இங்குள்ள பிரதாப் கல்லூரி சிறந்த அறிஞர்களைப் பேராசிரியர்களாகக் கொண்டு நடைபெறுகின்றது. ஆசிரியர்கள் அடக்கமும் நற்குணமும் மேலான தோற்றமும் உடையவர்கள்.

குளிர்காலத்தில் ஊர் முழுவதும் பனி படர்ந்து உறை யும். இது வெயிற் காலத்தில் கரைந்து மக்கள் செய்த அசுத்தங்களையும் அழுக்குக் குட்டைகளையும் அடித்துச் செல்லும். அசுத்தங்களில் இருந்த துர்நாற்றத்தையும் அதில் உற்பத்தியான நோய்க்கிருமிகளையும் பனிக்

காலத்துக் குளிர் நீக்கிவிடும். என்றாலும் மக்களின் சுகாதாரம் போற்றத் தகுந்ததாயில்லை.

மக்கள் அணிந்திருந்த ஆடைகள் குளிர்காலத்துக்கு ஏற்றதாயிருந்தது. ஆண் பெண் இரு பாலாரும் பட்டு அல்லது உல்லன் துணியாலான நீண்ட கையுடைய நீண்ட அங்கிகளை அணிந்திருந்தனர். முதியவர்கள் மரத்தாலான பாதரட்சைகளை அணிந்தனர். இளைஞர்கள் நீண்டகால் சராயும் (பாண்ட்) அங்கியும் பஞ்சாபிகள் அணியும் தலைப்பாகையும் அணிந்தனர். பெண்கள் நெற்றியில் பொட்டும் தலைமீது துணியையும் அணிந்தனர். காதுகளின் ஓரத்தில் வளையங்களைக் குத்திக் கொண்டிருந்தனர். பெண்களிலும் பலர் சம்ஸ்கிருதம் படித்த பண்டிதைகளாயிருந்தனர்.

இங்குள்ள இந்து முஸ்லிம் இருபாலாரும் சம்ஸ்கிருதம் உருது பர்சிய மொழிகள் கலந்த கலவை மொழியைப் பேசினர். இது எழுத்தில் இல்லை; பேச்சு மொழியாக உளது. வியாபாரம் ஆட்சி ஆகிய இரு துறைகளிலும் உருது மொழியைப் பயன்படுத்தினர். முஸ்லிம்கள் இந்நாட்டைப் பலமுறை படையெடுத்து வசப்படுத்தி இங்கிருந்த இந்துக்களை முஸ்லிம்களாக மாற்றினர். அதனால் இங்கிருக்கும் பெரும்பான்மை முஸ்லிம்கள் மதம் மாறிய இந்துக்களே ஆவார்கள். அணியும் அணிகலன்களையும் பேசும் மொழியையும் கொண்டு இவர் இந்து இவர் முஸ்லீம் என்று எளிதில் வேறுபடுத்திக் காண முடியாது. நெற்றியில் அணிந்த பொட்டுதான் இந்து என்ற அடையாளத்தைக் காட்டியது. இரு மதத்தாரும் ஒரே விதமான உணவையே அருந்தினர். அரிசியும் புலாலும் எல்லாருக்கும் பொது உணவாயிருந்தன. குளிர் நாடு ஆதலால் எல்லாரும் பலமுறை டீ பருகினார்கள். பனிக்காலத்தில் குளிரைத் தணித்துக் கொள்ள சின்ன மண் சட்டியில் நெருப்பை இட்டு, அதைச் சின்ன மூங்கில்

புட்டியில் வைத்து அதை மேல் அங்கிக்குள்ளே வைத்துக் கொண்டனர். அரிசி முதன்மையான ஆகாரமாயிருந்த தால் நெல்லை அதிகமாக விளைவித்தார்கள். அரிசி செந்நிறமாயிருந்தது. பாலும் தயிரும் நிறைய உண் கின்றனர். இங்கு ஆப்பிள், பேரி போன்ற பழவகைகள் நிறைய விளைகின்றன. அதனால் இவை மலிவாகக் கிடைக்கின்றன. இந்து பண்டிதர்கள் சைவர்களாயுள் ளனர். சத்தி வழிபாடும் செய்கின்றனர். இவர்கள் துறவை ஆதரிப்பதில்லை. பலர் இல்லறத் துறவிகளாயுள்ளனர். தத்துவ ஞானம் உடையவர்களாயும் உள்ளனர். இவர்கள், மேலைநாட்டுத் தத்துவ ஞானத்தின் முடிவு இந்தியநாட்டுத் தத்துவஞானத்தின் ஆரம்பம் என்று பெருமிதத்தோடு மொழிகின்றனர். சைவத்தில் 'காஷ்மீர் சைவம்' என்றே ஒன்று உளது. இதை வாசுகுப்தா என்பவர் தோற்றுவித்து அதற்குத் தத்துவ நூலும் செய்துள்ளார். நூலின் பெயர் 'சிவசூத்திரம்' என்பது சைவசித்தாந்தத்தைப் போலவே இதுவும் முப்பொருள் உண்மையைக் கூறுகின்றது.

பண்டிதர்கள் உடலுழைப்பு வேலைகளைச் செய் வதில்லை. அறிவியற் பணிகளையே செய்கின்றனர். நெய்தல் மரவேலை முதலியவற்றை முஸ்லிம்களே செய் கின்றனர். பெண்கள் அதிகம் படிக்காதவர்களா யுள்ளனர். இவர்களிடம் தீண்டாமை என்பது இல்லை. இந்துக்களும் முஸ்லிம்களும் நட்போடு பழகுகின்றனர். இந்து பண்டிதர்களின் வீட்டுக்குள் சமையல் அறை வரை முஸ்லிம்கள் தாராளமாய்ப் போக வர உள்ளனர். பண்டிதர்களுக்குள் பிறப்பால் உயர்வு தாழ்வு இருந்தாலும் பெண் கொடுத்து வாங்குவதிலோ சமபந்தி போஜனம் செய்வதிலோ தடை இருப்பதாகத் தெரியவில்லை.

### ஹரி பர்வதம்

ஸ்ரீ நகரிலிருந்து ஒரு மைல் தூரத்தில் ஹரி பர்வதம் இருக்கின்றது. இம்மலைமீது அம்மைக்குக் கோயில்

ஒன்றும் இருக்கின்றது. இம்மலை தெய்விகமானது என்றும் இதைச் சுற்றுவது புண்ணியம் என்றும் இந்து மக்கள் கருதினர். அதனால் இந்து பண்டிதர்களும் பெண் களும் நாள்தோறும் அதிகாலையில் எழுந்து சென்று இம் மலையை வலம் வந்தனர். தாங்கள் வசிக்கும் அசுத்தமும் துர்நாற்றமும் உள்ள இடத்தைவிட்டு இங்கு நடந்து வந்து இங்குள்ள தூயகாற்றைச் சுவாசித்து விட்டுப் போவது இவர்களின் உடல் நலத்துக்கு எவ்வளவோ நன்மை ஏற்பட்டது. வழிபாடு உள நலத்தையும், இடம் உடல் நலத்தையும் அளித்தது.

**சங்கராச்சாரியார் மலை**

சங்கராச்சாரியார் மலை, பார்க்கவேண்டிய புனித இடங்களுள் ஒன்று. 'கிஸ்டி' என்னும் படகில் நதிமீது இம்மலைக்குப் போகலாம். படகு, மலை அடிவாரத் துக்குச் சிறிது தூரம்வரை போகின்றது. படகில் போய் இறங்கிச் சிறிது தூரம் நடந்து சென்று மலையடிவாரத்தை அடைந்தோம். அங்கு ஓர் ஆசிரமம் இருக்கின்றது. அது 'துர்கநாத்' எனப்பட்டது. அதில் பல துறவிகள் இருந் தனர். மலையின் உயரம் 1000 அடி. படிமீது ஏறி மலை உச்சியை அடைந்தோம். அப்போது உடம்பில் ஓர் புளகாங்கிதம் உண்டாயிற்று. மலையின் உச்சியிலிருந்து ஊரைப் பார்த்தபோது காஷ்மீர் பள்ளதாக்கு முழுவதும் தெரிந்தது. அழகிய பள்ளத்தாக்கிலிருந்த காஷ்மீர் நகரை அதைச் சூழ்ந்திருந்த பனிமலைகள், அதைக்காக்கும் காவல் தெய்வங்கள் போல் இருந்தன. அகன்ற ஏரிகள் நகர் முழுவதிலும் ஆங்காங்கே சிதறுண்டு கிடந்தன. பசுமையான காடுகளோடு கூடிய உயர்ந்த மலைகளின் பெருமையை ஏரிகள் என்னும் கண்ணாடிகள் பிரதி பலித்துக் கொண்டிருந்தன.

மலைமீது இருந்தது கற்கோயில். கோயிலின் உச்சி உருண்டையான ஸ்தூபி வடிவில் இருந்தது. சதுரமான

நிலப்பரப்பில் கோயில் இருந்தது. கோயிலில் சிவலிங்க மூர்த்தி மூன்று அடி உயரத்தில் அற்புதமாக எழுந்தருளி யிருந்தார். சாது ஒருவர் கோயில் அர்ச்சகராக இருந்தார். கோயிலை வழிபட்டோம்.

மைசூர் மகாராஜா அளித்த மின் விளக்குகள் கோயிலை அலங்கரித்தன. மின் விளக்கொளியில் கோயிலை ஊரின் புறத்தே வெகு தூரத்திலிருந்தே காணலாம்.

பரிவிராஜகராக சங்கரர் பாதசாரியாய்க் காஷ்மீருக்கு வந்தபோது சீடர்களுடன் இந்த மலையில் தங்கினார். அப்போது இங்கு இந்தச் சிவலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்தார். அதனால் இந்த மலை அவருடைய பெயரில் வழங்கப்பட்டது. சங்கரர் இங்கு வந்து தங்கியிருந்த போது ஒரு நிகழ்ச்சி நடந்ததாகப் பண்டிதர்கள் கூறு கின்றனர்.

இம்மலைமீது சங்கரர் தமது சீடர்களுடன் பல நாள்கள் தங்கியிருந்தார். அப்போது பண்டிதர்கள் அவரைப் போய்ப் பார்க்கவோ அவருக்கு வேண்டிய வசதி களைச் செய்தளிக்கவோ இல்லை. அதனால் சங்கரரும் அவருடைய சீடர்களும் பட்டினி கிடக்க நேர்ந்தது. பல நாள்களுக்குப் பின் சில பண்டிதர்கள் அவரைப் போய்ப் பார்த்தனர். அப்போது சங்கரர், பண்டிதர்களைப் பார்த்து "நாங்கள் இங்கு வந்து பல நாள்கள் ஆகின்றன. கேட்பாரற்றுப் பட்டினி கிடக்கிறோம். வந்த விருந்தினரை ஓம்பவேண்டியது தர்மம் என்பதைப் படித்த பண்டிதர் களாகிய நீங்கள் அறியாதிருக்க நியாயமில்லை. கற்றறிந்த நீங்கள் தர்மத்தைப் புறக்கணித்து விட்டீர்களே" என்று வருத்தத்தோடு கூறினார். அதற்குப் பண்டிதர்கள் சங்கரரைப் பார்த்துத் 'தப்பு எங்களுடையதல்ல. எங்களை நாடி ஊருக்குள் வருகின்றவர்களை மரியாதையாகவும் அன்புடனும் வரவேற்று உபசரிக்கிறோம். நீங்களோ இறைவனின் லீலையாகத் தோன்றிய உலகத்தையும்

உலகத்திலுள்ள எங்களையும் துறந்து ஊருக்கு மிகு தொலைவிலுள்ள இந்த மலையை நாடி இதன் உச்சியில் அமர்ந்து விட்டீர்கள். அதனால் நாங்கள் உங்களை வந்து பார்க்காதது இயல்பே. நீங்கள்தான் சிறந்த ஞானியாகவும் யோகியாகவும் இருக்கிறீர்களே! நீங்கள் பட்டினி கிடக்க வேண்டிய அவசியம்தான் என்ன? உங்கள் சித்தி வல்லபங் களைக் கொண்டு உங்களுக்கு வேண்டிய எல்லா பொருள் களையும் வரவழைத்துக் கொள்ள வேண்டி தானே!' என்றனர். அதற்குச் சங்கரர் 'உலகமே பொய்; அது இருப்பது போல் காண்பது மயக்கம்; அறியாமை. இதைப் பற்றி நாங்கள் ஏன் கவலைப்படவேண்டும்?' என்றார். அதைக் கேட்ட பண்டிதர்கள் 'தாங்கள் சொல்வது தவறு. உலகம் இருப்பது உண்மையே. இறை சக்தியின் தோற்றம் உலகம். காணும் உலகம் தோன்றி நின்று அழிதல் என்னும் முத்தொழிற்படுகின்றது. புறத் துறவு, கடவுளைப் பற்றிய உண்மையை அறியாததன் விளைவு ஆகும். சக்தியின் லீலையே உலகம். உலகம் முத்தொழிற்படுவதே அம்மையின் அருளால் ஆகும். மெய்ஞ் ஞானம் உலகத்தைப் பொய் என்று தள்ளுவதில்லை. ஆனால் அது இறைவனின் படைப்பு, அருட் சத்தியின் லீலை என்று உலகைக் காண் கின்றது' என்றனர்.

சங்கரருக்கு அருட்சத்தியின் அற்புத லீலா வினோதத் தைக் காட்ட எண்ணிப் பண்டிதர் ஒருவர், சத்தி மந்திரத்தை உச்சாடனம் செய்து தம்முன் இருந்த இடத்தைத் தொடவும் அந்த இடத்திலிருந்து நீர் சுரந்து வெளிப்பட்டதாம். இதைக் கண்ட சங்கரர் பண்டிதர் களின் தத்துவக் கொள்கைகளை ஏற்றுக் கொண்டாராம். இவ்வாறு ஒரு வரலாறு கூறப்படுகின்றது.

சங்கராச்சாரியார் மலையிலிருந்து இறங்கி ஒன்று—முப்பது மணிக்கு உணவகத்தை அடைந்து உணவருந்தி னோம். மாலை மூன்று முப்பது மணிக்கு டெம்போவில்

பூந்தோட்டங்களைப் பார்க்கப் போனோம். இது போன்ற பூந்தோட்டங்கள் மனித சமுதாயத்துக்கு அவசியம் வேண்டும். நாளெல்லாம் அல்லலுற்று அலுப்புற்ற மக்களுக்கு இப்பூங்காக்கள் சாந்தியளிக்கும்.

இனி, நகரத்துள் ஜன நெருக்கத்தாலும் பிறவற்றாலும் மாசுற்ற காற்றைச் சுவாசித்து நலிவுற்ற உடம்புக்கு, இத்தோட்டத்தின் தூயகாற்று நலம் பயக்கும் மருந்தாகும்.

கண்ணுக்குக் காட்சியாகவும் உடல் நலம் பேணும் மருந்தாகவும் இருந்து சமுதாயத்துக்கு உதவும் தோட்டங்கள் பல இங்கு உள்ளன.

அவற்றைப் பார்ப்பதற்கு முன்னால் நகருக்கு நீரளித்து உதவும் ஹர்வான்(Harwan)ஏரியைப் பார்க்கப் போனோம். இது உயர்ந்த மலைகளின் நடுவே இருக்கின்றது. ஏரிக் கரையின் கீழ் மிகப்பெரிய பூந்தோட்டம் இருக்கின்றது. இதை மேலும் அழகு படுத்த விரிவான வேலைகள் நடைபெற்றுக் கொண்டிருந்தன. நாங்கள் பூச்செடிகளினிடையே அவற்றைக் கண்டு இரசித்துக் கொண்டிருந்த போது திடீரென்று அங்குக் காஷ்மீர் முதல் அமைச்சர் கனம் ஷேக் அப்துல்லா அவர்கள் தோன்றினார்கள். அவர் சிரித்த முகத்தோடு எங்களை அணுகி நெருங்கிப் பழகிப் பலரை கட்டித் தழுவி இனிமையாகக் குசலம் விசாரித்தார். எங்கிருந்து வருகிறீர்கள்? எங்குத் தங்கியிருக்கிறீர்கள்? வசதிகள் எப்படி? ஊரைச் சுற்றிப் பார்த்தீர்களா? காஷ்மீர் நகர் உங்களுக்குப் பிடித்ததா? மகிழ்ச்சி அளித்ததா? என்றெல்லாம் வினவி நாங்கள் அளித்த மகிழ்ச்சி தரும் பதில்களைக் கேட்டுக் கொண்டு 'உங்கள் பயணம் இனிதாக இருக்கட்டும்' என்று வாழ்த்தி அனுப்பினார். இவருடைய இனிய மொழிகளும் எளிமையும் எங்கள் எல்லாருடைய உள்ளங்களையும் கவர்ந்தது. அடுத்து ஷாலிமார் தோட்டத்துக்குப் போனோம்.

## ஷாலிமார் தோட்டம்

உலகியற்கலைகள் பல. அவற்றுள் தோட்டக்கலையும் ஒன்று. மரங்களும் செடி கொடிகளும் பூக்களும் இயல்பாகவே காட்சிக்கு அழகுடையனவே என்றாலும் இவற்றைக் கலை நுட்பத்தோடு வரிசைப் படுத்தித் தொகுத்து அமைக்கும்போது அதன் அழகு பன்மடங்கு அதிகம் ஆகும். அதற்குக் காரணம் அறிவற்ற இயற்கையுடன் மனித அறிவும் சம்பந்தப் படுவதாலாகும். அறிவுடைய இடத்தில் இன்பம் உண்டு.

ஷாலிமார் தோட்டம் கலைத்திறத்துடன் அழகுபட அமைந்த மிகப்பெரிய தோட்டம் ஆகும். தோட்டத்தின் நடுவே நடைபாதை இருக்கின்றது. இதன் இருபுறமும் பூச்செடிகள் வரிசையாக இருந்தன. இச்செடிகளில் பூத்திருந்த பூக்களின் நிறங்களும் அவற்றின் வடிவங்களும், அவற்றைச் சுற்றிச் சூழ்ந்து அப்பூக்களில் தேனுண்ண ரீங்காரமிட்டுக் கொண்டு வட்டமிட்ட வண்டுகளின் கண்ணைப் பறிக்கும் நிறங்களும், சின்னதும் பெரிதுமான அவற்றின் வடிவங்களும் கண்ணைப் பறித்தன. பூச்செடிகளுக்கு அப்பால் பாதையின் இருபுறமும் பச்சைக் கம்பளம் விரித்தது போன்ற புல்தரையும் அதனிடை ஓங்கி வளர்ந்திருந்த பெரிய மரங்களும் அழகு ஊட்டிக் கொண்டிருந்தன. தோட்டத்தின் நடுப்பகுதியில் நீண்ட சதுரத் தொட்டிகளை அமைத்து அதனிடையில் பீறிட்டு அடிக்கும் நீர்த்தாரைகளை (Fountains) நெடுக வைத்திருந்தனர். அவை பலவித வடிவங்களில் நீரைப் பொழிந்து கொண்டிருந்தன. இவற்றின் அமைப்பும் அழகும் தோட்டக்கலையில் தேர்ந்த கலைஞர்களின் கலைத்திறத்துக்கும் கலை உணர்வுக்கும் கட்டியம் கூறின. இவற்றைக் கண்டு களித்த வண்ணம் சுற்றி வந்து அங்கிருந்த மேடைமீது அமர்ந்தோம். செடிகளில் பூத்துக் குலுங்கிய பூக்களிலிருந்த நறுமணத்தை வீசிய மென்காற்று சுமந்து கொண்டு வந்து நறுமணமூட்டி உள்ளத்துக்கும் உடலுக்கும் இதத்தை அளித்தது.

தோட்டமெங்கும் பலநாட்டு மக்கள் குழுமியிருந்து பூங்காவின் அழகை இரசித்த வண்ணம் உலவினர். பலர் அக்காட்சியைக் காமராவில் படம் எடுத்தனர். குழந்தைகள் பட்டாம்பூச்சிகள் போல் இங்குமங்கும் ஓடி விளையாடின. பலர் பசும்புல் தரையில் ஒய்வாக அமர்ந்திருந்தனர். இளம் ஜோடிகள் பலர் ஆனந்தமாகக் கைகோத்த வண்ணம் சிரித்துப் பேசி மகிழ்ந்து இன்புற்றுத் திரிந்தனர்.

நாம் பூந்தோட்டத்தில் காணும் இயற்கை அழகைக் கண்டு மகிழ ஞானிகள் அதன் உள்ளிருந்து அள்ளிவீசும் இறைவனின் கருணை உள்ளத்தைக் கண்டு களிக்கின்றனர்.

பின் **நிஷாத் கார்டனுக்குப்** போனோம். இது மிக உயரமான இடத்தில் இருக்கின்றது. ஒன்றுக்கொன்று உயர மாக ஐந்து பகுதிகளாக உள்ளன. பூச்செடிகளும் ரோஜாச் செடிகளும் பசும்புல் தரையும் வானளாவ உயர்ந்த மரங்களும் நீர் நிலைகளும் நீர்ச் சுரப்பிகளுமாக அமைந்து காண்போர் உள்ளத்தைக் கவர்ந்தன. அதை அடுத்துள்ள **சஸ்மி சாஹி தோட்டமும்** காணத் தகுந்ததாகும். இதில் நிலத்திலிருந்து ஊறிவரும் நீர் உடல் நலத்தைப் பேணும் நலம் வாய்ந்தது. இப்பூங்காக்களுக்கு எதிரில் மிகப் பெரிய டால் ஏரி இருக்கின்றது. இது ஸ்ரீ நகரின் நடுவில் இருக் கின்றது. படகில் ஏறி அறை நாள் சுற்றினால் ஸ்ரீநகர் முழுவதையும் பார்த்துவிடலாம். ஏரியின் மத்தியில் 'சார் சினார்' என்னும் இடம் இருக்கின்றது. இங்கு நான்கு சினார் மரங்கள் உள்ளன. இவை குடை கவித்ததைப் போன்று இந்த இடத்தைக் கவிழ்ந்து நிழல் பரப்பிக்கொண்டு இருக்கின்றன. இம்மரங்களின் காற்று உடம்புக்கு நல்லது. அதனால் மக்கள் இங்கு வந்து ஓய்வாகத் தங்கிப் போகின்றனர். இங்கு உணவகம் ஒன்றும் இருக்கின்றது. சினார் மரங்கள் நான்கு இங்கு இருப்பதால் இது சார் சினார் என்ற பெயரைப் பெற்றது. இங்கு வரப் படகுக்குக் கட்டணம் ஆள் ஒன்றுக்கு ரூ. நான்கு ஆகும், நாங்களும் இங்குப் போய்ச் சிறிது நேரம் இருந்து விட்டு வந்தோம்.

ஏரியின் ஒரு பக்கத்தில் நேரு பார்க் இருக்கின்றது. இப்பக்கத்தில் படகு வீடுகள் பல இருந்தன. இவை மாளிகைகளைப் போன்று எல்லா வசதிகளும் பெற்று இருக்கின்றன. வெல்வெட் மெத்தை, திண்டுகள், திரைச் சீலைகள், குஷன் நாற்காலிகள், குளிக்கும் பளிங்குத் தொட்டிகள், ஷவர் பாத், உயரமான மெத்தை விரிப்புகள் உள்ள படுக்கை அறைகள், இரத்தினக் கம்பளங்கள் விரித்த தரை, கைகழுவும் பேசின்கள், பக்கத்தில் கைத் துண்டுகள், விலையுயர்ந்த திரைச்சீலைகள் என்று இப்படிக் கண்கவர் வனப்பும், வசதியும் உள்ள இந்த படகு வீட்டுக்கு ஒரு இரவுக்குக் கட்டணம் ரூ. 300/- முதல் 600/- வரை ஆகும். நாள் கட்டணம் இதற்குக் கூறுவது கிடையாது. கட்டணம் ஒரு இரவுக்கு என்றே பேசப்படுகின்றது. இங்குத் தங்குகின்றவர்களுக்கு விரும்பும் எல்லாப் பொருள்களும் கிடைக்கும். அவற்றுக்குக் கட்டணம் தனி. சுவர்க்கத்தில் தேவர்கள் அநுபவிக்கும் பொருள்கள் மூன்று. அவை சுராபானம், தேவமாதர், ஆடல் பாடல்கள் ஆகும். இம்மூன்றையும் பணம் படைத்தவர் இங்குத் தாராளமாய்ப் பெற்று இன்புறலாம். அதனால் இது பூலோக சுவர்க்கம் என்று அழைக்கப்பட்டது. சுவர்க்கத்தை நாம் கண்ட தில்லை. ஆனால் பூலோக சுவர்க்கத்தை இங்குக் கண்முன் கண்டு அநுபவிக்கலாம்.

## கீர்பவானி

சனி 20-5-78 ஸ்ரீ நகர் 2ஆம் நாள் காலை எட்டு முப்பது மணிக்கு டாக்ஸியில் 30 கி.மீ தூரத்திலுள்ள கீர்பவானி என்னும் அம்மன் கோயிலுக்குப் போனோம்.

கோயில் சின்னது, ஆனால் கீர்த்தி பெரிது. காஷ்மீரில் முதல் முதல் மனிதன் தோன்றிய காலத்திலிருந்தே இக்கோயில் இங்கு இருக்கிறதாம். இராமபிரானின் விருப்பப்படி ஆஞ்சநேயர் மாதா ராகினி தேவியை

இலங்கையிலிருந்து கொண்டு வந்து இங்கு ஸ்தாபித்தாராம். முழு நிலாக் காலங்களில் இராமர் இங்கு வந்து வழிபட்டுச் செல்கின்றார் என்றும் இராவணன் மனைவி மண்டோதரி அஷ்டமியிலும் விபீஷணன் நவமியிலும் வந்து வழிபடுகின்றனர் என்றும் சொல்லப்படுகின்றது. 19ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஞானச் செல்வர்களாகிய இராமதீர்த்தரும் சுவாமி விவேகானந்தரும் இங்கு வந்து தங்கி வழிபட்டு மனச்சாந்தி பெற்றனர்.

கோயில் ஒரு சின்ன குளத்தின் நடுவில் இருக்கின்றது. மகாராஜா பிரதாப்சிங் 1909 - 1912-ல் இதைப் புதுபித்துக் கட்டினார். இது சினார் மரங்கள் நிரம்பிய சோலையின் நடுவில் இருக்கின்றது. கோயில் உள்ள குளத்தின் நீர் பௌர்ணமி தோறும் நிறம் மாறுகின்றது. இந்தியாவுக்கு அன்னியர் படையெடுப்பால் ஆபத்து நேரும் என்றால் அந்த ஆபத்தை முன் கூட்டியே இக்குளத்து நீர் கரு நிறமாக மாறி உணர்த்துமாம்.

இந்த இடம் தியானம் செய்வதற்கு ஏற்ற அமைதியான இடமாகும். பலர் தியானத்தில் அமர்ந்திருந்தனர். நாங்கள் முந்திரி பிஸ்தா திராட்சை முதலியவற்றை வாங்கிப் போய் அம்மனுக்கும் படைத்து வழிபட்டோம். அங்கிருந்த அர்ச்சகர் வழிபாடு செய்வித்து எங்கள் நெற்றியில் குங்குமத் திலகமிட்டு வாழ்த்தி அனுப்பினார். பிறகு கோயிலைச் சுற்றியிருந்த ஆஞ்சநேயர் சிவலிங்க மூர்த்திகளை வணங்கிவிட்டுப் புறப்பட்டோம். அடுத்து மன்ஸ்பால் ஏரிக்குப் போனோம்.

## மன்ஸ்பால் ஏரி

இந்த ஏரி கீர்பவானியிலிருந்து 12 கி.மீ. தூரத்தில் இருக்கின்றது. இதைச் சுற்றி நாற்புறமும் உயரமான மலைகள் வானளாவ உள்ளன. ஏரிக்கரையில் அழகான பூங்கா இருக்கின்றது. இதில் பல நிற ரோஜாச் செடி

களும் மற்ற பூச்செடிகளும் நிரம்பி உள்ளன. செடிகளி லெல்லாம் பூக்கள் நிரம்பப் பூத்துக் கண்ணுக்குக் காட்சி யாய் நறுமணம் வீசி வருவோரை வரவேற்று நின்றன. இது பிரபலமான சுற்றுலா இடமாகும். நாங்கள் போன போது மக்களும் மாணவர்களும் நிரம்பியிருந்தனர். இவர்கள் யாவரும் நாள் முழுவதும் இங்கு உல்லாசமாகப் பொழுதைக் கழிக்க உணவுப் பண்டங்களுடன் வந்தவர்கள். பலர் ஆங்காங்கே ஒய்வாக அமர்ந்தவண்ணம் சிரித்துப்பேசி உரையாடிக் கொண்டிருந்தனர். பன்னிற ஆடைகள் அணிந்த பள்ளிக் குழந்தைகள் பூச்செடிகளினிடையே பறந்தோடிய பட்டாம்பூச்சிகளைப் பிடிக்க அவற்றின் பின்னே, இவர்களும் பட்டாம்பூச்சிகளோடு பூச்சிகளாக ஓடித் திரிந்தன. சில குழந்தைகள் தோட்டத்தினிடையே குழந்தைகள் விளையாடுவதற்கென்று உள்ள ஊஞ்சலில் சறுக்குப் பலகையில் ஊஞ்சலாடியும் சறுக்கியும் விளையாடி மகிழ்ச்சி ஆரவாரம் செய்து கொண்டிருந்தன. சிலர் ஏரியில் படகுகளில் உல்லாசமாய்ப் பொழுதைக் கழித்துக் கொண்டிருந்தனர்.

இவற்றையெல்லாம் கண்டு களித்த நாங்கள் படகு களில் ஏறி ஏரியைச் சுற்றிவர விரும்பினோம். ஏரியின் கரையோரம் அழகான படகுகள் வரிசையாக நின்றன. ஒரு படகில் 6 பேர் அமர்ந்து போகலாம் எங்களில் 6 பேர் மட்டும் ஒரு படகை அமர்த்திக் கொண்டு ஏரியைச் சுற்றி வந்தோம். அகண்ட ஏரியும், அதிலிருந்த தெளிந்த நீரும், அணிவகுத்து நிற்பதைப் போன்று வரிசையாகக் கரையோரம் இருந்த அழகான படகுகளும் அதைத் தாண்டி இருந்த அழகொழுகும் பூக்கள் நிரம்பிய பூந் தோட்டமும், அதில் நடமாடிய அழகிய காஷ்மீர் மக்களும், மாணவரின் விளையாட்டும் கண்கொள்ளாக் காட்சியாக இருந்தன. அமைதியான இந்த இடம் இனிமையாகப் பொழுதுபோக்குவதற்கு ஏற்ற இடமாயிருந்தது. இம் மலையின் மறுபக்கம் பாகிஸ்தானின் எல்லையாகும்.

சிறிது நேரம் இனிமையாகப் பொழுதைக் கழித்துவிட்டு 'அசரத்பால்' என்னும் இடத்துக்குப் போனோம்.

## அசரத்பால்

இது முகம்மது நபியின் 'புனித முடி' வைத்திருந்த இடமாகும். முகம்மதியர்களுக்கு இம்முடி மிகவும் புனித மானது. இம்முடியை இப்போது பழையதொரு கட்டடத்தின் மேல்மாடியில் வைத்திருக்கின்றனர். இதை இப்போது ராணுவம் காத்து வருகின்றது. 1972-ல் இந்த முடி திருட்டுப் போய்விட்டது. அதன் காரணமாக நாட்டில் பெருங் கலவரங்கள் நடந்தன. பிறகு முடி கண்டு பிடிக்கப்பட்டு இப்போதுள்ள இந்த இடத்தில் வைக்கப் பட்டுள்ளது. முன்பு முடி இருந்த பழைய கட்டடம் இப்போது பெரிய பளிங்குக்கல் கோயிலாக கட்டப்பட்டு வருகின்றது. இந்த இடம் ஷாஜஹான் காலத்தில் கட்டப் பட்டது. இங்கிருந்து எங்கள் தங்கும் விடுதிக்குப் போனோம். உணவருந்திச் சிறிது நேரம் களைப்பாறினோம்.

ஸ்ரீநகருக்குள் ஜீலம் நதி ஓடுகின்றது. இந்த நதியின் நெடுகிலும் படகு வீடுகள் உள்ளன, நகர் முழுவதிலும் சோலைகளும் ஏரிகளும் நிரம்பி உள்ளன. இங்குள்ள மக்கள் அழகாகவும் சிவந்த நிறமுடையவர்களாயும் உள்ளனர். காஷ்மீர் பெண்கள் அழகிகள் என்பதைக் கண்டோம். பொன் நிறமும் நீண்ட மூக்கும் பவள உதடும் முத்துப் பற்களும் அமைந்த இனிய பார்வையும் அடக்கமான நடையும் அதற்கேற்ற உடையும் உடையவர்களாய் அழகாக இருந்தனர்.

இங்கு வியாபாரம் செய்வது மிகவும் கடினம். கடை களில் விலைகளைத் தாறுமாறாய்ச் சொன்னார்கள். ஒரு கடையில் குங்குமப்பூ கிராம் ரூ. 11-00க்கு வாங்கி னோம். அதையே நாங்கள் தங்கியிருந்த விடுதியில் வந்த வியாபாரிகளிடம் 1 கிராம் ரூ. 5-00 விலையில்

வாங்கினோம். குங்குமப் பூவில் மெல்லிய காகிதங்களை நிற மூட்டிக் கலந்தும் விற்கின்றனர். பார்த்து வாங்கவேண்டும். சால்வைகளும் புடவைகளும் குறைந்த விலைக்கு வாங்கித் தருவதாகக் கூறிப் புரோக்கர்கள் டாக்ஸியுடன் நம்மைப் படையெடுக்கின்றனர்.

6500 அடி உயரத்தில் உள்ள குல்மார்க்கும் 7000 அடி உயரத்தில் உள்ள பகல்காமும் பார்க்க வேண்டிய இடங் களாகும். இவை பனிமலைகளும் இயற்கை அழகும் உடைய எழில் கொஞ்சும் இடங்களாகும்.

ஞாயிறு 21-5-78 காலை ஏழரை மணிக்கே ஸ்ரீநகரி லிருந்து ஜம்முதாவிக்குப் புறப்பட்டோம். வழியில் அழகான காட்சிகளைக் கண்டு களித்த வண்ணம் பயணம் செய்தோம். சில இடங்களில் நீண்ட பாதையில் நெட்டை யான உயர்ந்த மரங்கள் இருபுறமும் இராணுவ சிப்பாய்கள் அணிவகுத்து நிற்பதைப் போன்று வரிசையாக இருந்தன. இருபுறமும் சூழ்ந்திருந்த உயரமான மலைகளும் பனிச் சிகரங்களும் அவற்றிலிருந்து பாய்ந்தோடி வந்த அருவிகளும் நீர் வீழ்ச்சிகளும் சடை சடையாக நீண்ட உரோமம் உடம்பெல்லாம் தொங்க வரும் ஆட்டுக் கூட்டங்களும் அவற்றை அவர்களுக்கே உரிய ஆடை அணிகளுடன் ஓட்டி வரும் ஜிப்சிப் பெண்களும் ஆண்களும் மலைச்சரிவுகளில் மிக முயன்று செய்திருந்த வேளாண்மை நிலங்களும் அச்சமிக்க அச்சரிவுகளில் வீடுகளைக் கட்டிக் கொண்டு வாழ்க்கை நடத்தும் அதிசயமும் பாதையின் ஒரு பக்கத்தில் படு பாதாளத்தில் பாய்ந்தோடி வந்த ஆறும் கண்ணுக்கும் கருத்துக்கும் இனிமை பயந்தன. எங்கள் வண்டி ஓட்டியும் கண்டக்டரும் பொறுப்பற்றவர்களாயிருந்தனர். பயங்கர மான திருப்பங்களுடைய இம்மலைப் பாதையில் கருத்தின்றி பேசிக்கொண்டும் நாற்புறமும் பார்வையைச் செலுத்திக் கொண்டும் வண்டி ஓட்டுநர் வண்டியை ஓட்டினார். இதைக் கண்டு எங்களுக்குச் சிறிது அச்சம் உண்டாயிற்று. இந்

நிலையில் அவ்வழியில், ஒரு சிறுவனுடன் வந்த அழகிய பெண் ஒருத்தியை வண்டியில் ஏற்றிக்கொண்டு கண்டக்டர் ஆசனத்தில் அமரச்செய்தனர். கண்டக்டரும் வண்டி ஓட்டியும் அப் பையனைக் கொஞ்சுவதும் பெண்ணிடம் சிரித்துப் பேசுவதுமாக வந்தனர். பயணக் கட்டணமாகப் பெண் கொடுத்த பணத்தையும் வாங்க மறுத்துவிட்டனர். வண்டி ஆமை வேகத்தில் ஊர்ந்து சென்றது. எங்கள் பயணத்தைச் சேர்ந்த மற்ற வண்டிகள் யாவும் எங்களைக் கடந்து சென்று விட்டன. பெண் மயக்கத்தில் வண்டி ஓட்டி வண்டியை எப்பள்ளத்தில் விட்டுவ்டுவானோ என்ற அச்சம் எங்களுக்கு உண்டாயிற்று. வண்டி ஓட்டியிடம் வண்டியைச் சாக்கிரதையாக ஓட்டும்படிச் சொல்லவும் தயங்கினோம். நல்ல வேளையாக அப்பெண் அடுத்து வந்த ஊரில் இறங்கி விட்டாள். டிரைவரும் கண்டக்டரும் அப்பெண்ணிடம் பிரியாவிடை பெற்றுக்கொண்டு வண்டியை நகர்த்தினர். எங்களுக்கோ பெரும் நிம்மதி ஏற்பட்டது.

வழியில் பல ஆட்டு மந்தைகளைக் கடந்து சென்றோம். ஓர் இடத்தில் சமயம் பார்த்து ஆட்டு மந்தையிலிருந்து ஒரு ஆட்டைக் கண்டக்டர் ஓடும் வண்டியில் பின் புறத்தில் நின்றவாறு எட்டிப் பிடித்து வண்டிக்குள் இழுத்துக் கொண்டான். வண்டி ஓடிக்கொண்டே இருந்தது. ஆட்டின் கழுத்தில் கயிற்றைக் கட்டி, வண்டியில் கட்டி விட்டான். நாங்கள் பதறிப் போனோம். 'ஆட்டை வெளியே விட்டுவிடு' என்று நாங்கள் சொன்ன சொல்லைக் கண்டக்டரோ டிரைவரோ காதிலேயே போட்டுக் கொள்ள வில்லை. ஆடு கிடைத்த மகிழ்ச்சியில் அவ்விருவரும் சிரித்த சிரிப்பு கொஞ்சமல்ல. அவர்களைப் பகைத்துக் கொள்ள எங்களுக்கு விருப்பமில்லை. சிவனே என்று பேசாமல் இருந்து விட்டோம். வண்டி ஒழுங்காகப் போய்ச் சேர்ந்தால் போதும் என்றாய்விட்டது. நண்பகல் ஒரு மணிக்குச் சுமாருக்கு ஓர் இடத்தில் உணவு அருந்தினோம். பயண நிர்வாகிகள் நேரா நேரத்துக்கு உணவு கொடுப்பதில்

தவறுவதே இல்லை. சுவர்ணாம்பிகா டிராவல்ஸ் இந்த வகையில் மிகச் சிறப்பாகப் பணியாற்றி வருகின்றது. ஆடு ஜம்மு வரை வண்டியில் பயணம் செய்தது. இரவு ஏழரை மணிக்கு ஜம்மு இரயில் நிலையம் சென்றடைந்தோம். அன்றிரவே பன்னிரண்டு மணி சுமாருக்கு எங்கள் வண்டி ஜம்முவை விட்டு டில்லி நோக்கிப் புறப்பட்டுச் சென்றது. 21-5-78 இரவு புறப்பட்ட வண்டி 22-5-78 இரவு ஒன்றரை மணிக்கு டெல்லி அடைந்தது.

# டெல்லி

## 23-5-78 செவ்வாய்க்கிழமை டெல்லி முதல்நாளின் எங்கள் அனுபவம்

டெல்லி இந்தியாவின் தலைநகரம். இந்நகரில் ஆட்சி செய்து மறைந்த அரசுகளுக்குக் கணக்கே இல்லை. நிலைத்த ஆட்சி என்றும் எப்போதும் எங்கும் இருந்த தில்லை. இன்றும் ஆட்சி மாற்றங்கள் நடந்து கொண்டே இருக்கின்றன.

எத்தனையோ அரசாங்கங்களுக்கு டெல்லி தலை நகராய் இருந்து வந்திருக்கின்றது. டெல்லி சரித்திரம் இந்திய நாட்டின் சரித்திரம் என்றே சொல்லலாம். இடிந்த கோட்டைகளும் கொத்தலங்களும் நிறைந்து இறந்த காலத்தின் வரலாற்றுச் சின்னங்களைத் தன்னுட்கொண் டிருக்கின்றது. சரித்திர காலத்துக்கு முன்னிருந்தே இது உலகப் புகழ் பெற்ற நகரமாயிருந்தது. இப்போதும் இது நமது நாட்டின் தலைநகராயிருந்து நமது தலை எழுத்தை எழுதிக் கொண்டிருக்கின்றது. சரித்திரத்தையும் படைத்துக் கொண்டிருக்கின்றது. இவ்வாறு பல வகை யிலும் புகழோங்கி நிற்கும் டெல்லியைப் பார்க்கப் போவதில் ஆர்வம் கொள்வதும் இயல்புதானே· ஆர்வத்

தோடும் பரபரப்போடும் காலை ஏழுமணிக்கெல்லாம் பஸ்ஸில் டெல்லியைச் சுற்றிப் பார்க்கப் போனோம். முதலில் இந்திராகாந்தி அம்மையாரைப் பார்க்கப் போனோம். இப்போது இவர் ஆட்சி பீடத்தில் இல்லை. என்றாலும் பார்க்கவேண்டிய பெருமக்களில் அவரும் ஒருவர் என்ற முறையில் அவரை பார்க்கப் போனோம். அவர் பெங்களூர் போயிருந்ததால் அவரை பார்க்க இயல வில்லை. பின்னர் பாரதப் பிரதமர் மொரார்ஜி தேசாய் அவர்களைப் பார்க்கப் போனோம். மிகவும் நெருக்கடி யான காலத்தில் பிரதமராய் வந்து நாட்டை நெறியாய் ஆளும் முயற்சியில் ஈடுபட்டிருக்கும் சீலர் தேசாய் ஆவார். இவரை நேரில் காண்பதில் ஆர்வம் கொண்டோம். இவருடைய பங்களாவின் முன் எங்களை வரவேற்றார். ஆண்கள் தனியாகவும் பெண்கள் தனியாகவும் அங்கு விரித்திருந்த ஜமுக்காளங்களில் அமர்ந்தோம். சிறிது நேரத்தில் உயர்ந்த பொன்னிற மேனியும் நிமிர்ந்த நடையும் கொண்ட பாரதப் பிரதமரைத் தரிசித்தோம். அவர் தும்பைப் பூ போன்ற வெள்ளைக் கதராடையை அணிந்திருந்தார். முறுவல் பூத்த முகத்தோடு எங்களை நோக்கி வந்தார். என்ன வியப்பு! நாங்கள் வயதான ஒரு முதியவரை பார்க்கவில்லை. ஓர் இளைஞரைப் பார்த் தோம். ஒழுக்கத்தாலும் சீலத்தாலும் இளமை குன்றா ஒரு பெருமகனாரைப் பார்த்தோம். கோப்பெருஞ்சோழன் பிசிராந்தையாரைப் பார்த்து 'யாண்டு பலவாக நரையில வாகுதல் யாங்காகியர்' என்று வினவியதைப் போல இவரையும் வினவத் தோன்றியது. இவரது இளமை இரகசியத்தை பலர் வினவியும் உள்ளனர்.

வந்தவர் எங்களுக்கு வணக்கம் சொல்லிவிட்டு எங்கள் மத்தியில் நின்று நிழற்படம் எடுத்துக் கொண்டார். நாங்களும் வணக்கம் செலுத்திவிட்டு அங்கிருந்து குதுப்மினார் பார்க்கப் புறப்பட்டோம்.

## குதுப்மினார்

இது வட்டமான மூன்றடுக்கு ஸ்தூபி. நல்ல கலை அழகோடு கட்டப்பட்டுள்ளது. ஸ்தூபியின் உள்ளே ஏறிப் போக படிகள் உள்ளன. உச்சிப் பகுதிவரைப் போக யாரையும் அனுமதிப்பதில்லை. அங்கு வீசும் காற்றின் வேகத்தை யாராலும் தாங்கிக் கொள்ள முடியாது. முதல் பகுதி வரைப் போய் அங்குள்ள பால்கனியில் இருந்து டெல்லி மாநகரைப் பார்த்தோம்.

அற்புதமான அழகும் நுட்பமும் கொண்ட இந்த ஸ்தூபியின் அடிப்பாகத்தின் குறுக்களவு 14.32 மீட்டர். உச்சியின் குறுக்களவு 2.75 மீட்டர். உயரம் 72.5 மீட்டர். இதன் உள் உள்ள ஏறும்படிகள் 379. குத்புதீன் என்னும் மன்னன் இதைக் கட்டத் தொடங்கினான். இவன் காலத்தில் முதல் அடுக்குதான் கட்டி முடிந்தது. இவனுக்குப் பின் வந்த இவன் சந்ததிகள் மற்ற இரண்டு அடுக்குகளைக் கட்டி முடித்தனர். இது கி.பி. 1230-ல் துவங்கி கி.பி. 1368-ல் கட்டி முடிந்தது. இதைக் கி.பி. 1489, கி.பி. 1517 ஆம் ஆண்டுகளில் இருமுறை மின்னல் தாக்கிச் சேதப்படுத்தியது. பின்னர் இது செப்பனிடப்பட்டது.

இதன் பக்கத்தில் 4-வது நூற்றாண்டில் வாழ்ந்த விஷ்ணுபாதா என்பவரால் கட்டப்பட்ட அற்புதமான வேலைப்பாடுகளுடன் கூடிய கட்டடங்களின் சிதைவுகள் உள்ளன. இதில் உள்ள இரும்புத்தூண் ஒன்று குறிப்பிடத் தகுந்தது. இது 1600 ஆண்டுகள் வெய்யிலிலும் மழையிலும் இருந்தும் துருப்பிடிக்காது இருக்கின்றது. இதில் சாசனம் ஒன்றும் பொறிக்கப்பட்டுத் தெளிவாக இருக்கின்றது. பின்னர் RKபுரத்திலுள்ள முருகன் கோயிலுக்குப் போனோம்.

## முருகன் கோயில்

முருகப் பெருமான் சின்னக் குன்றின்மீது கோயில் கொண்டுள்ளான். அடிவாரத்தில் அகன்ற மண்டபத்தில்

விநாயகப் பெருமான் எழுந்தருளியுள்ளார். நாங்கள் போனபோது அன்பர் ஒருவர் முருகர்மீது தோத்திரப் பாடல்கள் பாடிக் கொண்டிருந்தார். இங்குக் காஞ்சி பெரியவர்களின் பெரிய படம் ஒன்றும் உளது. வணங்கிக் கொண்டு குன்றின்மீது ஏறிப் போனோம். கோயிலில் முருகப் பெருமான் நின்ற கோலத்தில் காட்சி அளித்தார். அழகான மூர்த்தி. சுற்றுச் சுவர்களில் அம்மை அப்பரின் திருமணக் காட்சி முதலியன அலங்கரித்தன. பின்னர் தீன்மூர்த்தி பவனுக்குப் போனோம்.

## தீன்மூர்த்தி பவன்

இது ஜவஹர்லால் நேரு வசித்த இடம். இது இப்போது இவருடைய நினைவுச் சின்னமாக இருக்கின்றது. உலகப் பெரியாராகத் திகழ்ந்த இம்மாபெரும் மேதையின் சின்ன மாக மட்டுமின்றி இந்தியநாடு பெற்ற சுதந்திரத்தின் சின்ன மாகவும் இது விளங்குகின்றது. கி.பி. 1930-ல் இந்தியாவின் படைத் தளபதிக்காகக் கட்டப்பட்ட இந்த மாளிகை கி.பி. 1948-ல் இந்தியாவின் முதலமைச்சரின் இருப்பிடமாக அமைந்தது. நேருஜி 16 ஆண்டுகள் இங்கு வாழ்ந்தார். அப்போது இந்திய நாட்டின் மறுமலர்ச்சிக்காக அவர் கண்ட கனவுகள் திட்டங்கள் பலவும் இங்குத்தான் உருப்பெற்றன. கி.பி. 27-5-64-ல் அவர் மறைந்தபின் தேசீயச் சின்னமாக இருந்த இதை 14-11-64-ல் இந்திய ஜனாதிபதி டாக்டர் சர். ராதாகிருஷ்ணன் நேரு நினைவாலயமாக மாற்றினார். நேருஜி அரசியல்வாதியாக மட்டும் இருக்கவில்லை. அழகிய சிற்பங்கள் சித்திரங்கள் பசும்புற்றரைகள், பூக்கள், புத்தகங்கள் மழலைகளின் சிரித்த முகங்கள் ஆகியவற்றை யெல்லாம் விரும்பிப் போற்றும் கலைஞராகவும் விளங்கினார்.

நினைவாலயத்தின் உள்ளே போனோம். நுழை வாயிலை ஒட்டி நேருஜியின் அழகிய வரவேற்புரை இருக் கின்றது. இதை அடுத்து அவருடைய இறுதிநாள் உயில்

இந்தியிலும் ஆங்கிலத்திலும் பொறித்து வைக்கப்பட்டுள்ளது. இது இந்த நாட்டின் மீதும் மக்கள் மீதும் நேருஜி கொண்டிருந்த அளப்பரிய அன்பைப் புலப்படுத்தியது. சுட்டுப் பொசுக்கிய தமது உடம்பின் சாம்பலை வான ஊர்தியில் உயர எடுத்துச் சென்று உழைக்கும் உழவர்கள் உழும் நிலத்தில் தெளித்துக் கலந்துவிடவேண்டும் என்றும், அது இந்த நாட்டின் மண்ணோடு மண்ணாக ஆகிவிடவேண்டும் என்றும் தமது விருப்பத்தை இவ் உயிலில் தெரிவித்துள்ளார்.

பின்னர் நேராக உள்ளே போனோம். புல்வெளியும் மரங்களும் நிரம்பிய பூந்தோட்டத்தை அடைந்தோம். அங்கு 1964-ல் நேருஜியின் பிறந்த நாளில், நாடு முழுவதும் சுற்றிக் கொண்டு 25000 மைல் பவனி வந்து மே மாதம் 1965ஆம் ஆண்டில் கொண்டு வந்து வைக்கப்பட்ட 'ஜவஹர் ஜோதி' எரிந்து கொண்டிருக்கக் கண்டோம். இது அணையா ஜோதியாக எரிந்து கொண்டிருக்கின்றது. பிறகு பின் வாயில் வழியாகக் கட்டடத்துக்குள்ளே போனோம். அங்கு அவர் அலுவல் புரிந்த அறையைப் பார்த்தோம். அதில் அழகான நாற்காலிகள் சூழ இருந்த மேஜையையும் அதன்மீது அவர் நிறைவேற்ற முடியாதுபோன மே 27-ந் தேதி நாட்குறிப்பையும் கண்டோம். இங்குப் புத்தர், தந்தத்தாலான சிங்கம், காந்தியடிகளின் படம், காகித பளுவுக்குப் பயன்படுத்திய பல நதிகளில் கண்டெடுத்த மொழுமொழுவென உள்ள குண்டுக்கற்கள் ஆகியவை வைக்கப்பட்டிருந்தன. அங்கிருந்து மாடிக்குப் போனோம் அங்கு அவரது இளமைக் காலத்து குடும்பப் படங்களும் சிறைச்சாலைப் படங்களும், அரசியல் போராட்டத்தில் நேருஜியின் குடும்பம் ஆற்றிய தொண்டைக் குறித்த படங்களும் 'நான் கண்ட இந்தியா' என்னும் புத்தகத்தின் கையெழுத்துப் பிரதியையும் கண்டோம்.

பின் நேருஜியின் நூல் நிலையத்துக்குப் போனோம். அங்கு அவர் படித்த வரலாறு, பொருளாதாரம் கவிதைகள் கற்பனைக் கதைகள், விஞ்ஞானம், தத்துவம் பற்றிய

நூல்கள் வரிசை வரிசையாக அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. இவ்வளவு நூல்களையும் ஒரு மனிதர் எப்படித்தான் படித்தாரோ என்ற பிரமை ஏற்பட்டது. அவரது படிப் பறையைக் காந்தியடிகள், ரவீந்திரநாத டாகூர், ஆஜாத், கபார்கான், லிங்கன், பெர்னாட் ஷா போன்ற அறிஞர் களின் படங்கள் அலங்கரித்துக் கொண்டிருந்தன. அவர் பெரிதும் விரும்பிய இமயக் காட்சிச் சித்திரம் ஒன்றும் இருந்தது. ஆப்ரகாம் லிங்கனின் உலோக உருவம் ஒன்றும் மேஜைமீது இருந்தது.

அதற்கு அடுத்த அறையில் அவர் பெற்ற பல நாட்டு பரிசுப் பொருள்களும், பல நாட்டு பல்கலைக் கழகங்கள் அவரைப் பெருமைபடுத்தி அளித்த பட்டங்கள், சாவிகள், 'பாரத ரத்ன' பட்டம் போன்றவையும் வைக்கப்பட்டி ருந்தன. இன்னோர் அறையில் அவர் நூல் நூற்ற இராட்டை இருந்தது.

கடைசியாக, அவர் தமது இறுதி நாள்களில் படுத் திருந்த படுக்கை அறையைப் பார்த்தோம். இதில் இமயக் காட்சிச் சித்திரம் HMT கைக் கெடிகாரம், பகவத் கீதை, அவர் குடும்பத்தாரின் படங்கள், காந்தியடிகளின் மிகப் பெரிய படம் ஆகியவை படுக்கையைச் சுற்றி இருந்தன.

இந்திய நாட்டின் முடிசூடா மன்னராக இருந்த ஜவஹர்லால் நேருவின் வாழ்க்கையையும் வாழ்க்கை இலட்சியங்களையும் எடுத்துக்காட்டும் கருவூலமாக இந் நினைவாலையம் விளங்குகின்றது. ஒரு பெருமகனைப் பார்த்த நினைவோடு 'பிர்லா' மாளிகைக்குச் சென்றோம்.

## பிர்லா மாளிகை

இங்குத்தான் 'காந்தியடிகள் தமது கடைசி 144 நாள்கள் வசித்திருந்தார். 30-1-1948-ல் மதவெறி கொண்ட கோட்சேவால் சுட்டுக் கொல்லப்பட்டார். அதுவும் பிரார்த்தனைக் கூட்டத்தில் இக்கொடுமை நடந்தது. இது

போன்ற கொடுமை உலகில் என்றுமே நடந்ததில்லை. இப் பயங்கரச் செயலைக் கேட்டதும் உலகமே கதிகலங்கிப் போய்விட்டது. பகைத்தவர்களும் பதறிப்போய்க் கண்ணீர் விட்டனர்.

பலியானவர் யார்? தனக்குப் பகையென்பதே ஒரு சிறிதும் இல்லாதவர். பகைவனையும் அன்பு செய்த அருளாளர். ஓர் உயிருக்கும் தீங்கு நினையாத ஆனால் எல்லா உயிர்களின் நன்மையையே இடைவிடாது சிந்தித்துச் செயல்பட்ட மகான். சத்தியம் அகிம்சை என்னும் இரு தெய்வப் பண்புகளைத் தம் வாழ்க்கையில் வைத்து நடத்தியவர். கண்முன் வாழ்ந்த தெய்வம். இம்மகானுக்கு நேர்ந்த கொடுமையை எண்ணும்போது உள்ளம் உடைகின்றது. மக்கள் சமுதாயத்துக்குத் தொண்டு செய்ய 120 ஆண்டுகள் வாழ விரும்பினார். ஆனால் ஆண்டவன் விருப்பம் வேறாக இருந்தது. ஆண்டவன் விருப்பத்தில் வாழந்தவர் தானே அவர்.

மிகப் பெரியவராக, மகானாக வாழ்வது எவ்வளவு பெரிய ஆபத்து என்பது இதனால் தெளிவாகிறது. உலகம் போற்றும் உத்தமர்களின் முடிவெல்லாம் இப்படித்தான் இருக்கும் என்பதை வரலாறு விளக்கம் அளிக்கின்றது.

இக்கொடுமைக்குக் காரணம் அறியாமையுமன்று. சுட்டவன் பட்டப்படிப்புப் பெற்ற கற்றவன். ஆனால் மதவெறி இவனை இக் கீழ்நிலைக்குக் கொண்டு வந்து விட்டது. உலகில் மதவெறியால் நடந்த பாதகங்களுக்குக் கணக்கே இல்லை. மதவெறியால் விளையும் கொடுமையின் சின்னமாக; மகான்களாக விளங்குவது எவ்வளவு ஆபத்து என்பதன் சின்னமாக, மகான்களின் கடைசி யாத்திரையின் சின்னமாக இந்த இடம் விளங்கியது இந்தப் புனித இடத்துக்குத்தான் நாங்கள் போனோம்.

பெரிய பசும்புல் தோட்டம். அதன் ஒரு பகுதியில் ஒரு மேடை. இந்த மேடையுள்ள பகுதியில்தான்

காந்தியடிகள் குண்டடிப்பட்டு வீழ்ந்தார். அதைப் பார்த்ததும் மனம் பாகாய் உருகியது. அம்மேடையில் சிமிண்டாலான அவருடைய திருவடிகள் காணப்பட்டன. அவர் தங்கியிருந்த இடத்திலிருந்து இறுதி நாளில் பிரார்த்தனை செய்ய மேடைக்கு வந்தபோது ஏற்பட்ட அடிச்சுவடிகளின் சின்னம் இவை. நெகிழ்ந்த சிந்தையோடு இவற்றைப் பார்த்துவிட்டு மாடிக்குப் போனோம்.

மாடியில் காந்தியடிகளின் இளமைப் பருவம், இலண்டனில் படித்தது, வழக்கறிஞராகத் தொழில் நடத்தியது, திருமணம் நடந்தது, தென்னாப்பிரிக்கா சம்பவங்கள், சுதந்திரப் போராட்ட நிகழ்ச்சிகள், சுதந்திரத்துக்குப் பின் நவகாளியில் நடந்த படுகொலைகள், கடைசியாக அவர் சுடப்பட்டு மறைந்த நிகழ்ச்சிகள் ஆகியவை வண்ணச் சித்திரங்களாகத் தீட்டி வைத்திருந் தனர். ஆப்பிரிக்கா நிகழ்ச்சிகளை மட்டும் பொம்மைகளை வைத்து காட்சிகளாக அமைத்து கண்ணாடிப் பெட்டிகளில் வைத்திருந்தனர்.

இவற்றைப் பார்த்துக்கொண்டு நண்பகல் பன்னி ரெண்டு மணிக்கு நிஜாமுதீன் இரயிலடியிலிருந்த எங்கள் பெட்டியை அடைந்து உணவருந்திப் பின் பிற்பகல் இரண்டு மணிக்கு பஸ்ஸில் 'இந்தியாகேட்' போனோம். இங்குப் பல வகையான படங்களும் பொம்மைகளும் விளையாட்டுச் சாமான்களும் விற்கப்படுகின்றன. எங்களில் பலர் பலவித சாமான்களை வாங்கிக் கொண்டனர். இதை விட்டு இதற்கு நேர் எதிரில் உள்ள ராஷ்ட்ரபதி பவனத் துக்குப் போனோம். ராஷ்ட்ரபதி பவனத்திலிருந்து ஜனவரி 26-ந்தேதி புறப்பட்டு வரும் குடியரசு தின ஊர்வலம் இத்தெருவின் வழியாகத்தான் போகும்.

## ராஷ்ட்ரபதி பவனம்

ராஷ்ட்ரபதி பவனம், ஐந்து ஏக்கர் நிலத்தில் உள்ள மிகப்பெரிய மாளிகை. இதன் மையப் பகுதியில்,

கட்டடத்தின் மேலே (Dome) வட்ட வடிவமான மிகப் பெரிய கலசம் போன்ற கூண்டு உளது. இதில் ராஷ்ட்ரபதி இருக்கும்போது, நாட்டின் கொடி இதன்மீது பறக்கும் டெல்லியில் இல்லாதபோது கொடி இறக்கப்பட்டிருக்கும். இதில் 340 அறைகளும், 1½ மைல் நீளமுள்ள நடைகளும் (Corridor) உள்ளன. இம்மாளிகையின் வடபகுதியில் ராஷ்ட்ரபதி வாழ்கிறார்.

கூண்டு உள்ள நடுப்பகுதியின் நேர் கீழே தர்பார் மண்டபம், அசோகா மண்டபம், விருந்து மண்டபம் உள்ளன. அசோகா மண்டபம் (Hall) முன்னாட்களில் நடன மண்டபமாயிருந்தது. இது 68 அடி நீளமும், 63 அடி அகலமும் உடையது. இதன்மேல் விதானத்தில் பெர்சிய; பௌத்த முறைச் சித்திரங்கள் அழகாக தீட்டப்பட்டுள்ளன. விருந்து மண்டபம் 104 × 32 அடி அளவு பரப்பு உடையது. இந்த மண்டபத்தில் ஆங்கிலேயர் ஆட்சியில் ஆட்சி செய்த வைசிராய்களின் மிகப்பெரிய படங்கள் கால முறைப்படி சுவர்களில் தொங்கவிடப்பட்டுள்ளன. இவ்வரிசையின் கடைசியில் டாக்டர் ராஜேந்திரபிரசாத், டாக்டர் ராதாகிருஷ்ணன் படங்கள் வைக்கப்பட்டுள்ளன.

ஒரு சமயம் ருஷிய நாட்டுச் சோவியத் கட்சியின் செயலாளர் நிகிடா குருஷ்சேவ் ஜவஹர்லால் நேருவுடன் விருந்துண்ண விருந்து மண்டபத்துக்கு வந்தபோது வைசிராயின் படங்களைப் பார்த்துவிட்டு 'உங்களை அடிமைப் படுத்தி வைத்திருந்த வைசிராய்களின் படங்களை இன்னும் ஏன் இங்கு விட்டு வைத்திருக்கின்றீர்கள்?' என்று ஜவஹர்லாலைப் பார்த்துக் கேட்டார். அதற்கு ஜவஹர்லால் நேரு 'இப்படங்களை அப்புறப்படுத்துவதினாலேயே வரலாற்றை அழித்துவிட முடியாது' என்று ஆணித்தரமாகப் பதிலளித்தார்.

இப்பெரிய மாளிகையைக் கட்ட 1½ கோடி ரூபாய் செலவும் 15 ஆண்டுகளும் ஆயின. இதன் தரைமீது

விலையுயர்ந்த பர்சிய நாட்டு இரத்தினக் கம்பளங்கள் விரிக்கப்பட்டுள்ளன. மேற்கூரையில் விலைமதித்தற்கரிய கண்ணாடி சரவிளக்குகள் தொங்குகின்றன. ஆங்காங்கே அழகிய மேஜைகளும் நாற்காலிகளும் இடப்பட்டுள்ளன. சுவர்களில் வரலாற்றுப் புருடர்கள் பெண்கள் ஆகியோரின் படங்கள் மாட்டி வைக்கப்பட்டுள்ளன.

இந்த தர்பார் மண்டபத்தில்தான் பதவிப் பிரமாணங்கள் நடைபெறுகின்றன. இங்குப் புத்தர் சிலை ஒன்று இருக்கின்றது. இதன்முன் மவுண்ட்பேட்டன் பிரபு 14-8-1947-ல் இந்தியக் குடி அரசின் முதல் கவர்னர் ஜெனரலாகப் பதவிப் பிரமாணம் எடுத்துக் கொண்டார். ஆங்கில ஆட்சியில் வைசிராய்கள் நடத்தும் விருந்துகளின் போது சரவிளக்குகளின் ஒளி வெள்ளத்தில் இசைக்கேற்ப ஆண்களும் பெண்களும் சேர்ந்து களிநடனம் புரிந்தனர். அக்களியாட்டங்கள் இப்போது நடைபெறுவதில்லை. இப்போது இங்கே பதவிப் பிரமாணங்கள் மட்டுமே நடைபெறுகின்றன.

ராஷ்ட்ரபதி பவனத்தின் புழக்கடை 15½ ஏக்கர் நிலத்தில் இருக்கின்றது. மாளிகையை ஒட்டி இருக்கும் பகுதியில் மொகல் கார்டன் இருக்கின்றது. இது பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இங்குப் பல வகையான ரோஜாச் செடிகளும் நிழல் பரப்பும் அசோக மரங்களும் உள்ளன. அதில் கருப்பு ரோஜாவும் ஒன்று. பாதைகளும் நீர்ச்சுரப்பிகளும் அழகுபட அமைந்துள்ளன. இங்குள்ள அழகான புல்வெளியில் பல நிகழ்ச்சிகள் நடைபெறுவதுண்டு.

விருந்து மண்டபத்தை மிகப் பெரிய நீண்ட மேஜையும் அதைச் சுற்றி இடப்பட்டுள்ள சிகப்பு வெல்வெட் மெத்தை தைத்த அரியணை போன்ற அழகான ஆசனங்களும் அலங்கரிக்கின்றன. விருந்துக்கு உரிய உணவு பண்டங்கள் வைப்பதற்காக அறையின் சுவரோரம் ஆங்காங்கே மேஜைகள் இடப்பட்டுள்ளன. விருந்து

மண்டபத்துக்கு முன்னால் வரவேற்பு அறை ஒன்று இருக்கின்றது. இதில் இருபுறமும் வெல்வெட் நாற்காலிகள் இடப்பட்டுள்ளன. விருந்தாளிகள் விருந்து மண்டபத்துக்குள் போவதற்கு முன்பு தங்குவதற்கென்று இந்த அறை இருக்கின்றது. நாங்களும் ஆசையோடு அங்கிருந்த ஆசனங்களில் சிறிது நேரம் அமர்ந்து ஆசை தீர்த்துக் கொண்டோம்.

இராஜேந்திரப்பிரசாத்துக்கு இந்தோனேஷியர் அன்போடு அளித்த, 1600 ஆண்டுகளுக்கு முன் செய்த பளிங்காலான 1001 கை புத்தர் சிலை இங்கிருக்கின்றது.

பிறகு லோக சபை (Parliament)க்குப் போனோம்.

## லோக சபை (Parliament)

பார்லிமெண்ட் சபை இப்போது நடைபெறவில்லை. பார்வையாளர் பகுதியிலிருந்து கீழே உள்ள சபையின் அமைப்பைப் பார்த்தோம். வட்ட வடிவமான ஆசனங்கள் இடப்பட்டிருக்கின்றன தலைவரின் அரியணைக்கு இரு புறம் அமைச்சர்களும் எதிர்க்கட்சித் தலைவர்களும் அமரும் இருக்கைகள் முதலியவற்றை வழிகாட்டி விளக்கம் செய்யப் பார்த்துக் கொண்டு அங்கிருந்து பிர்லா மந்திருக்குப் போனோம். இது பளிங்காலான மிகப் பெரிய இலட்சுமி நாராயணர் கோயிலாகும். இதன் பின்புறம் மிகப் பெரிய நந்தியும் பார்த்தசாரதி ரதமும் உள்ளன. இங்கே கண்ணாடி மாளிகை ஒன்றும் இருக்கின்றது. இரவு ஏழு மணிக்கு இரயிலடியை அடைந்தோம்.

## காந்தி மியூசியம்

24-5-78 புதன்கிழமை—டெல்லி 2 ஆம் நாள் காலை 10-30 மணி அளவில் காந்தி மியூசியம் அடைந்தோம்.

இங்குக் காந்தியடிகளின் வாழ்க்கை வரலாற்றை விளக்கும் வகையில் சிறு வயது முதல் இறுதி நாள் வரையில்

எடுக்கப்பட்ட புகைப்படங்கள் வரிசைப்படுத்தி வைக்கப் பட்டுள்ளன. இவர் பயன்படுத்திய பேனா, மூக்குக் கண்ணாடி, காலணிகள், இராட்டை, படித்த நூல்கள், கையெழுத்துப் படிகள், தென்னாப்பிரிக்கா கவர்னர் ஜெனரலுக்கு தம் கையாலேயே தயாரித்து அனுப்பிப் பின் அவரால் திருப்பி அனுப்பப்பட்ட செருப்பு முதலியன காட்சிக்கு உள்ளன. இறுதியாக ஒரு கண்ணாடி பெட்டிக்குள் வைக்கப்பட்டிருந்த அவர் சாவுக்குக் காரண மாக இருந்த குண்டுகளையும் பார்த்தோம். இவற்றைப் பார்த்தபோது அவரது வாழ்க்கை நிலை, செய்த தொண்டு, பண்பாடு தியாகம், எளிமை, மாசற்ற உள்ளம், தெய்வ நலம் இவையெல்லாம் எங்கள் கண்முன் நின்றன. இவற்றால் பெற்ற பல வகை உணர்வுகளோடு அவ் விடத்தை விட்டு நீங்கிக் காந்திஜியின் வாழ்க்கை வரலாற்றுச் சினிமாப் படம் பார்க்கப் போனோம். இது ஊமைப் படம். நெடுக விளக்கங்கள் தரப்படுகின்றன. இதைப் பார்த்துக் கொண்டு ராஜ்காட் போனோம்.

## ராஜ்காட்

இங்குத்தான் தேசப்பிதா மகாத்மா காந்தியடிகளின் சமாதி இருக்கின்றது. மிக எளிமையாக ஆனால் தூய்மை யாக இருக்கின்றது. இங்குக் கிடப்பவர் யார்? சமாதானத்தை விரும்பிய மகான். பலாத்காரத்தை அஹிம்சை வழி நின்று வெற்றி கண்ட பெருமான். அகிம்சையின் வலிமையை உலகுக்கு நடத்திக் காண்பித் தவர். அரசியலில் சத்தியத்தைக் கடைப்பிடித்தவர். வாழ்க்கையில் எல்லா கோணங்களிலிருந்தும் சத்திய வழி நின்று வாழ்ந்து காட்டியவர். உலகத்தில் வாழும் எல்லா மக்களாலும் சாதி சமய நிறமொழி வேறுபாடின்றி ஒரு முகமாக மகான் என்று போற்றப்பட்டவர். காலங் கடந்து தமது புகழ் நிலைபெறும்படி வையத்து வாழ்வாங்கு வாழ்ந்து மறைந்த மகான். உலகம் உள்ளளவும் இவர்

பெயர் மறையாது. இத்தகைய தெய்வ மகானின் சமாதியை அடைந்து வணக்கம் செலுத்தியபோது உள்ளம் நெகிழ்ந்தது. ஓர் உயிருக்கும் தீங்கு நினையாத ஆனால் எல்லா உயிர்களுக்கும் நன்மையே விழைந்த ஒரு தெய்வத் துக்கும் ஒரு பகைவன் எமனாகத் தோன்றினானே? என நினைந்து வருந்தினோம்.

அப்பர் பெருமானைப் பல வகையிலும் கொல்ல முனைந்தவர்கள் சமணர்கள். கல்லில் கட்டிக் கடலில் போட்டார்கள். திருவருட்டுணையால் வஞ்சகர்களின் கொடுமைகளிலிருந்தும் மீண்டு திருவதிகைக்கு வந்தார். முழங்கால்வரைத் துண்டு. கையில் தொண்டின் சின்ன மான உழவாரப்படை. அன்பின் முதிர்ச்சியில் குழைந்த நெஞ்சு. அந்நெகிழ்ச்சியின் அடையாளமாகக் கண்களி லிருந்தும் வழிந்தோடிய கண்ணீர். இவ்வாறு அன்பின் பிழம்பாகத் தெருவோடு வந்த தொண்டர். நாவுக்கரசரைக் கண்ட மக்கள் 'எப்படித்தான் இத்தொண்டரை கொல்ல நினைத்தார்களோ கல்நெஞ்சப் பாதகர்கள்' என்று எண்ணிக் கண் கலங்கினார்கள். அக்காட்சி இப்போது எங்கள் கண்முன் நின்றது.

'இம்மகான் வாழ்ந்த காலத்தில் நாமும் வாழ்ந்து, நேரிலும் கண்டு பேசிய பாக்யம் பெற்றோமே; மற்றும் அவர் சாந்தியுற்று நினைவுச் சின்னமாகத் திகழும் இப் புண்ணியத் தலத்தைக் கண்டு வணங்கும் பேறும் கிடைத்ததே, நாம் எவ்வளவு பெரிய பாக்கியசாலி' என்றெல்லாம் உருகி அமைதியுற்றேன். சமாதியின்மீது மலர் வளையம் வைத்து வணங்கிப் பின் முன்னின்று நிழற் படம் எடுத்துக் கொண்டேன். சமாதிமீது 'ஹே ராம்' என்று இந்தியில் பித்தளை எழுத்துக்களில் பொறிக்கப் பட்டுள்ளது. பிறகு நேருஜீ அவர்களின் சமாதிக்குப் போனோம்.

## நேருஜி சமாதி

இந் நாட்டுக்கு விடுதலை கிடைத்த பின், அடிமை உற்றுவாழ்வற்று கிடந்த நாட்டைத் தொழில்வளம்மிக்க நாடாகவும், உலக நாடுகளிடையே தலை நிமிர்ந்து நிற்கும் நாடாகவும், ஆக்கிய, உலக அறிஞர்களின் முன் தலை சிறந்த மேதையாக விளங்கிய பெருமகனின் நினைவுச் சின்னத்தையல்லவா பார்க்கப் போகிறோம் என்ற பெரு மிதத்தோடு போனோம். சமாதிமீது மலர் வளையம் வைத்து மரியாதை செய்துவிட்டு சாஸ்திரியார் சமாதிக்குப் போய் மலர் வளையம் வைத்து மரியாதை செய்துவிட்டுப் 'புராண கிலா' பார்க்கப் போனோம்.

## புராண கிலா

புராண கிலா என்றால் பழைமையின் சிதைவு என்று பொருள். பஞ்சபாண்டவர்கள் ஆட்சி செய்வதற்காக இந்திரனைக் கொண்டு விஸ்வ பிரமாவால் நிர்மாணிக் கப்பட்ட நகரம் இந்திரப் பிரஸ்தம் ஆகும். பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் இதிகாச காலத்தில் இது கட்டப் பட்டது. இது இப்போது இடிந்து சிதைந்து கிடக்கின்றது. இதில் குந்திதேவி வணங்கிய கோயிலும், திரௌபதி நீராடிய இடமும் இருக்கின்றன. கிணறு போன்ற இத் தொட்டியில் தண்ணீர் எப்போதும் வற்றாது இருக்கின்றது. இதற்கும் யமுனை நதிக்கும் தொடர்பு உண்டு. இந்த இடத்தில் முகலாய மன்னர்களால் கட்டப்பட்ட அழகிய மசூதி ஒன்றும் இருக்கின்றது. இந்துக்களின் பழமை மிக்க புனித இடங்களிலெல்லாம் முகம்மதிய மன்னர்கள் மசூதி களை கட்டியிருக்கப் பார்க்கிறோம். பின் ஜந்தர் மந்திருக்குப் போனோம்.

## ஜந்தர் மந்திர்

இது இராஜா ஜெயசிங்கினால் கட்டப்பட்டது. இதில் மணி, நாள், மாதம், ஆண்டு, வளர்பிறை, தேய்பிறை,

கிரகணங்கள், பன்னிரண்டு ராசிகளில் கிரகங்களின் நடமாட்டம், உத்திராயன தட்சணாயன காலங்கள் முதலியன காட்டும்படியாகப் பலவித கட்டட அமைப்புகளைச் செய்து வைத்துள்ளார். அற்புதமான கால அறிவின் திறத்தில் விளைந்த அற்புதம் இது.

இங்கிருந்து இரயிலடியை அடைந்து, பிற்பகலில் செங்கோட்டைக்குப் போனோம்.

## செங்கோட்டை (Red Fort)

100 ஏக்கர் நிலப்பரப்பில் இக்கோட்டை அமைந்திருக்கிறது. முகலாய மன்னன் ஷாஜகான் இதைக் கட்டினான். இவை கட்டி முடிக்க ஒன்பது ஆண்டுகள் ஆயின. இதைக் கட்டிமுடித்ததும் ஷாஜஹான் தலைநகரை ஆக்ராவிலிருந்து டெல்லிக்கு மாற்றிக் கொண்டான். இதன் முன் மண்டபம் தர்பார் மண்டபம் ஆகும். இது மிகப்பெரிய மண்டபம். இதன் உயரமான மேல்விதானத்தில் அற்புதமான சித்திரங்கள் தீட்டப்பட்டுள்ளன. கலை நுட்பமிக்க இச் சித்திரங்கள் நிறம் மங்காமல் இன்று தீட்டியது போன்று அழகாக இருக்கின்றன. இதற்குப் பின்னால் மன்னனின் படுக்கை அறை A-C அறை போல் குளுகுளுவென குளிர்ச்சியாக இருக்கின்றது. இது குளிர்ச்சியாக இருப்பதற்கென அவற்றுக்குள் குழாய்கள் அமைத்து நீர் ஓடும்படி செய்யப் பட்டுள்ளது. நாட்டிய மண்டபமும் இராணிகள் குளிக்கும் அறைகளும் பீறிட்டு அடிக்கும் நீர்த்தாரைகளும் (Fountains) உள்ளே உள்ளன. அழகு கொழிக்கும் தொழுகை இடம் ஒன்றுள்ளது. இது முத்துக்கள் பதித்த பளிங்குக் கல் மண்டபம் ஆகும். இதன் அழகு சொல்லுக்கடங்காது. இங்கு மயிலாசன மண்டபம் ஒன்று இருக்கின்றது. இதில் இப்போது மயிலாசனம் இல்லை. அம்மயிலாசனத்துக்கு இருந்த 12 படிகள் கொண்ட வெள்ளிப்படிகள் மட்டும் இப்போது இங்கு இருக்கின்றது. இங்கிருந்த மயிலாசனம் உலகப்புகழ் வாய்ந்தது. தன் காதலிக்காக உலகம் வியக்கும் தாஜ்மகாலைக் கட்டிய

அதே மன்னன் தனக்கென மயிலாசனத்தையும் செய்து கொண்டான். ஆக்ராவில் இம்மன்னன் கட்டிய புகழ் வாய்ந்த மாளிகைகள், சின்னங்கள் மிகப் பல உள்ளன. இவன் யாவரும் வியக்கும் வண்ணம் அற்புதமான பெரிய மாளிகைகளையும், கட்டடங்களையும் அமைப்பதில் பெரு விருப்பம் கொண்டவன்.

## மயிலாசனம்

இது 6 அடி உயரம், 4 அடி அகலம் உடையது. இதைச் செந்நிறக் கால்கள் 12 தாங்கி நிற்கின்றன. இது முழுவதும் தங்கத்தாலானது. இதன் எடை ஒரு இலட்சம் தோலா ஆகும். இதன் உச்சிப் பாகத்தின் விளிம்பு வைரம், பச்சை, சிகப்பு போன்ற விலையுயர்ந்த கற்கள் பதித்து அழகு படுத்தப்பட்டிருந்தன. கீழ்ப்பாகம் முழு வதும் தங்கம். இதில் எனாமலில் செய்யப்பட்ட மரமும் அம்மரத்தில் உயர்ந்த கற்கள் பதித்த மயிலும் இருந்தன. அழகு கொழிக்கும் மயில் இதில் இருந்ததால் இது மயிலாசனம் என்று அழைக்கப்பட்டது. இதைச் செய்ய 9 கோடி செலவாயிற்றாம். கலை அழகும் அற்புதமான வேலைப்பாடும் உடைய இந்த ஆசனத்தை 1793 ஆம் ஆண்டில் நாதிர்ஷா என்னும் பர்சிய நாட்டு மன்னன் கைப் பற்றிச் சென்று உருக்கி அழித்துவிட்டான். இந்திய நாட்டின் கலைச் செல்வங்கள் எவ்வளவோ இவ்வாறு அழிக்கப்பட்டன. இந்த கோட்டைக்குத் தண்ணீர் சுமார் 70 மைல் தூரத்திலுள்ள யமுனை நதியிலிருந்து சுரங்கப் பாதை வழியாகக் குழாய்கள்மூலம் பானிபட் குருஷேத் திரம் வழி கொண்டுவரப்பட்டது. செங்கோட்டைக்கு அருகில் தற்போதுள்ள சாந்தினி சவுக் என்னும் மார்க்கட் அமைந்ததால் தண்ணீர் வந்த சுரங்கப்பாதை அடைபட்டு விட்டது. இந்த கோட்டையிலிருந்து ஷாஜஹானுக்கு பின் பல மன்னர்கள் ஆட்சி செய்தனர். கடைசியாக பகதூர்ஷா என்னும் முகலாய மன்னன் கையிலிருந்து கோட்டை

ஆங்கிலேயர் கைக்கு மாறியது. இவர்கள் இந்த இடத்தைத் தங்கள் தலைமை அரசு அலுவலகமாக அமைத்துக் கொண்டனர்.

இங்கு இரவு நேரத்தில் ஒளிஒலி காட்சி நடைபெறுகின்றது. இதில் இக்கோட்டையின் சரித்திரம் வரலாறுகள் காட்டப்படுகின்றன. இங்கும் கடைகள் உள்ளன. இவற்றில் பலவிதமான சாமான்களை வாங்கிக் கொண்டு இரவு ஏழு-முப்பது மணிக்கு இரயிலடிக்குப் போனோம்.

டெல்லியில் இரு நாள்களிலும் கடுமையான வெய்யில் சுட்டெரித்தது. 116 டிகிரி வரை இருந்தது. எவ்வளவு நீர் குடித்தும் தாகம் அடங்கவில்லை.

வரலாற்றுச் சிறப்பு மிக்க டெல்லி பழைய டெல்லி, புது டெல்லி என்று இரண்டு பகுதிகளாக உள்ளன. பழைய டெல்லியிலிருந்து முகலாய மன்னர்கள் ஆட்சி செய்தனர். இங்கு நெருக்கமான தெருக்களும் வீடுகளும் கடைகளும் உள்ளன. புது டெல்லியில் இப்போதுள்ள அரசாங்கத்தின் கட்டடங்களும் நவீனமான மாளிகைகள் போன்ற கட்டடங்களும் அகன்ற வீதிகளும் அவற்றில் வரிசையாக இருபுறமும் மரங்களும் உள்ளன. நகரைச் சுற்றிலும் வளையமிட்டதைப் போன்ற பாதை இருக்கின்றது. இதன் நீளம் 75 கி.மீ. இங்குள்ள அழகு கொழிக்கும் 'கனாட் பிளேஸ்' பார்க்கத் தகுந்த இடம் ஆகும். இது ஜந்தர் மந்திர், புதுடெல்லி இரயில் நிலையத்துக்கு இடையே இருக்கின்றது. இப்பகுதியில் பல தேசப் பிரதிநிதிகளின் பிரம்மாண்டமான மாளிகைகள், பாதையின் இருபுறமும் வரிசையாக இருக்கின்றன.

## மதுரா

24-5-78 இரவு நிஜாமுதீன் ஸ்டேஷனிலிருந்து புறப்பட்டு 25-5-78 வியாழன் மதுரா வந்து சேர்ந்தோம். இது ஏழு முத்தித் தலங்களுள் ஒன்று. கண்ணன் திருவவதாரம்

செய்து பல்வேறு திருவிளையாடல் செய்த இடம் ஆகும். பாரத இதிகாசத்தில் காணும் பல்வேறு நிகழ்ச்சிகள் இங்கு தான் நடந்தன. இது இந்துக்களுக்கு மிகவும் புனிதமான இடமாகும். ஒரு காலத்தில் யதுகுல மன்னர்கள் இருந்து ஆட்சி புரிந்த இந்த இடம் முகலாய மன்னர்களால் இடிக்கப் பட்டு, மிஞ்சிய அழிவுகள் இப்போது பழஞ் சின்னங்களாக உள்ளன.

காலை ஏழு முப்பது மணிக்கு பஸ் மூலம் யமுனையில் குளிக்கப் போனோம். நதியை அடைய குறுகிய தெருக்கள் வழியாக நீண்ட தூரம் நடந்து சென்றோம். நதியில் நீர் நிரம்பி ஓடியது. இதில் பல கட்டங்கள் அல்லது துறைகள் உள்ளன. விஸ்ராந்திகாட் என்னும் இடத்தில் குளித்தோம். சாஸ்திரி ஒருவர் எங்களுக்குச் சங்கல்பம் செய்து வைத்தார். பின் கரைமீது உயரமான இடத்தில் இருந்த துவாரகநாத் கோயிலுக்குப் போனோம். வழிபாடு துவங்கவில்லை. சந்நிதி திரையிடப்பட்டிருந்தது. சிறிது நேரத்தில் வழிபாடு துவங்கியது. திரை நீக்கப்பட்டது. பச்சைமேனி கொண்டல் வண்ணன் கண்ணபிரானைக் கண்டு வழிபட்டோம். பின் 10 கிலோ மீட்டர் தூரத்திலிருந்த 'பிருந்தாவனம்' சென்றோம். பல சந்துகள் வழியாக ராதாரமணன் கோயிலை அடைந்தோம். இது சைதன்ய மகாப் பிரபுவின் தென்னாட்டுச் சீடர்களில் ஒருவரான ஸ்ரீகோபால்பட் சுவாமி என்பவரால் கட்டப்பட்டது. இவர் நேபாளத்தில் கண்டக் (Gantak) நதியில் கண்டெடுத்த சாளக்கிராமம் ஒன்றைக் கொண்டு வந்தார். இவருடைய பக்தி விசேஷத் தால் இச்சாளக்கிராமத்துக்கு 1542-ல் கைகளும் கால்களும் முளைத்தனவாம். இந்த அற்புதமான மூர்த்தியை வைத்துத்தான் இக்கோயிலைக் கட்டினார். கோயிலைப் பலவகையிலும் அழகுபடுத்தினார். இங்குள்ள புதிய கோயிலைக் கோஸ்வாமியின் சீடர் ஷா பெஹரிலால் என்பவர் ரூ. 80,000 பொருட் செலவில் கட்டினார். கோபால்பட் என்பவருக்குக் காட்சி கொடுத்த இந்த

ராதாகிருஷ்ணனை வழிபட்டுக் கொண்டு ஷா பெஹாரியின் பளிங்குக்கல் கோயிலுக்குப் போனோம். குந்தன்லால் என்னும் லக்னோ நாட்டுச் சேட் ஒருவரால் இந்தக் கோயில் கட்டப்பட்டது. இக்கோயிலின் முகப்பில் முறுக்குக் கயிறு போன்று செதுக்கப்பட்ட பளிங்குக் கல்தூண்கள் பல உள்ளன. இத்தூண்கள் ஒரே கல்லில் செய்யப்பட்டவை ஆகும். அழகான இத்தூண்களுக்கு மட்டும் ரூ. 10,00,000 செலவாயினவாம். பிறகு பலராமன் கோயிலுக்குப் போனோம். மூலத்தானக் கருவறைக்குப் பின்புறம் நந்தகோபன் யசோந்த சந்நிதிகள் உள்ளன. வழிபட்டுக் கொண்டு கண்ணன் விளையாடிய பிருந்தாவனம் பார்த்து விட்டு மக்களை துன்புறுத்திய காளிங்கன் என்னும் கொடிய பாம்பை அடக்கி மக்களின் துன்பத்தைப் போக்கிய காளிங்கன் மடுவுக்குப் போனோம். இங்குக் காளிங்கன் என்னும் பாம்பின் தலைமீது கண்ணன் நின்றிருக்கும் கோலத்தில் எழுந்தருளியுள்ள சிறிய கோயில் இருக்கின்றது. அதன் அருகில் புன்னை மரம் ஒன்று உள்ளது. இதில் மக்கள் கட்டித் தொங்கவிட்ட பன்னிறத் துணிகள் தொங்குகின்றன. கண்ணன் கோபிகைகளின் புடவைகளை எடுத்துக் கொண்டு மரத்தின்மீது ஏறிக் கொண்டு விளையாடியதன் சின்னமாக இம்மரம் இருக்கின்றது. இங்கு விற்ற ஒரு அடி நீளமுள்ள கையகலத் துணியைப் பலர் விலைக்கு வாங்கி மரக்கிளையில் கட்டித் தொங்க விட்டனர். பின் அங்கிருந்து பல சந்துகளைக் கடந்து ரங்கநாதர் கோயிலுக்குப் போனோம்.

## ரங்கநாதர் கோயில்

ரங்கநாத சுவாமி கோயில்கள் பல நகரங்களில் உள்ளன. இவை எல்லாம் தமிழ்நாட்டு முறைப்படி கட்டப் பட்டுள்ளன. கோயில் நுழைவாயிலில் தென்னாட்டுக் கோயில் கோபுரம் காட்சி அளித்தது. இக்கோயிலில் நின்ற கோலத்தில் ஸ்ரீதேவி பூதேவியுடன் திருமால் எழுந்தருளி

யுள்ளார். கோயில் அர்ச்சகர்கள் தென்னாட்டைச் சார்ந்தவர்கள். எங்களைக் கண்டதும் தமிழில் பேசி வரவேற்றனர். பரந்தாமனை மனநிறைவோடு வணங்கி வழிபட்டோம். தாயார் சந்நிதி தனியாக இருக்கிறது. அம்மையையும் வழிபட்டுக் கொண்டு கோயிலை வலம் வந்தோம். பிராகாரத்தில் பன்னிரண்டு ஆழ்வார்களும், ஆண்டாளும் எழுந்தருளியுள்ளனர். வணங்கித் தீர்த்தம் பெற்றுக் கொண்டு கோயிலின் அடுத்த தெருவிலுள்ள கண்ணாடி மந்திருக்குப் போனோம். கண்ணாடி அறையில் சிவலிங்க மூர்த்தி கோயில் கொண்டுள்ளார். அறைக்குள் போனதும் மூர்த்தியின் திருவுருவத்தோடு நமது உருவமும் பல வடிவங்களாகத் தோன்றுகின்றன. அறையின் நாற்புறமும் நம் வடிவங்கள் தோன்றின. அந்த அறைக்குப் பக்கத்தில் சின்ன தொட்டிலில் கண்ணனின் திருவுருவத்தைப் படுக்க வைத்து இரண்டு பேர் அத்தொட்டிலை ஆட்டிக் கொண்டிருந்தனர். தொட்டிலின் முன்புறம் நீண்ட கயிறு ஒன்றைக் கட்டிவிட்டிருந்தனர். எங்களையெல்லாம் அங் கிருந்தவர் அன்போடு வரவேற்று உபசரித்து உட்காரும்படி செய்தார். உடனே அவர் தொட்டிலைக் காட்டி தொட்டிலில் கட்டியிருந்த கயிற்றைப் பற்றி, நம் விருப்பங் களை எண்ணித் தொட்டிலை ஆட்டினால் எண்ணிய எண்ணங்கள் யாவும் நிறைவேறும் என்றும் தொட்டிலை ஆட்டக் கட்டணம் ரூ. 1-25 என்றும் சொன்னார். பலர் தமது விருப்பங்களைக் கண்ணனிடம் சொல்லி அருள் பெற்று நிறைவேற்றிக் கொள்ளலாம் என்று எண்ணி ரூ. 1-25 செலுத்தித் தொட்டிலை ஆட்டினர். இவ்வாறு செய்ய முன் வந்தவர்களின் முகவரிகளை ஒருவர் தாம் வைத்திருந்த புத்தகத்தில் பதிவு செய்து கொண்டார். இங்கிருந்து கீதா மந்திருக்குப் போனோம்.

### கீதா மந்திர்

இது பிருந்தாவனத்திலிருந்து மதுரா போகும் வழியில் இருக்கின்றது. இது பிர்லாவால் கட்டப்பட்டது. மிக

உயரமான பளிங்குத் தூண்கள் தாங்கக் கூடாரம் போன்ற மேல் விதானம் கலை நுட்பமும் அழகும் கொண்டதாய் விளங்கியது. இங்குத் திருமால் திருமகளோடு கோயில் கொண்டுள்ளார். கண்ணனின் திருவிளையாடல்களை விளக்கும் பன்னிறச் சித்திரங்களும் பளிங்குத் திருவுருவங்கள் முழுவதும் பொறிக்கப்பட்டுள்ளன. ஒரு சிகப்புக்கல் தூண் ஒன்றில் 700 சுலோகங்களையும் பொறித்து நட்டு வைத்துள்ளனர். இத்தூணுக்கு முன்னால் கருங்கல் தேரும் அதன்மீது அர்ச்சுனனும் தேரை இழுக்கும் நான்கு புரவிகளும், அதன் கடிவாளங்களைக் கையில் ஏந்தியவாறு அர்ச்சுனனை நோக்கி அமர்ந்த கண்ணனும் கண்ணையும் கருத்தையும் கவருமாறு இருந்தன. கீதைச் சொற்பொழிவுகள் நிகழ்த்துவதற்கு ஒரு தனி மண்டபம் உளது. மற்றொரு பகுதியில் பெரிய சிவலிங்க மூர்த்தி எழுந்தருளியுள்ளனர். இவற்றையெல்லாம் தரிசித்துக் கொண்டு அடுத்துள்ள கண்ணன் பிறந்த இடத்துக்குப் போனோம். இங்கு முஸ்லிம் கோரி ஒன்றும் இருக்கின்றது. இங்கு இருந்த தொன்மையான பண்டைய கண்ணன் கோயிலை முஸ்லிம் மன்னர்கள் இடிக்க இந்துக்கள் புதிய கோயிலைக் கட்ட இவ்வாறு நான்கு முறை கட்டவும் இடிக்கவுமாக இருந்த இந்த இடத்தைப் பிர்லா விலைக்கு வாங்கிக் கண்ணனுக்கு அழகிய கோயில் ஒன்றைப் பளிங்கால் எழுப்பியுள்ளார். இது மாடக்கோயிலைப் போன்று உயரமான இடத்தில் கட்டப்பட்டுள்ளது. கண்ணன் பிறந்த சிறைச்சாலையும் அதன் பக்கத்தில் கண்ணன் கோயிலும் இருக்கின்றன. கண்ணன் பிறந்த இடத்தை நான்கு முறை முகலாய மன்னர்கள் அழித்தும் அழியாது இப்போது சிரஞ்சீவத்வம் பெற்று அழியாச் சின்னமாக அழகுற நிற்கின்றது.

கண்ணனை நினைக்கும்போது நம்முன் வந்து நிற்பது பகவத் கீதையாகும். உலகம் போற்றும் நூல்களுள் இது தலை சிறந்ததாகும். இது உலகுக்குப் பல உத்தமர்களைத் தோற்றுவித்து அளித்திருக்கிறது. கரம்சந்த் மோகன்தாஸ்

காந்தியை மகாத்மாகாந்தி ஆக்கியது கீதைதானே! உலகத்தில் அற நூல்களிலேயே தலை சிறந்து நிற்பது திருக்குறள். அதேபோல் உலக மேதைகளால் பாராட்டப் படும் நூல் கீதை.

மதுராவிலிருந்து வண்டி புறப்பட்டு இரவு மணி எட்டு நாற்பத்தைந்துக்கு ஆக்ரா ஸ்டேஷனை அடைந்தது வெய்யில் மிகக் கடுமையாக இருந்தது. மிகுதியாகத் தண்ணீர் பருகினோம்.

## ஆக்ரா

வெள்ளி 26-5-78 காலை ஏழு மணிக்கு பஸ்ஸில் 40 கி.மீ. தூரத்திலுள்ள பதேபூர் சிக்கிரி பார்க்கப் போனோம்.

இது பிரம்மாண்டமான மிகப்பெரிய கோட்டை. முகலாய மன்னன் அக்பரால் கட்டப்பட்டது. 1572 ஆம் ஆண்டில் குஜராத் நாட்டை வெற்றி கண்டதன் அடையாளமாக இந்த இடத்துக்குப் 'பதேபூர் சிக்கிரி' என்று மன்னன் பெயரிட்டான். இது பாபர் காலத்தில் சிறிய இடமாக இருந்தது.

கோட்டை முழுவதும் சிகப்புக் கற்களால் கட்டப் பட்டுள்ளது. இது பல பகுதிகளாக உள்ளன. அக்பரின் மனைவிகள் வசிக்குமிடம், அரசாங்கம் நடத்துமிடம், குளிக்குமிடம், விளையாடும் இடம் என்று அமைந்து பிரம்மாண்டமான இடத்தை இது அடைத்துக் கொண் டிருக்கின்றது. இதைக் கட்டி முடிக்க 9 ஆண்டுகள் ஆயின. செலவு ரூ. 35 இலட்சங்கள், காசிம்கான் என்னும் கட்டடக் கலைஞன் இதைக் கட்டிக் கொடுத்தான். இதன் சுற்றளவு $1\frac{1}{2}$ மைல். இரு பெரும் சுற்றுச் சுவர்களால் சூழப் பட்டுள்ளது. வெளிச்சுவர் 40 அடி உயரமும் உள் சுவர் 70 அடி உயரமும் உடையது. கோட்டையைச் சுற்றி அகழ் ஒன்றும் இருக்கின்றது.

கோட்டைக்குள் தலைவாயில் வழியாக உள்ளே போனோம். நவுபட்கானா என்னும் இசை அரங்கைக் கடந்துதான் உள்ளே போகவேண்டும். அதைத் தாண்டி தர்பார் மண்டபம் இருக்கின்றது. இது 385 அடி நீளம் 181 அடி அகலம் 150 அடி உயரம் உடைய மிகப்பெரிய மண்டபம். இதில் அழகான வெள்ளி அரியணை ஒன்று இருக்கின்றது. இதில் அமர்ந்துகொண்டுதான் அக்பர் பாதுஷா தமது தீர்ப்புகளை வழங்குவார். பேட்டிகளையும் அளிப்பார். இம்மண்டபத்தின் மேல்பகுதியில் அக்பரின் மனைவிகள் தர்பார் நிகழ்ச்சிகளைப் பார்ப்பதற் கென்று கூண்டுகள் அமைக்கப்பட்டுள்ளன.

அடுத்து இரகசிய ஆலோசனை செய்யும் சிறிய அறை ஒன்று இருக்கின்றது. இந்த அறையின் நடுவில் பிரசித்தி பெற்ற தூண் இருக்கின்றது. இத்தூணின் மேல்பாகம் பலர் அமர்ந்து பேசக்கூடிய அளவுக்கு அகன்ற இடமாய் உளது. இந்த இடத்திலிருந்து இரகசிய ஆலோசனை களை அக்பர் நடத்துவார்.

இதை அடுத்து அக்பர் தமது மனைவியருடன் கூடி உல்லாசமாக விளையாடும் இடம் இருக்கின்றது. இதைக் கடந்ததும் அக்பரின் படுக்கையறைக்கு வருகிறோம். இந்த அறை அற்புதமான சித்திரவேலைப்பாடுகளுடன் விளங்குகின்றது. சுவரில் உள்ள சித்திரங்களிடையே தங்கரேகைகள் படர்ந்துள்ளன. அதனிடையில் புத்தரின் திருவுருவமும் வானுலகப் பெண் ஒருவள் அழகிய குழந்தை ஒன்றை ஏந்தியிருக்கும் உருவமும் உள்ளன. புத்தரின் சாந்தமும் வானவரின் அழகும் கொண்ட குழந்தை ஒன்றைப் பெற விரும்பினாரோ என்னவோ?

அதற்குப் பக்கத்தில் அக்பரின் முதல் மனைவியின் அழகான மாளிகை இருக்கின்றது. அக்பர் கட்டிய கட்டடங் களிலெல்லாம் இதுவே மிகுந்த அழகுடையது. இது முழுவதும் செங்கற் கட்டடம். இதில் 15 அடி சதுர

அறை ஒன்றின் மேற்கூறை தூண்கள் சுவர்கள் யாவும் ஒரு அங்குலம் பாக்கியில்லாமல் சித்திரங்கள் தீட்டி அழகு படுத்தப்பட்டுள்ளது. இச்சித்திரங்களில் காடுகளும் வன விலங்குகளும் காட்சியளிக்கின்றன. அதனருகே 95 அடி சதுரத் தொட்டியும் அதன் நடுவே ஒரு மேடையும் அம் மேடைக்குப் போவதற்கு நாற்புறமும் பாலம் போன்ற பாதைகளும் உள்ளன. அவ்வப்போது பாதுஷா இங்கு அமர்ந்து பொழுது போக்குவார். இதை அடுத்து ஐந்து அடுக்கு மாளிகை இருக்கின்றது. இதன் கீழ்மாடி 72 அடி நீளம் 58 அடி அகலம் கொண்டது. இதில் அழகு மிக்க தூண்கள் 84 உள்ளன. தூண்களின் வேலைப்பாடுகள் ஒன்று போல் ஒன்று இல்லை. அற்புதமான கலை நுட்பத் தோடு இவை செதுக்கப்பட்டுள்ளன. இரண்டாவது மாடியில் 56 தூண்களும் மூன்றாவதில் 20-ம், நான்காவதில் 12-ம் உச்சியில் 4-ம் உள்ளன. இங்கு மக்கள் பூக்களையும் பழங்களையும் பறிப்பதைப் போன்றும், இரு யானைகள் ஒன்றையொன்று நோக்கி நிற்பதைப் போன்றும் அழகிய சிற்பங்கள் அழகொழுக உள்ளன. இவற்றை ஒட்டி 756 அடி நீளம் 272 அடி அகலம் கொண்ட நிலப்பரப்பு இருக்கின்றது. இத்தரையில் கறுப்பு வெள்ளை நிறச் சதுரங்கள் உள்ளன. இச் சதுரங்களில் அழகான உடை உடுத்திய அடிமைப் பெண்களைக் காய்களாக நிறுத்தி வைத்துப் பாதுஷாவும் அரச குடும்பத்தினரும் சதுரங்கம் விளையாடுவார்கள். ஆட்டம் ஆடுவோரின் சொற்படி கட்டங்களில் உள்ள பெண்கள் மாறி மாறி நிற்பார்கள்.

இந்த மாளிகைக்குப் பக்கத்தில் சோதிடம் பார்க்கும் இடமும் மருத்துவ நிலையமும் உள்ளன. இவற்றைக் கடந்ததும் ஜஹாங்கீரின் தாயாகிய இந்து மனைவி மிரியம் என்பவரின் இருமாடி மாளிகைக்குப் போகிறோம். இது தங்கத்தைப் பயன்படுத்தி பலவகையாக அழகு படுத்தப்பட்டுள்ளது. இது தங்க மாளிகை என்றே அழைக்கப்பட்டது. இதில் அழகுமிக்க குளிக்கும் அறை

ஒன்று இருக்கின்றது. இதற்குள் அனுமதியின்றி எவரும் உள்ளே போகக் கூடாது. தவறிப் போனால் அவர் தலை நிச்சயம் உருளும்.

அதை அடுத்து அக்பரின் மகனுடைய இந்து மனைவி ஜோதிபாயின் அழகிய மாளிகை இருக்கின்றது. இதில் ஒரு மாடம் இருக்கின்றது. அது துளசிமாடம் என்றும் ஜோதிபாய் வழிபடுவதற்கென்று அது அங்கு அமைக்கப் பட்டதென்றும் சொல்லப்படுகின்றது. அதை ஒட்டி வெய்யிற் காலத்திலும் மழைக் காலத்திலும் அரச பெண்கள் இன்பமாகக் காலத்தைக் கழிப்பதற்கென்று கட்டப்பட்ட இன்ப இல்லம் இருக்கின்றது.

இதைத் தாண்டிப் போனால் மதியூகி பீர்பாலின் மாளிகையை அடைகிறோம். இது இரண்டடுக்கு மாளிகை. இது, பீர்பால் தமது மகளுக்காகக் கட்டியது என்றும் சொல்லப்படுகின்றது.

பீர்பாலின் இயற்பெயர் மஹேஸ்தாஸ். இவர் மறையவர் குலத்தைச் சார்ந்தவர். அக்பரின் ஒன்பது அமைச்சர்களுள் இவரே முதலமைச்சராவார். கூர்மை யான மதி நுட்பமும், அறிவும், சமயத்துக் கேற்பச் சாதுர்ய மாகப் பதிலளிக்கும் இணையற்ற ஆற்றலும் உடையவர். இவருடைய அறிவையும் மதி நுட்பத்தையும் விளக்கும் கதைகள் பல உள்ளன. இவர் அக்பரின் அன்புக்கும் நம்பிக்கைக்கும் உரியவராயிருந்தார். பாதுஷாவால் 'ராஜா' என்னும் பட்டமும் அளிக்கப்பெற்றவர். 'யூசப் ஜாய்' என்பவனோடு நடந்த போரில் இவர் வீரமரணம் அடைந்தார். இவர் இறந்த துக்கத்துக்கு ஆற்றாது பாதுஷா பல நாள்கள் உண்ணாது இருந்தார்.

பீர்பால் மாளிகைக்கு அப்பால் 13 அடி உயர இரு யானைகள் உள்ள நுழைவாயில் ஒன்று இருந்தது. இந்த யானைகளை ஔரங்கசீப் உடைத்துச் சிதைத்து அத் துகள்களை அங்கேயே புதைத்துவிட்டான். அதனருகே

அரசமகளிர் வழிபடுவதற்கென்று கட்டப்பட்ட மசூதி இருக்கின்றது. அதற்கப்பால் சிறிது தூரத்தில் அழகிய புரவிகளும் ஒட்டகங்களும் கட்டும் லாயம் உளது. இதை ஒட்டி வழிப்போக்கர்களும் வியாபாரிகளும் தங்கும் இடம் இருக்கின்றது. அதன் பக்கலில் உயரமான மிகப்பெரிய ஸ்தூபி ஒன்று இருக்கின்றது. இது இறந்த பட்டத்து யானைக்காகக் கட்டப்பட்டது. அதன் அடையாளமாக ஸ்தூபியின் நடுப்பகுதியில் யானைத் தந்தங்கள் பதிக்கப் பட்டுள்ளன.

அடுத்து, மக்காவில் உள்ளதைப் போன்ற தொழுகை இடம் ஒன்றை இங்குக் கட்டியுள்ளனர். அதன் அருகே ஷேக் சலிம் சிஸ்டி சமாதி இருக்கின்றது. இச்சமாதியைச் சுற்றியுள்ள கிராதியில் துண்டுக் கயிறுகள் கட்டப்பட்டுத் தொங்குகின்றன. நாம் எதைக்கோரிக் கயிற்றைக் கட்டு கிறோமோ அந்த கோரிக்கை நிறைவேறுகிறது என்ற நம்பிக்கை மக்களிடம் இருக்கிறது. அதனால் பலரும் தமது கோரிக்கைகளை எளிதில் நிறைவேற்றிக் கொள்ள இங்கு வந்து இந்தக் கிராதியில் கயிற்றைக் கட்டித் தொங்க விடுகின்றனர். எண்ணிய காரியம் நிறைவேறியதும் இதில் கட்டிய கயிற்றை அவிழ்த்துக்கொண்டு போய்விடுவர். இச் சமாதிச் சுவர்களில் அழகான சித்திரங்கள் தீட்டப் பட்டுள்ளன. இதனருகில் மற்றும் பல சமாதிகள் உள்ளன. சமாதிகளெல்லாம்ஒவ்வொன்றும் பெரிய மாளிகை போன்று தனித்தன்மை பெற்று அழகின் சின்னங்களாக உள்ளன.

முடிவாகத் தென்னிந்திய வெற்றியைக் கொண்டாடும் பொருட்டு அக்பர் கட்டிய **புலாண்டு** என்னும் மிகப்பெரிய நுழைவாயிலுக்குப் போகிறோம். இது நிலமட்டத்திலிருந்து 176 அடி உயரமும் இதன் மேடையிலிருந்து 134 அடியுமாக இருக்கின்றது. நிலத்திலிருந்து மேடைக்கு ஏறிப்போகும் படிகள் இந்த நுழைவாயிலின் அழகை அதிகப் படுத்து கின்றது. நுழைவாயிலின் சுவர்களில் அராபிய வாக்கி யங்கள் பொறிக்கப்பட்டுள்ளன.

இவ்வளவையும் பார்த்துவிட்டு வந்ததும் நாங்கள் யாவரும் களைத்து விட்டோம். கால்கள் வலிகண்டு தள்ளாடின.

முகம்மதிய மன்னர்கள் தமது ஆட்சியின்போது தமக்காகப் பிரம்மாண்டமான மாளிகைகளையும் அழகான சமாதிகளையும் மசூதிகளையும் நாட்டில் கட்டி நிரப்பினர். இந்திய நாட்டு மன்னர்களோ அழியாத் தெய்வத்துக்கு அழிவற்ற கோயில்களைக் கட்டி அதில் பலவித செல்வங் களை பரப்பினார்கள்.

மனிதன் மன்னனானாலென்ன சாதாரண மனிதனா னாலென்ன? நிலையாமை என்பது எல்லாருக்கும் பொது. இதை நம் நாட்டு மன்னர்களும் மக்களும் நன்கு உணர்ந் திருந்தனர். அதனால் தமக்காகப் பிரம்மாண்டமான மாளிகைகளைக் கட்டிக்கொள்ளாமல் இறைவனுக்குச் சிதையாத கோயில்களைக் கட்டினார்கள். மன்னர்களைப் போல அவர்கள் வாழ்ந்த மாளிகைகளும் மண்ணில் மறைந்தன. ஆனால் மக்கள் வழிபட்டு உய்ய இறைவனுக்கு அவர்கள் எழுப்பிய கோயில்கள் மட்டும் இன்றும் உள்ளன. பத்தேபூர் சிக்ரியை விட்டு அகன்று அக்பர் சமாதிக்குப் போனோம்.

## அக்பர் சமாதி

இச்சமாதி 150 ஏக்கர் நிலப்பரப்பில் இருக்கின்றது. இதைச் சுற்றி 25 அடி உயர சுற்றுச் சுவரும், அதில் நாற்புறமும் நான்கு வாயில்களும் உள்ளன. இதன் தலைவாயில் 74 அடி உயரம். இது சிகப்புக் கல்லால் ஆனது. சமாதிக் கட்டடத்தின் மாடிமீது நான்கு மூலை களில் 84 அடி உயரத்தில் நான்கு ஸ்தூபிகள் உள்ளன. தலைவாயிலில் சந்தன மரத்தாலான கதவுகள் இருந்தன. அவற்றை 'ஜாட்' என்னும் இவர்களுடைய பகைவர்கள் அப்புறப்படுத்தி விட்டனர். இத்தலைவாயிலின் மேற்கூறை

வெள்ளி. அதில் தங்க ரேகைகள் படரவிட்டுக் கலை நுட்பத்தோடு அழகு படுத்தியிருந்தனர். இதையும் ஜாட்கள் பெயர்த்தெடுத்துக் கொண்டு போய்விட்டனர். முகலாய மன்னர்களின் ஆட்சியைக் கைப்பற்றி அவர்கள் செய்தும் தொகுத்தும் வைத்திருந்த விலையுயர்ந்த பொருள்களை எல்லாம் கொள்ளையடித்தும் சீர்குலைத்தும் அழித்தவர்கள் ஜாட்களே யாவர்.

இந்த சமாதிக் கட்டடம் முழுவதும் அற்புதமான அழகுடன் விளங்குகின்றது. நுழைவாயிலிலிருந்து சமாதி கட்டடத்துக்குப் போகும் பாதையில் கருங்கல் பாவி இருந்தனர். இந்த தடத்தின் நடுவில் நீர் நிரம்பிய குறுகிய வாய்க்காலும் அதன் இருபுறங்களில் பசும்புல் தரையும் அதன் இடையே பெரிய மரங்களும் இருந்தன. சமாதிக் கட்டடம் 496 அடி சதுரமும் 30 அடி உயரமும் உடைய மேடைமீது இருந்தது. இது ஐந்து அடுக்கு மாடி. கீழ் தளத்தை விட மேல் தளங்கள் நான்கும் ஒன்றை விட ஒன்று அளவில் சின்னதாக இருந்தது. நான்கு மாடிகள் சிகப்புக் கற்களாலானவை. ஐந்தாவது மாடி வெள்ளைப் பளிங்கா லானது. கீழ் உள்ள நான்கு மாடிகளும் அக்பர் கட்டியவை. ஐந்தாவது மாடி அக்பரின் மகன் ஜஹாங்கீர் கி. பி. 1613 ஆம் ஆண்டில் 15 லட்சம் செலவில் கட்டினான். சமாதி நில மட்டத்துக்குக் கீழ் இருக்கின்றது. இதை நோக்கி வெளி யிலிருந்து போகும் பாதை சரிவாகப் போகின்றது. இது குகை போன்ற வழி. ஒரே இருட்டு. சுவரோரமாகச் சுவரைத் தடவியபடி நிதானமாகப் போனோம். சமாதி எளிய முறையில் அமைந்திருக்கின்றது. அதன்மீது ஜரிகைப் பூப்போட்ட வெல்வெட் விரிப்பு விரிக்கப்பட்டிருந்தது. அதனருகில் அக்பரின் உடைகள் போர்வாள் புத்தகங்கள் வைக்கப்பட்டுள்ளன. மேற்கூரையிலிருந்து ஒரு விளக்கு தொங்கியது. இதன் மங்கலான வெளிச்சத்தில்தான் சமாதியைப் பார்க்க வேண்டும். அக்பரின் விருப்பத்தின்படி அவர் சமாதியை எளிய முறையில் அமைத்தனர். முதலில்

இந்தச் சமாதி இருந்த இடத்தை வெள்ளியும் தங்கமும் கொண்டு அழகு படுத்தியிருந்தனர். ஜாட்கள் இவற்றைப் பெயர்த் தெடுத்துக்கொண்டு போய்விட்டனர். இந்த சமாதிக் கட்டிடத்தின் இரு பக்கங்களில் அரச குடும்பத் தினரின் சமாதிகள் உள்ளன. இக்கட்டிடத்தின் ஐந்தாவது மாடியிலிருந்து பார்த்தால் தாஜ்மகால் பூரண சந்திரனைப் போன்று அழகாகத் தெரிகிறது. இங்கு 400 மணங்கு எடையுள்ள மிகப்பெரிய பளிங்குக் கல் இருக்கின்றது. கீழேயுள்ள அக்பரின் சமாதி எவ்வளவு பெரியதோ அவ்வளவு பெரியது இக்கல்லும். இக்கல் கலையழகு மிக்க வேலைப்பாடுகளுடன் விளங்குகிறது.

அழகு மிக்க இக்கல்லில் ‘கடவுள் மிகப் பெரியவர்’ ‘அவர் புகழ் பெரிது’ என்ற அராபிய வாக்கியங்களும் இவற்றைச் சுற்றிக் கடவுளின் திருப்பெயர்கள் 99-ம் பொறிக்கப்பட்டுள்ளன. இக்கல்லைச் சுற்றியுள்ள தரை முழுவதும் வெள்ளை கறுப்பு நிறப்பளிங்குக் கற்கள் பதிக்கப்பட்டு அழகாக உளது. அடுத்து ‘ராதா சுவாமி’ சமாதிக்குப் போனோம்.

## ராதா சுவாமி சமாதி

ஆக்ரா நகரிலிருந்து நான்கு மைல் தூரத்தில் இச்சமாதி இருக்கின்றது. ராதா சுவாமி 1818 - 1873-ல் வாழ்ந்தவர். புதுக்கொள்கை ஒன்றை வகுத்து அதற்குக் குருவாக இருந்து பரப்பினார். இக்கொள்கையை ஏற்று இவருக்கு கோடிக் கணக்கான சீடர்கள் சேர்ந்தனர். இவருடைய சமாதிக்கு அருகிலேயே இவருடைய மனைவியும் சமாதி வைக்கப் பட்டார். இந்த இருவரின் சமாதிகளின்மீது மிகப் பெரிய மூன்றடுக்குக் கட்டடம் எழுப்பப் படுகின்றது. இக் கட்டடம் முழுவதும் வெள்ளைப் பளிங்கால் கட்டப்பட் டுள்ளது. கி. பி. 1918-ல் இக்கட்டடம் கட்டத் துவங்கி 180 பேர் தொடர்ந்து வேலை செய்துவருகின்றனர்.

மிகப் பெரிய பளிங்குத் தூண்களின்மீது பளிங்குக் கூரை அமைந்துள்ளது. தூண்களின் மேல்பாகத்தில் உள்ள உத்தரங்களில் பளிங்குக் கல் கொடிகள் படர்ந்துள்ளன. பழக்குலைகள் தொங்கும் பளிங்குக் கல் மரங்கள் உள்ளன. கொடிகளும் அவற்றின் இலைகளும் உண்மையான வெள்ளைக் கொடி ஒன்று அங்கு படர்ந்துள்ளதைப் போன்றும் மரம் ஒன்றை இலையும் கிளையும் பழக்குலையு மாக வெட்டிக்கொண்டு வந்து அங்கு நட்டு வைத்ததைப் போன்றும் இருந்தன. திராட்சைக் கொடியும் அதில் தொங்கும் பழக்குலைகளும் இயற்கையாக இருக்கின்றன. இவ்வாறு கொடிகளும் மரங்களும் அமைந்த தூண்கள் ஏராளமாயுள்ளன. மேல் விதானத்திலும் அழகுமிக்க வேலைபாடுகள் செய்துள்ளனர். தாஜ்மகாலுக்குப் போட்டி யாக ராதா சுவாமிகளின் சீடர்கள் இதைச் செய்வதைப் போன்று இருக்கின்றது. கீழ்த்தளம் ஒன்றுதான் கட்டி முடிந்திருக்கிறது. மற்ற இரு தளங்களும் கட்டி முடிய இன்னும் 20 ஆண்டுகள் ஆகலாம். இது கட்டி முடிந்தால் இதுவும் உலக அதிசயங்களில் ஒன்றாக இருக்கலாம். இப்போதே ஒரு கோடி ரூபாய் செலவிட்டுள்ளனர்.

## தாஜ்மஹால்

தாஜ்மஹால் உலக அதிசயங்களுள் ஒன்று. ஆக்ரா நகருக்கு $1\frac{1}{2}$ மைல் தூரத்தில் ஜமுனா நதியின் வடகரையில் இருக்கின்றது. ஷாஜஹான் சர்வ வல்லமையுள்ள சக்கிரவர்த்தியாக இருந்தான். எனினும் தனது உயிர்க் குயிராக இருந்த காதலியின் உயிரை இவனால் காக்க முடியவில்லை. தனது மறைந்த காதலியின் அஸ்திகளின் மீது அதிசயமிக்க அழியாச் சின்னம் ஒன்றை மட்டும் அமைக்க முடிந்தது. இச்சின்னம் மன்னன் கட்டிய அழகு மிக்க மாளிகைகள் எல்லாவற்றுக்கும் சிகரம் வைத்தது போன்று அமைந்தது.

மும்தாஜ் மஹால் 1592-ல் பிறந்தாள். பிறப்பால் இவள் ஒரு பெர்சியன். ஜிஹாங்கீரின் முதலமைச்சரும் நூர்ஜஹானின் சகோதரனுமான அசப்கானின் மகள் ஆவாள். பேரழகியான இவள் தனது 21 ஆவது வயதில் ஷாஜஹானுக்கு இரண்டாம் மனைவியாக வாழ்க்கைப் பட்டாள். எனினும் இவள் தனது அழகாலும் குணத்தாலும் மன்னனின் மனத்தை முற்றிலும் கவர்ந்து முதலிடம் பெற்றாள். மன்னன் மற்ற மனைவிகள் எவர்பாலும் வைக்காத அன்பை இவள்பால் வைத்திருந்தான். இவர்கள் இருவரும் உடலிரண்டு உயிர் ஒன்று எண்ணும்படி இணைந்து இருந்தனர். அரண்மனையில் காதலியாகவும் ஆட்சியில் அமைச்சனாகவும் மன்னனுக்கு இருந்தாள். போர்க் காலத்திலும் இவர்கள் பிரிந்திருந்ததில்லை. மன்னன் போருக்குப் போகும் போதும் மும்தாஜ் உடன் போவாள். மன்னன் போர்க்களத்தில் இருக்கும்போது இவள் பாசறையில் இருப்பாள்.

கி. பி. 1631 ஆம் ஆண்டில் 'கான் ஜெஹான் லோடி' என்னும் புரட்சியாளனை அடக்கப் படைகளோடு ஷாஜஹான் டெக்கானுக்குப் போனபோது குழந்தைப் பேறு பெறும் நிலையிலிருந்தும் மும்தாஜ் அவனுடன் போர்க்களம் சென்றாள். மன்னன் போர்க்களத்தில் இருந்த சமயம் மும்தாஜ் பாசறையிலேயே ஒரு மகவை ஈன்றாள். பேறு காலத்தில் உடற் கோளாறு உண்டாயிற்று. இதையறிந்த மன்னன் போர்க்களம் விட்டுப் பாசறைக்கு விரைந்தான். அப்போது மும்தாஜ் ஆபத்தான நிலையில் இருந்தாள். மன்னனைக் கண்டதும் ஆற்றாமையோடு அவன் கைகளைப் பற்றிக்கொண்டு அவன் முகம் நோக்கிக் கண் கலங்கினாள். இதைக் கண்ட மன்னனும் மனங்கலங்கிக் கண்ணீர் உகுத்தான். பின் தன் காதலியை நோக்கி "அன்பே! உன் மீது நான் கொண்டுள்ள உண்மைக் காதலை உலகுக்கு எப்படி உணர்த்துவேன்" என்றான். அதற்கு அவள் "எப்படி நம்

காதல் ஒப்புவமை அற்றதோ அதைப் போன்று ஒப்புவமையில்லாத காதற் சின்னம் ஒன்றை அமையுங்கள்'' என்றாள். 17-6-1631-ல் மும்தாஜ் தனது 39-வது வயதில் உயிர் நீத்தாள். மன்னன் அடைந்த துயருக்கு அளவே இல்லை. மும்தாஜின் உடம்பு எரிக்கப்பட்டு அதன் அஸ்திகள் பர்ஹான்பூர் தோட்டத்திலேயே வைக்கப்பட்டன. போர் முடிந்ததும் மன்னன் ஆக்ராவுக்குத் திரும்பினான். ஆறு திங்களுக்குப் பின் பர்ஹான்பூரிலிருந்த அஸ்திகள் அரச மரியாதைகளுடன் ஆக்ராவுக்கு எடுத்து வரப்பட்டு ஜெய்பூர் மகாராஜாவின் அரண்மனைத் தோட்டத்தில் வைக்கப்பட்டது. மன்னன் இரண்டு ஆண்டுகள் எந்த கேளிக்கைகளிலும் விழாக்களிலும் கலந்து கொள்ளாமல் துக்கத்தில் மூழ்கியிருந்தான்.

இக்காலத்தில், தன் காதலிக்குச் சிறந்த சின்னத்தை அமைக்க உலகின் பல பகுதிகளிலிருந்த கட்டிடக் கலைஞர்களை அழைத்து ஆலோசனைகள் நடத்தினான். முடிவில் இன்றுள்ள தாஜ்மஹால் அமைப்பைத் தேர்ந்தெடுத்தான். சிறப்பாகக் கட்டி முடிக்கப் பல நாட்டைச் சார்ந்த பல வகைக் கலைஞர்களை வரவழைத்தான். இந்தியா, ஈரான், ஈராக், துருக்கி, அரேபியா முதலிய நாட்டிலிருந்து கலைஞர்கள் 20,000 பேர் வந்து குவிந்தனர். இவர்கள் யாவரும் ஒன்று சேர்ந்து 1631 ஆம் ஆண்டில் துவக்கி 22 ஆண்டுகள் இரவு பகல் உழைத்து இச்சின்னத்தைக் கட்டி முடித்தனர். இதற்கு ஆன செலவு 3 கோடி என்று மதிப்பிடப்பட்டது. பல மன்னர்களும் நவாப்புக்களும் இக்கட்டடத்துக்காகத் தங்கமும், வெள்ளியும் கொடுத்து உதவினர்.

தாஜ்மகாலும் அதன் தோட்டமும் மற்ற கட்டடங்களும் 42 ஏக்கர் நிலத்தில் அமைந்துள்ளன. தோட்டமும் திட்டமிட்டு அழகாக அமைக்கப்பட்டுள்ளது.

தாஜ்மகாலுக்குப் போகும் நுழைவாயில் சிகப்புக் கல்லால் கட்டப்பட்டுள்ளது. இதன் இருபுறச் சுவர்களில்

வெள்ளைப் பளிங்குக் கல்லில் கறுப்புக்கல் எழுத்துக்களில் குரான் அதிகாரம் ஒன்று பொறிக்கப்பட்டுள்ளது. இதில் கலைஞர்கள் ஓர் அற்புதம் நிகழ்த்தியுள்ளனர். இந்த குரான் வாக்கியங்கள் 80 அடி உயரம் வரை சுவரில் வரிசையாகப் பொறிக்கப்பட்டுள்ளது. எனினும் இவற்றின் எழுத்துக்கள் கீழ் இருந்து மேல்வரி வரை ஒரே வடிவில் தெரிகின்றன. தூரத்தை ஒட்டி எழுத்துக்களின் வடிவம் சிறிதும் பெரிதுமாகத் தெரியும். இங்கு 80 அடி உயரத்துக்கும் எழுத்துக்கள் யாவும் கீழிருந்து மேல்வரி வரை ஒரே வடிவாகத் தெரிகிறது. அவ்வாறு தோன்றும்படியாக எழுத்துக்களின் வடிவத்தை மேலே போகப் போகச் சிறிது சிறிதாகப் பெரிதுபடுத்தி அமைத்துள்ளனர்.

இந்த வாயிலுக்கு முதலில் வெள்ளிக் கதவுகள் பூட்டப்பட்டிருந்தன. முகலாய ஆட்சிக்குப் பின் வந்த ஜாட் (JATS) என்பவர்கள் இக் கதவுகளை அப்புறப்படுத்தி உருக்கி விட்டனர். அதற்குப் பின் வந்த ஆங்கிலேயர்கள் இப்போதுள்ள உலோகக் கதவுகளைப் பொருத்தினார்கள்.

இந்த வாயிலிருந்து 1000 அடி தூரத்தில் தாஜ்மகால் இருக்கின்றது. இதற்குப் போகும் பாதையின் நடுவில் 400 அடி நீளத்தில் 10 அடி அகலமுள்ள நீர் நிலை இருக்கின்றது. இதன் நடுவில் வரிசையாக நீர்ச் சுரப்பிகள் நீரைப் பொழிந்து கொண்டிருக்கின்றன. தொட்டியிலுள்ள நீரில் தாமரை இலைகளும், பூக்களும் நிரம்பி மிதந்து அழகூட்டி வருகின்றன. மேலும் இந்நீரில் பன்னிற மீன்கள் துள்ளி விளையாடி மகிழ்ச்சியூட்டி வருகின்றன. தாஜ்மகாலின் பிம்பத்தையும் இதில் காணலாம்.

இதன் இருபுறமும் நான்கு அடி அகலமுள்ள கல்பாவிய பாதைகள் உள்ளன. இப்பாதைகளை ஒட்டி இருபுறமும் உயரமான சைப்பாரஸ் மரங்கள் இராணுவ வீரர்களைப் போல் வரிசையாக நின்றன. அதற்கு அப்பால் பச்சைக் கம்பளம் விரித்ததைப் போன்று பசும்புல் தரையும், அதில்

பன்னிறப் பூக்கள் கொண்ட பூச்செடிகளும் நிழல் தரும் உயர்ந்த மரங்களும் உள்ளன. இப்பாதை வழியே சமாதிக் கட்டிடத்துக்குப் போனோம்.

தாஜ், ஒன்றின்மீது ஒன்றாக உள்ள இருமேடைகளின் மீது இருக்கின்றது. முதல் மேடை 4½ அடி உயரமுள்ள சிகப்புக்கல் மேடை. இரண்டாவது 18 அடி உயரமும் 313 அடி சதுரமும் உடைய வெள்ளைப் பளிங்காலான மேடை. இதன் தரைமீது சதுரமான கறுப்பு வெள்ளைச் சலவைக் கற்களைப் பரப்பியுள்ளனர். இம்மேடைக்கு ஏறிப் போக 22 படிகள் உள்ளன. இதன்மீது அயன் படைப்போ என்று அதிசயிக்கும் வண்ணம் 300 அடி சதுரப் பரப்பும் 18 அடி உயரமும் கொண்ட தாஜ்மகால் எண்கோண வடிவில் விளங்குகின்றது,

இதன் வாயிலின் முன்னால் வெண் பளிங்காலான போர்டிகோ இருக்கின்றது. இந்த நுழைவாயிலில் கூட இருபுறச் சுவர்களில் குர்ரான் வாக்கியங்கள் பொறிக்கப் பட்டுள்ளன. இவையும் முன் வாயிலில் உள்ளது போலவே கீழிருந்து மேல்வரை எழுத்துக்கள் யாவும் ஒரே வடிவில் காட்சிப்படுமாறு பொறிந்தியுள்ளன.

வாயிலில் நுழைந்து உள்ளே போனதும் நாம் காணும் காட்சி நம்மைத் திகைக்க வைக்கின்றது. கண்கள் உட்புறம் முழுவதையும் சுற்றி வந்து நோட்டமிட்டு ஓர் இடத்தில் படிந்ததும் அதிலிருந்து அவை மீள்வதில்லை.

நிலமும் சுவர்களும் மேல்விதானமும் பிறவும் வெள்ளி முலாம் பூசியது போன்று வெள்ளை வெளேரென்று இருக் இவற்றில் படர்ந்துள்ள கொடிகளும் தழைகளும் பூக்களும் கண்கொள்ளாக் காட்சியாயிருந்தன. இங்கு ஆங்காங்கே விலையுயர்ந்த இரத்தினக் கற்கள் பதிக்கப்பட்டிருந்தன. இப்போது அவை இல்லை. பிற்காலத்தில் அவை பெயர்த் தெடுக்கப்பட்டுக் கொள்ளை போயின.

இந்த ஹாலின் நடுவில் மும்தாஜ்மகாலின் சமாதியும் அதன் பக்கத்தில் ஷாஜஹானின் சமாதியும் உள்ளன. ஷாஜஹான் தனது இறுதி நாள்களில் மிகவும் துயருக்கு ஆளானான். அவன் மகன் ஔரங்கசீப் தந்தையிடமிருந்து ஆட்சியைக் கைப்பற்றிக்கொண்டு தந்தை என்றும் பாராமல் ஆக்ரா கோட்டையில் சிறைப்படுத்தி வைத்தான். அப்போது அவனுடன் அவன் மகள் ஜெஹான்அராபீகம் ஆயுட்காலம் மட்டும் உடன் இருந்தாள். ஷாஜஹான் இறந்தபோதும் அவன் மகன் ஔரங்கசீப் அவன் முகத்தைப் பார்க்கக்கூட வரவில்லை. 22-1-1666-ல் ஷாஜஹான் சாகுந்தறுவாயில் தன் மகளின் மடியில் கிடந்தபடி தாஜ் மஹாலைப் பார்க்கும்படியாகத் தனது தலையைத் தூக்கிப் பிடிக்கும்படியாகச் செய்து, இறுதி மூச்சைத் தனது உயிர்க் காதலி கிடக்கும் தாஜ்மகாலைப் பார்த்தவண்ணம் உயிர் விட்டான். தான் இறந்ததும் தன் உடலை மும்தாஜின் பக்கத்திலேயே வைக்க வேண்டும் என்ற விருப்பத்தைத் தெரிவித்துக் கொண்டான். அந்த விருப் பத்தின்படியே ஔரங்கசீப் தந்தையின் உடலை மும்தாஜின் சமாதியின் பக்கத்திலேயே அடக்கம் செய்துவிட்டான்.

இந்த சமாதிகளைச் சுற்றி ஆறு அடி உயரமுள்ள அழகு மிக்க பளிங்குக் கல் கிராதி ஒன்று இருக்கின்றது. இது பிற்கா லத்தில் வைக்கப்பட்டது. முதலில் ஷாஜஹான் தங்கத்தில் நவரத்தினங்களைப் பதித்து ரூபாய் ஆறு இலட்சத்தில் ஓர் அற்புதமான அழகிய கிராதியைச் செய்து வைத்திருந் தான். திருட்டுக்குப் பயந்து இதை அப்புறப்படுத்திவிட்டு இப்போதுள்ள பளிங்குக் கிராதியை அமைத்தனர். இந்தக் கிராதியை அமைக்கப் பத்து ஆண்டுகளும் ரூ. 50000 செலவும் ஆயிற்றாம். இதுவும் எண்கோண வடிவில் இருக்கின்றது. இதன் வேலைப்பாடுகளும் அற்புதமாகவே உள்ளன.

கிராதியின் நடுவில் உள்ள சமாதிகளிரண்டும் அருமை யான பூ வேலைப்பாடுகளோடு கூடி இருக்கின்றன. வெள்ளைப் பளிங்குக் கல்லில் மெல்லிய கோடுகளைச்

செதுக்கி அதில் பல நிறக் கற்களைப் பதித்துச் செடியாகவும் கொடியாகவும் ஆக்கியுள்ளனர். அதிலுள்ள சிறிய ரோஜாப்பூவை எடுத்துக்கொண்டால் அது அசல் ரோஜாப்பூவைப் போலவே நிறத்தாலும் அமைப்பாலும் இருக்கின்றது. அந்தப் பூவை அமைக்க 60 சின்ன பளிங்குத் துண்டுகளைப் பயன் படுத்தியுள்ளனர். இதை நோக்க இக்கட்டிடத்திலுள்ள பல்லாயிரக் கணக்கான பூக்களையும் கொடிகளையும் எப்படியெல்லாம் முயன்று செய்திருக்கின்றனர் என்பதை அறியலாம்.

இந்த சமாதிகளுக்கு மேலே நவரத்தினங்கள் பதித்த அற்புதமான விளக்கு ஒன்று தொங்கவிடப்பட்டிருந்தது. இது ஜாட்ஸ் (Jats) என்பவர்களால் கொள்ளையடிக்கப் பட்டுப் போய்விட்டது. 1909-ல் லார்ட் கர்ஸன் என்னும் ஆங்கிலேயரால் கொடுக்கப்பட்ட விளக்கு இப்போது இங்குத் தொங்குகின்றது. இது இரவும் பகலும் எரிந்து கொண்டே இருக்கின்றது.

ஒளிமிக்க பளிங்குக் கல்லாலான இக்கட்டடம் முழுவதையும், நுண்மையான இலைகளும் பூக்களும் நிரம்பிய கொடிகளைப் படரவிட்டு, அழகு படுத்தியுள்ளனர். இலைகளும் பூக்களும் கொடிகளும் தமது இயற்கையான வடிவும் நிறமும் கொண்டு திகழ்கின்றன. ஒளிவிடும் இவற்றின் நிறத்தையும் வடிவத்தையும் எந்தச்சாயம் கொண்டும் எவரும் தீட்டிக் காட்டமுடியாது. அந்த அளவுக்கு இவை ஒளியும் நிறமும் வடிவும் கொண்டு விளங்குகின்றன.

இலைகளுக்குக் கருநிறப் பச்சைக் கற்களையும் பூக்களுக்குப் பல நிற செந்நிறக் கற்களையும் பயன்படுத்தியுள்ளனர். பூக்களின் இயல்பான நிறத்தைக் காட்ட அவற்றுக்குப் பலவகையான செந்நிறத் துண்டுகளைப் பதித்து அது உண்மையான பூவென்றே பிரமிக்கும்படியாகச் செய்துள்ளனர். நீலநிறக் கற்களையும் பயன்படுத்தியுள்ளனர்.

சமாதிகள், கட்டிடத்தின் மேலுள்ள வட்ட வடிவமான கூண்டுகள், நான்கு மூலைகளிலுள்ள ஸ்தூபிகள், சுவர்கள், தூண்கள், கிராதிகள் முதலியவற்றின் ஓரங்களில் (borders) பலவித இலை பூ கொடிகளைப் படரவிட்டு வரிசையாக முறைப்படுத்தி, நுட்பமான வேலைப்பாடுகளோடு நுண்மையான பொருள்களைக் கொண்டு செய்திருக்கும் அற்புதத்தை என்னென்று சொல்வது. அற்புதத்தின் அற்புதம் என்று வியப்பதைத் தவிர வேறொன்றும் சொல்வதற்கில்லை.

ஒருவர் தாஜ்மகாலைப் பார்த்ததும் தமது மனைவியைப் பார்த்து 'இது பற்றி உன் கருத்து என்ன?' என்று கேட்டார். அப்போது அம்மாது 'இது போன்ற அற்புதமான சின்னம் எனக்கு அமைவதானால் இன்றே நான் உயிர்விடத் தயார்' என்றாளாம்.

இதைப் பார்த்த வெளிநாட்டவர்கள் இது உலக அதிசயங்களுள் ஒன்று என்றும், இது மனிதப்படைப்பல்ல, தேவப்படைப்பு என்றும் பலவாறு அதிசயித்துக் கூறியுள்ளனர். உலக அழகியின் சின்னம் உலக அதிசயங்களுள் ஒன்றாக, காதல் சின்னமாக அமைந்துவிட்டது. இவ்வழகுச் சின்னத்துக்குரிய உண்மையான சமாதிகள் நிலமட்டத்துக்குக் கீழ் ஓர் அறையில் உள்ளன. இதைப் பார்த்துக் கொண்டு ஆக்ரா கோட்டைக்குப் போனோம்.

## ஆக்ரா கோட்டை

ஆக்ரா கோட்டையை அக்பர் தலைமை இடமாகக் கொண்டபோது அதைக் கி.பி. 1565ஆம் ஆண்டில் கட்டத் துவங்கி கி. பி. 1574-ல் கட்டி முடித்தார். இதற்கு ஆன செலவு 35 இலட்சம் எனப்படுகின்றது. உலகத்திலேயே பலமிக்க கோட்டையாக இது கருதப்படுகின்றது. இக் கோட்டைக்குள் உள்ள மாளிகைகளும் கட்டடங்களும் அவற்றில் செய்யப்பட்டுள்ள அலங்காரங்களும் அக்

காலத்தில் முகலாய மன்னர்கள் எப்படி ஆடம்பரமான சுகபோகங்களில் மூழ்கி வாழ்ந்தார்கள் என்பதைக் காட்டு கின்றன. அக்பர் கட்டிய இக்கோட்டையை அவர் மகன் ஜஹாங்கீரும் பேரன் ஷாஜஹானும் விரிவு படுத்திப் பல அரண்மனைகளையும் கட்டடங்களையும் கட்டினர். அந்தக் காலத்தில் இக்கோட்டைக்குள் 500 கட்டடங்கள் இருந்த தாக வரலாற்று ஆசிரியர்கள் கூறுகின்றனர். பின் வந்த மராட்டியர்களும் ஜாட்களும் பெரும்பாலான கட்டடங் களை இடித்துத் தள்ளித் தரைமட்டமாக்கினராம்.

இக்கோட்டை பல காலங்களில் பலரால் இடிக்கப் பட்டுச் சிதைந்தும் உருக்குலைந்தும் இருப்பினும் இன்னும் இது இதன் கம்பீரத்தையும் அழகையும் இழக்காமல் வியக்கும் வண்ணம் இருக்கின்றது.

இக்கோட்டையைச் சுற்றி வாயில்கள் நான்கு உள்ளன. இவை மிகவும் பலம் வாய்ந்தவை என்பது மட்டுமன்றி அழகாகவும் இருக்கின்றன. இனித் தனித்தனிப் பெயர் கொண்டு விளங்கும் மாளிகைகளைப் பார்ப்போம்.

## தர்சானி தர்வானி

இவ்விடத்தில் சக்ரவர்த்தி நாள்தோறும் சூரிய உதயத்தில் வந்து சூரிய நமஸ்காரம் செய்துவிட்டுப் போவார். எக்காரணம் கொண்டும் இது தவறுவதில்லை. இந்த இடத்திலிருந்து சக்ரவர்த்தியும் அவர் குடும்பமும் யானைப் போரையும் காட்டு விலங்குகளின் போரையும் கண்டு களிப்பார்கள். ஔரங்கசீப் தன் தந்தை ஷாஜஹானை இங்குச் சிறை வைத்ததும் இப்பழக்கத்தை நிறுத்தி விட்டார்.

## ஜஹாங்கீர் மஹால்

அழகான சிற்பங்கள் பல உடையதாய் இருக்கின்றது. சுவர்களும் மேற்கூரையும் பல நிறங்களில் சித்திரங்கள் தீட்டப்பட்டுள்ளன. இவற்றிடை தங்கமுலாம் பூசப்பட்

டுள்ளது. பறவைகளும் இலைகளும் கொடிகளும் தவழ்ந்தன. இது 260 × 288 அடி நிலப்பரப்புடையது. இந்தக் கட்டிடத்தின் இருபுறமும் உயரமான கோபுரங்கள் அழகுபட நின்றன. இதன் உள்ளே அரசிகள் பயன்படுத்தும் இரண்டு மாளிகைகள் உள்ளன. இவற்றையும் சாயமும் தங்கமும் கொண்டு பலவிதமான சித்திரங்களைத் தீட்டி அழகு படுத்தியிருந்தனர். இக்கட்டடத்தின் முன்னால் ஐந்து அடி உயரமுள்ள கல்தொட்டி ஒன்று இருக்கின்றது. இது பாண்டவர்களில் ஒருவனான பீமனுக்கு (Bhang) ஒருவித போதைப் பொருள் தயாரித்த தொட்டி என்று சொல்லப் பட்டது. இதில் உள்ளும் புறமும் ஏறி இறங்கப் படிகள் உள்ளன. இதற்கு அருகில் அக்பர் கட்டிய சில மாளிகைகள் சிதைந்த நிலையில் உள்ளன. இவை அக்பரின் மனைவிகள் வசித்த இடங்களாகும். அவற்றின் அருகில் அகன்ற ஆழமான கிணறு ஒன்றும் இருக்கின்றது. இதைச் சுற்றிக் குளிக்கும் தொட்டிகள் உள்ளன. மாளிகையை ஒட்டி 'ரங் மஹால்' இருக்கின்றது.

## ரங் மஹால்

இதன் நடுப்பகுதி சக்ரவர்த்தியின் படுக்கை அறை ஆகும். இதன் சுவர்களும் மேற்கூரையும் பன்னிறங்களில் தீட்டிய கொடிகளும் பூக்களுமாக அழகுடன் விளங்கு கின்றன.

அக்பரின் மாளிகைகள் சிலவற்றை இடித்துவிட்டு ஷாஜஹான் காஸ்மஹால் என்னும் மிகப்பெரிய அழ கொழுகும் அரண்மனையைக் கட்டினான். இக்கோட்டைக் குள் உள்ள கட்டடங்கள் பலவற்றுள்ளும் இதுவே மிகுந்த அழகுடையது. முழுவதும் வெள்ளைப் பளிங்காலானது. அரசிகள் வாழ்ந்த அந்தப்புரம் இது. இதன் தூண்களும் வளைவுகளும் அபாரமான சிற்பவேலைப்பாடுகளோடு விளங்கின. வழக்கமான சித்திரங்களோடுகூட மேற்கூரை தங்கத்தகடு வேயப்பட்டிருந்தது. தங்கம் பிற்காலத்தில்

பறிபோய் விட்டது. பெரிய தொட்டி ஒன்று இருக்கின்றது. அதில் பல நீர்ச் சுரப்பிகள் உள்ளன. இவை இரவும் பகலும் பன்னீரைப் பொழிந்து கொண்டிருக்கும். இது ஷாஜஹானின் தூங்கும் அறையாயிருந்தது. இதனருகில் ஷாஜஹான் தனது பெண்கள் இருவருக்குக் கட்டித் தந்த பளிங்கு மாளிகைகள் உள்ளன. இவற்றில் செய்திருந்த சித்திர வேலைப்பாடுகளும் தங்கப் பதிவுகளும் சொல்லுக்கு அடங்கா அழகுடன் திகழ்ந்தன. இப்போது இவை நிறம் மங்கியும் தங்கப்பதிவுகள் சுரண்டி எடுக்கப்பட்டும் சிதைந்தும் இருக்கின்றன. எனினும் இம்மாளிகைகளைப் பார்க்கும்போது இவற்றின் முன்னாள் அழகு எப்படி யெல்லாம் இருந்திருக்கும் என்பதை ஊகித்து உணர முடிந்தது.

இதனருகில் கண்ணாடி மாளிகை ஒன்றிருக்கின்றது. இதில் தூண்களிலும் சுவர்களிலும் பிற இடங்களிலும் பல நிறமான கண்ணாடித் துண்டுகளைப் பதித்துத் தங்கமுலாம் பூசி அழகு படுத்தி இருந்தனர். இது அரச குடும்பத்தினரின் குளிக்கும் அறையாகும். இது இரு பகுதிகளாக இருக்கின்றது. ஒன்றில் வெந்நீர்த் தொட்டியும் மற்றொன்றில் தண்ணீர்த் தொட்டியும் உள்ளன. இதன் தரையில் வெள்ளைப் பளிங்குக் கற்களைப் பதித்து அவற்றின் இடை இடையே மீன் வடிவங்களை அமைத்திருந்தனர். இந்த அறையில் மங்கலான விளக்குகள் எரிந்து ஒளிபரப்ப, நறுமண நீரை நீர்ச் சுரப்பிகள் பொழிய, நிலத்தில் நீர் ஊற்றித் தரையைக் குளிர வைத்து அதில் மன்னாதி மன்னன் தனது அழகிய மனைவிகளுடன் விளையாடி மகிழ்வான். இதைச் சுவர்க்க போகம் என்றுதானே சொல்லவேண்டும். பண்டைய நன்னிலை இவை இப்போது இல்லை என்றாலும் இன்னும் இவை காணற்குரிய காட்சிப் பொருள்களாகவே உள்ளன.

இதன் பக்கத்தில் **சமண்பர்ஜ்** என்னும் பளிங்கு மாளிகை எழிலுடன் விளங்குகின்றது. இதை, எண்கோண வடிவில் கோபுரம் ஒன்று அழகுபடுத்திக் கொண்டு நிற்கின்றது.

வழக்கமான சித்திரங்களும் தங்கப்பதிவுகளும் இதை அழகு படுத்திக்கொண்டிருந்தன. மும்தாஜ் மகால் வாழ்ந்த இடம் இது. பிற்காலத்தில் ஷாஜஹானை அவர் மகன் ஔரங்கசீப் சிறைப்படுத்தி வைத்திருந்த இடமும் இதுவே யாகும். கி. பி. 22-1-1666-ல் ஷாஜஹான் தனது அருமைக் காதலி மும்தாஜின் நினைவுச் சின்னமான தாஜ்மகாலைப் பார்த்த வண்ணம் இங்குதான் உயிர்விட்டான். இங்கிருந்து தாஜ்மகாலைப் பார்க்கும்போது அது வானத்துச் சந்திரன் கீழிறங்கி வந்து காட்சி கொடுப்பதைப் போன்று காணப்படு கின்றது. பத்தேபூர்சிக்கிரியில் இருப்பதைப் போலவே இங்கும் அழகிய பெண்களைப் பகடைகளாக நிற்கவைத்து விளையாடும் சதுரங்க அரங்கம் ஒன்றும் இருக்கின்றது.

அடுத்து மக்களுக்குப் பேட்டி அளிப்பதற்கென்று அமைந்த மிகப்பெரிய மண்டபம் ஒன்று இருக்கின்றது. இதிலுள்ள தூண்களிலும் வளைவுகளிலும் பன்னிறங்களில் பூங்கொடிகள் சித்திரிக்கப்பட்டுள்ளன. அதில் இரத்தினங் கள் பதிக்கப்பட்டிருந்தன. இப்போது அவை இல்லை. மேற்கூரையில் வேய்ந்திருந்த தங்கத் தகடும் இன்று இல்லை.

மண்டபத்தில் கருங்கல் அரியாசனம் ஒன்று இருக் கின்றது. இதில் அமர்ந்துதான் சக்கரவர்த்தி தமது காலைப் பிரார்த்தனையைச் செய்வதும் விலங்குகளின் சண்டையைப் பார்ப்பதும் வழக்கம். இன்னும் எத்தனையோ விதமான மாளிகைகள் இங்கு இருக்கின்றன. அவற்றில் பல சிதைந்த நிலையில் உள்ளன. அரசிகள் தொழுகை நடத்தப் பிரத்யேகமான மசூதி ஒன்றும் இருக் கின்றது. அரச குடும்பத்துப் பெண்கள் பொருள்கள் வாங்கி விற்று வியாபாரம் செய்யத் தனிமையான வியாபாரத் தலம் ஒன்றும் உளது. இந்த இடத்துக்குள் சக்கரவர்த்தி யைத் தவிர வேறு எந்த ஆளையும் அனுமதிப்பதில்லை. இந்த பஜார் திங்களுக்கு ஒரு முறை கூடும்.

இங்கு, அரச குடும்பத்தைச் சார்ந்த பெண்களும் உயர் அதிகாரிகளின் மனைவிகளும் பர்தா (முகமூடி) இன்றி தாராளமாக ஓடியாடிச் சிரித்து மகிழ்வர். இந்த கூட்டத்தில் பெண்களோடு பெண்ணாகத் தானும் பெண் வேடம் அணிந்து சக்கரவர்த்தி அக்பர் கலந்து கொள்வாராம். சக்ரவர்த்திப் பெரிதும் பெண் சபலம் உடையவர். அதனால் அதிகாரிகளின் மனைவிகள் இங்குக் கலந்து கொள்ளும்போது அவர்களுள் அதிக அழகுள்ளவர் இருப்பின் அவர்களை எந்த விதத்திலேனும் அடைய சக்ரவர்த்தி முயற்சி செய்வாராம். இதை அறிந்த ரஜபுத்ர தலைவர்கள் தங்கள் மனைவிகளை எக்காரணம் கொண்டும் இங்கு அனுப்புவதில்லை.

இங்குள்ள **முத்து மசூதி** அழகினுக்குப் பெயர்போனது. இதன் நடுமண்டபத்தில் பெரிய முத்து ஒன்று தொங்கு வதால் இது **முத்து மசூதி** என்று வழங்கப்பட்டது.

## முகல்கோட்டை

இனி **முகல்கோட்டை**யைப் பார்ப்போம். இதில் தான் எல்லா விதமான விசாரணைகளும் நடைபெறுவது வழக்கம். மற்ற அரண்மனைகளைப் போலவே இதுவும் பல வகையில் அழகுபடுத்தப்பட்டிருந்தது. சக்கரவர்த்தி தினமும் இங்கு நண்பகலில் அமர்ந்து தர்பார் நடத்துவார். அப்போது மண்டபத்தை அலங்கரித்து நறுமணப் பொருள் களைத் தூவி ஒழுங்குபடுத்துவார்கள்.

சக்கரவர்த்தி அங்கு உள்ள அரியாசனத்தில் அமர்வார். அவருக்கு வலமும் இடமும் அவருடைய குமாரர்கள் அமர்வார்கள். அப்போது சில பணியாட்கள் மயிலிறகு கொண்டு ஈக்களை ஓட்டுவார்கள். சிலர் மிகப் பெரிய விசிறிகளைக் கொண்டு இருபுறமும் நின்று விசிறுவார்கள். பலர் குறிப்பறிந்து ஏவல் செய்யப் பணி நோக்கிப் பணிவுடன் வணங்கி நிற்பர். அரியணைக்கு ஒரு புறத்தில்

கம்பி அடைப்புள்ள ஓர் இடத்தில் அரசாங்க உயர் அதிகாரிகள் கைகட்டி வாய் பொத்திக் குனிந்த தலையுடன் அடக்க ஒடுக்கமாக நிற்பார்கள். இதற்கப்பால் சிறிது தூரத்தில் கீழ்நிலை அதிகாரிகள் இவர்களைப் போலவே பணிவோடு நிற்பர். இம்மண்டபத்தை ஒட்டி உள்ள விசாலமான வெளியிடத்தில் பல்வேறு நிலைகளில் உள்ள மக்கள் பணக்காரன் ஏழை, படித்தவர் படியாதவர் என்ற வேறுபாடு இன்றி ஒன்றாகக் கலந்து குழுமியிருப்பர். ஏனென்றால் பேட்டியளிப்பதிலோ விசாரணை நடத்துவதிலோ ஏற்றத்தாழ்வுகள் காட்டப்படுவதில்லை.

பேட்டியும், விசாரணையும் சுமார் இரண்டு மணி நேரம் நடைபெறும். முடிவில் பட்டத்துக் குதிரைகளை, அவை நன்கு பராமரிக்கப்படுகின்றன என்பதைச் சக்கிரவர்த்திக்குக் காட்ட அவர் அமர்ந்துள்ள அரியணையின் முன் நடத்திச் செல்வர். அடுத்து யானைகள் வரும். இவை நன்கு குளிப்பாட்டப்பட்டு, அழகிய போர்வைகள் உடம்பை அணி செய்ய, மணிகள் கட்டிய கயிறுகள் முதுகின்மீது தொங்க, அம்மணிகள் ஒலிக்க அசைந்தாடி வரும். இந்தப் பெரிய யானைகளின் பக்கத்தில் அவற்றின் குட்டிகள் அலங்கரிக்கப்பட்டு தொடர்ந்து வரும். யானை அரியணையின் முன் வந்ததும் பாகன் குறிப்புப்படி தன் ஒரு காலை மடக்கிப் பணிந்து வணங்கித் தனது துதிக்கையை மேலே தூக்கிப் பிளிறும். பின் கம்பீரமாக எழுந்து அவ்விடத்தை விட்டுப் போகும். அதன் பின் சண்டை போடப் பயிற்சி பெற்ற கடம்பைமான், மரைகள், எருமைகள், சிறுத்தைகள், புலிகள், அலங்கரிக்கப்பட்ட வேட்டை நாய்கள் பலவகைப்பட்ட பறவை இனங்கள் ஒன்றன் பின் ஒன்றாக வரும். இவற்றைத் தொடர்ந்து காலாட்படை, குதிரைப்படை வீரர்கள் அணிவகுத்து வருவார்கள். இவ்வாறு வருகின்ற போர்வீரர்களை நன்கு அறிமுகம் செய்துகொண்டு அவர்களுடைய போர்த்திறம் வீரம் ஆற்றல் முதலியவற்றை மன்னர் தெரிந்து வைத்துக்

கொள்வார். பொதுமக்கள் கொண்டு வந்துள்ள விண்ணப்பங்களைப் பெற்று அவற்றைப் படிக்கச் செய்து இரு கட்சியாரையும் வரவழைத்து விசாரித்து அப்போதே நீதி வழங்கி துன்பப்பட்டவரின் துன்பத்தை நீக்கி அனுப்புவார்.

இது போன்று மநுநீதி தர்மப்படி வழக்குகள் முடிவடைந்ததால் வழக்குகள் தவங்கிடக்க வேண்டிய வேலையில்லை. இலஞ்சமும் தலைகாட்டாது. கையூட்டுக்காகவே வழக்குகள் கடப்பில் போடப்படுகின்றன. அரிசியல் காரணங்கள் தலையிடுவதும் உண்டு. நீதி வழங்கும் இடங்களே நீதி வழுவும் இடங்களாயின் நீதிதேவனுக்கு அங்கு இடமேது?

ஆக்ரா கோட்டையை விட்டு ஏழு நாற்பத்தைந்து மணிக்கு இரயிலடியை அடைந்தோம். 26-5-78 இரவு புறப்பட்ட வண்டி 27-5-78 பகலெல்லாம் குவாலியர், ஜான்ஸி, பினா இடார்சி வழியாக ஓடி அன்றிரவு மூன்று மணிக்கு நாசிக் ரோட் ஸ்டேஷனை அடைந்தது.

## நாசிக்

### திரியம்பகம்

28-5-78 காலை ஏழு மணிக்குச் சிற்றுண்டிக்குப் பின் டாக்ஸியில் 18 மைல் தொலைவிலுள்ள திரியம்பகம் போனோம். இது கோதாவரி நதி உற்பத்தியாகும் இடம் ஆகும். இங்குச் சோதிர்லிங்கங்கள் பன்னிரண்டில் ஒன்றாயுள்ள திரியம்பகேஸ்வரர் எழுந்தருளியுள்ளார். இந்த இடத்தைப் பற்றிய புராண வரலாறு வருமாறு:

ஒரு சமயம் உலகில் மழை வளம் குன்றியது. எல்லா உயிர்களும் துன்புற்றன. கௌதம முனிவர் தமது மனைவி அகலிகையுடன் பிரமகிரியை அடைந்து கடுந்தவம் செய்தார். வருணன் சொற்படி ஒரு குளம் வெட்டினார். அதில் நீர் எப்போதும் வற்றாதிருக்கவும் அங்குச் செய்யும்

கர்மங்கள் யாவும் பெருமையுடையதாயிருக்கவும் வரம் பெற்றார். இவர் இங்குப் பூசித்த சிவலிங்கம் கௌதமேச்சுரம் என்பதாகும். மற்றெல்லா இடங்களும் செழிப்பில்லாமல் இருக்கக் கௌதமர் வாழ்ந்த இந்த இடம் மட்டும் செழிப்போடு இருந்தது. இதை அறிந்த முனிவர்கள் பலர் தமது மனைவியருடன் இந்த இடத்தை அடைந்து தங்கினர். சில நாள்கள் கழிந்தன. பெண்களால் குழப்பம் விளைந்தது. ரிஷி பத்தினிகளாயிருந்தும் வந்த முனிவர்களின் பத்தினிகளிடம் பொறாமைத் தீ அவர்களை விட்டு நீங்கவில்லை. அகலிகை மீது இவர்கள் கோள் சொல்ல ஆரம்பித்தனர். அதனால் முனிவர்களுக்கும் கௌதமருக்கும் இடையே பகை மூண்டது. முனி பத்தினிகள் பகைத் தீ கொழுந்து விட்டு எரிய ஆவன செய்து வந்தார்கள்.

வந்த முனிவர்கள் தமக்கு இடமளித்துக் காத்த கௌதமரையும் அகலிகையையும் அந்த இடத்தை விட்டுக் கிளப்பிவிட திட்டமிட்டனர். எல்லா முனிவர்களும் ஒன்று சேர்ந்து விநாயகரை நோக்கித் தவஞ் செய்தனர். விநாயகப் பெருமானும் காட்சியளித்து முனிவர்களின் நன்றியற்ற செயலைக் கண்டித்து ''முனிவர்களே! பெண் புத்தி கேட்டு தீய நினைத்தீர்கள். கௌதமரையும் அகலிகையையும் துரத்த நினைத்தது மகா பாதகமான கீழ்மைச் செயல் ஆகும். இவ்வாறு செய்ய வேண்டாம்'' என்று இடித்துக் கூறினார். ஆனால் முனிவர்களின் காதில் இந்த நல்லுரை ஏறவில்லை. தமது தகாத எண்ணத்தையே வலியுறுத்தி வரம் வேண்டினர். இதைக் கண்ட விநாயகர் உங்கள் தீச்செயலுக்கேற்ற பயனை அனுபவிப்பீர்கள்'' என்று கூறி, ஒரு பசு வடிவம் கொண்டு கௌதமர் முன் அவர் தோட்டத்துப் பயிரை மேய்ந்தார். இதைக் கண்ட கௌதமர் பசுவைத் துறத்த கோல் கொண்டு அடிக்கப் போனார். அடிபடாதபோதிலும் அம் மாயப் பசு அதே இடத்தில் வீழ்ந்து உயிர்விட்டது. உடனே முனிவர்

களெல்லாம் ஒன்றுகூடி பசுவைக் கொன்ற பாவத்தைச் செய்ததாக முனிவர்மீது குற்றம் சுமத்தி, அதற்குப் பரிகாரமாக 'பிரம்மகிரியை 101 முறை வலம் வந்து, கோடி பார்த்திவ லிங்க அர்ச்சனை செய்து, கங்கையை வரவழைத்து அதில் மூழ்க வேண்டும்' என்று கூறினர். இக் கடினமான காரியத்தை அவரால் செய்ய முடியாதென்றும் அதனால் முனிவர் இடத்தை விட்டுப் போய்விடுவார் என்றும் முனிவர்கள் கருதினார்கள். ஆனால் கௌதமரோ அவர்கள் சொன்ன பரிகாரங்களைச் செய்வதாக ஏற்றுக் கொண்டு அவ்வாறே செய்து முடித்தார். அதன் பயனாகச் சிவபெருமான் கௌதமர் முன் தோன்றி முனிவர்களின் தீய எண்ணத்தை வெளிப்படுத்தி 'நீ ஒரு பாவமும் செய்ய வில்லை' என்று அருளித் தமது சடையிலிருந்து கங்கை நீரைச் சிறிது அளித்தார். அந்நீர் நிலத்தில் படிந்து பிரமகிரியின் அத்தி மரத்தின் வேரிலிருந்து நதிவடிவாக வெளிப்பட்டது. அந்த கங்கை நீரில் முனிவர் குளித்தார். நீர் வெளிப்பட்ட இடம் 'கங்கா துவாரம்' எனப்பட்டது. கௌதமர் வேண்டிப் பெற்ற கங்கையே 'கோதாவரி' என்றும் 'கௌதமீ' என்றும் பெயர் பெற்றன. பெருந் தன்மையே வடிவான முனிவர் தமக்குத் தீங்கு நினைத்த முனிவர்களை மன்னித்து அவர்களையும் காக்குமாறு கங்காதேவியைப் பிரார்த்தித்தார். கோதாவரிக் கரையில் கௌதமருக்கு அருள் செய்த மூர்த்தியே திரியம்பகேஸ்வரர் ஆவார்.

திருமாலும் நான்முகனும் தாம்தாமே பெரியவர் என்று தருக்கி வாதிட, இவர்கள் செருக்கை மாற்ற இவர் களிடையே தோன்றிய ஜோதிப் பிழம்பே இம்மலை என்றும் புராணம் கூறுகின்றது. இம்மலையில் 'கௌதமர் குகை' 'கோரக்நாதர் குகை' என்னும் இரண்டு குகைகள் உள்ளன. இம்மலையில்தான் கோதாவரி நதி உற்பத்தியாகின்றது.

காலை எட்டு மணி சுமாருக்குத் திரியம்பகம் போய்ச் சேர்ந்தோம். இங்கு நாற்புறமும் படிகளமைந்த குளம்

ஒன்று இருக்கின்றது. மலையில் உற்பத்தியாகும் நதி இங்கு படிந்து பின் போகின்றது. இக்குளத்தில் யாரும் இறங்கிக் குளிக்கக் கூடாது. குளத்திலிருந்து வள்ளத்தில் நீரை மொண்டு வந்து கரைமீது குளிக்கவேண்டும். இக்குளம் மிகத் தூய்மையாக வைக்கப்பட்டிருக்கின்றது.

நதிகளை மாதா என்று சொல்லி வழிபடுவதில் குறைவே இல்லை. ஆனால் நடைமுறையில் நதிக்கரைகளில் மக்கள் செய்யும் அசுத்தங்களுக்கு அளவே இல்லை. நீர் நிலைகளையும் நதிகளையும் நரகமாகச் செய்து விடுகின்றனர். கருத்துக்கும் செயலுக்கும் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்யாசம் இருக்கின்றது.

குளத்தைச் சுற்றிக் கரைமீது மண்டபமும் அதில் சின்னஞ்சிறு கூண்டுகளில் பலவித உருவங்களை வைத்துத் தட்சணை வசூலிக்கின்றனர்.

## திரியம்பகேஸ்வரர்

கரைமீதுள்ள திரியம்பகேஸ்வரர் திருக்கோயில் கருங்கற் கட்டடம். முன்மண்டபத்தின் முகப்பில் சிவ லிங்கங்கள் பல உள்ளன. திரியம்பகேஸ்வரர் உள்ளே ஆழமான இடத்தில் எழுந்தருளியுள்ளார். லிங்கபாகமின்றி ஆவுடையாரோடு கூடிய பீடத்தோடு பெருமான் இருக்கின்றார். லிங்க பாகம் மட்டமாய் பள்ளமாய் இருக்கின்றது. அதில் நீர் சுரந்து கொண்டே இருக்கின்றது. அர்ச்சகர் நீரைத் தள்ளிவிட்டு பள்ளத்தில் உள்ள மொட்டுகள் போன்ற மூன்று குறிகளைக் காட்டி அவை **பிரம்மா, விஷ்ணு, உருத்திரன்** என்று கூறினார். இவ்வாறு இம்மூர்த்தி மும்மூர்த்தி வடிவாய் இருப்பதால் திரியம்ப கேஸ்வரர் என்று அழைக்கப்பட்டார். இம்மூர்த்தி 12 ஜோதிர்லிங்கங்களுள் ஒன்று. மிகவும் மகிமை வாய்ந்தது. பக்தி சிரத்தையுடன் வழிபட்டுக் கொண்டு அடுத்துள்ள கோதாவரியம்மனையும் தரிசனம் செய்து கொண்டு அங்கிருந்து பஞ்சவடிக்குப் போனோம்.

இங்குள்ள இராமகுண்டம் என்னும் தீர்த்தம் அசுத்தமாயிருந்ததால் அதில் நாங்கள் குளிக்கவில்லை. தீர்த்தம் என்பதால் சிலர் அந்நீரைத் தலையில் தெளித்துக் கொண்டார்கள். அக்குண்டத்துக்கு எதிரில் இருந்த ஸ்ரீகபாலீஸ்வரர் கோயிலுக்குப் போய் வழிபட்டுக்கொண்டு ஸ்ரீ இராமர் கோயிலுக்குப் போனோம். இங்கு இராமர் சீதை இலட்சுமணர் கோயில் கொண்டுள்ளனர். அழகான மூர்த்திகள். வழிபட்டு விட்டு அங்கு நடந்த பஜனையில் கலந்து கொண்டு இனிமை மிக்க இசைப்பாடல்களைக் கேட்டு விட்டுச் சீதா குகைக்குப் போனோம் குகை மிகவும் குறுகலானது. கூனிக் குறுகிப் போகவேண்டும். தடித்த உடம்பு உடையவர்கள் குகைக்குள் போய்வர முடியாது. அஞ்சி அஞ்சித் தான் உள்ளே போனோம். அங்குச் சீதையின் படிவம் இருக்கின்றது. அசோகவனத்தில் அடர்ந்த மரங்களுக்கிடையில் சிறைபட்டுக் கிடந்த சீதை இப்போது இக் குகையில் அடைபட்டுக் கிடந்தாள். ஒருவாறு தரிசித்துக் கொண்டு மிகுந்த சிரமத்துடன் வெளிவந்தோம். கர்ப்ப வாசத்திலிருந்து சிசு வருவதைப் போன்ற அநுபவம் இது. இக்குகை காஞ்சி கைலாயநாதர் கோயிலுள்ள குறுகிய நுழைவாயிலை நினைவு படுத்தியது.

பண்டரிபுரத்திலும் சீதைக்குக் குகை வாசம்தான். இனி அயோத்தியில் பட்டத்தரசியாக வாழ்ந்த சீதை சமையல் செய்த இடமும் பாதாள குகையிலேயே. சிறையிருந்து ஏற்றம் பெற்ற சீதையை 'சிறையிருந்தாள் ஏற்றம்' என்று போற்றுவதுண்டு. அதனால் போலும் சீதா பிராட்டியை கோயிலில் வைத்து வழிபடுவதோடு குறுகிய குகைகளிலும் வைத்து வழிபடுகின்றனர்!

இதற்கு அடுத்துள்ள ஓர் அறையில் சீதையை இராவணன் சிறையெடுத்துச் செல்லும் காட்சியைப் பொம்மைகள் வைத்துக் காட்டியுள்ளனர். இந்த இடத்தில்

மிகப்பெரிய மரங்கள் ஓங்கி வளர்ந்து நிழலளித்துக் கொண்டுள்ளன. அதனால் இந்த இடம் பஞ்சவடி என்ற பெயரைப் பெற்றது. இங்கிருந்து தபோவனம் போனோம்.

### தபோவனம்

பஞ்சவடியிலிருந்து மூன்று கல் தொலைவில் இந்த இடம் இருக்கின்றது. இங்குக் கோதாவரி கபில நதிகள் கலக்கின்றன. சிறிதாக நதிகள் கலந்து குண்டுக் கற்களின் இடையே சலசலவென இனிமையாக ஓடுகின்றன. இந்தப் புண்ணிய திர்த்தங்களுக்கிடையே உள்ள குண்டுக்கற்களின் இடையே மனிதன் அசுத்தம் செய்வதையும் மறக்கவில்லை. விழிப்பாக ஓர் இடத்தைத் தேர்ந்தெடுத்துக் குளித்து உடம்பைத் தூய்மை படுத்திக் கொண்டோம். இந்த இடம் மரங்களும் செடி கொடிகளும் சூழ்ந்து ரம்மியமாக இருந்தது. இங்குள்ள ஓர் அறையில் சூர்ப்பனகையின் மூக்கை இலட்சுமணன் அறுப்பது போன்று பொம்மை களால் சித்திரித்துச் சூர்ப்பனகையின் மானபங்கக் காட்சி யைக் காட்டியிருந்தனர். இதையும் பார்த்துக்கொண்டு திரும்பினோம். இங்கு அமைந்துள்ள காட்சிகள் யாவும் இராமாயண நிகழ்ச்சிகளின் நினைவுச் சின்னங்களாக உள்ளன. பன்னகசாலை என்று ஒன்றையும் காட்டி னார்கள். இவற்றுக்கெல்லாம், பார்க்கக் கட்டணங்கள் உண்டு. பின் முத்திதாம் அடைந்தோம்.

## முத்திதாம்

இது மிகப்பெரிய கோயில். முழுவதும் பளிங்காலானது. பிர்லா கட்டியது. இதற்கு ஆன செலவு ரூ. 45 லட்சம் என்று சொல்லப்பட்டது. தூண்களும் மேல் விதானமும் தரையும் பளிங்கு மயம். மிகத் தூய்மையாக வைக்கப்பட்டுள்ளது. இக்கோயிலின் மூல மூர்த்திகள் இராமர் இலட்சுமணர் சீதை ஆகும். மூர்த்திகளும் பளிங்கே. கண்கவர் வனப்புடன்

அலங்கரிக்கப்பட்டுள்ளன. வணங்கிவிட்டு கோயிலை வலம் வந்தோம். சுற்றிலும் இந்திய நாட்டிலுள்ள முத்தித் தலங்களின் மூர்த்திகள் எழுந்தருளியுள்ளன.

ஏழுமலைகளைக் கடந்து நீண்ட கியூவில் நாளெல்லாம் அமர்ந்திருந்து மெதுவாக நகர்ந்துபோய் எப்போது எப்போது என்று காத்திருந்து கணநேரம் தரிசிக்கும் ஏழுமலையான வெங்கடாஜலபதி, ஆர அமர நின்று சேவிக்கும்படியாக இங்குத் தனிக் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ளார்.

11 ஆயிரம் அடி உயரத்தில் இமயப் பனிமலைக்கிடையில் அலகநந்தா நதிக்கரையில் வலப்புறம் குபேரனையும் விநாயகப் பெருமானையும், இடப்புறம் நர நாராயணரையும் எழுந்தருளப் பெற்று சாளக்கிராம சுயம்பு மூர்த்தியாய் எழுந்தருளியிருக்கும் பரம கருணாமூர்த்தி பத்ரி நாராயணரை இங்கு அதே பாங்கில் தரிசித்து வழிபடும் படியாக எழுந்தருளியுள்ளார்.

பன்னிரண்டு ஜோதிர் லிங்கங்களில் ஒன்றாய், உயிர் விடும் உயிர்களைக் கருணையோடு அம்மை மடியில் கிடத்தி முந்தானையால் விசிறி அயர்வைப் போக்க, காதில் தாரக மந்திரத்தை ஓதி ஆட்கொள்ளும் அவிமுக்தம் என்னும் காசியில் எழுந்தருளியுள்ள விசுவேஸ்வரரை இங்குக் கண் குளிரக் கண்டு பணிந்து வணங்கி ஒய்வு பெறலாம்.

கயிலை மலையில் 12000 அடி உயரத்தில் பனி பெய்யும் பனிமலைகளின் இடையில் மந்தாகினி என்னும் நதி தீரத்தில் பனிக்குவியலின் சூழலில் திருக்கோயில் கொண்டு சுயம்பு மூர்த்தியாய் எழுந்தருளியுள்ள 12 ஜோதிர்லிங்கங்களுள் ஒன்றான கேதார நாதரைக் குதிரைச் சவாரியும், நடக்கும் துன்பமும், பனிக்கொடுமையும் இன்றி எளிதாக இங்குத் தனிக் கோயிலில் தரிசித்து வணங்கலாம்.

கொந்தளிக்கும் கடற்கரையினருகே அறைகுறை உருவங்களில், பன்னிரண்டு ஆண்டுகளுக் கொருமுறை

புதிய வடிவங்களைப் பெற்று மிகப்பெரிய கோயிலில் சகோதரர் பலபத்திரர் தங்கை சுபத்திரையுடன் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள **ஜகன்னாதரைப்** பணப் பேய்களாய் கழுகுகளைப் போல் திரிந்து உபத்திரவம் செய்யும் பூசாரிகளின் இடையீடின்றி இங்குத் தரிசித்து மகிழலாம்.

சந்திரபாகா நதிக்கரையில், முடிமீது சிவலிங்கத்தைத் தரித்து நாமதேவருக்கும், காணுபத்ரா என்னும் பக்தைக்கும், பெற்றோரைப் போற்றிய புண்டரீகனுக்கும், பூஜித்து வழிபட்ட பக்தர்களுக்கும் அருள்பாலித்த **பாண்டுரங்கனைப்** பரவிப் போற்றி வணங்கலாம்.

மற்றும் பல சிறப்புமிக்க முத்தித் தலங்களின் மூர்த்திகள் இங்கு எழுந்தருளியுள்ளனர். இம்மூர்த்திகளையெல்லாம் வழிபட்ட வண்ணம் நுழைவாயிலின் இடப்புறம் வந்தபோது அங்கு இமயக் காட்சியைக் கண்டோம். சிவபெருமான் கயிலையின் உச்சியில் கங்காதரனாக வீற்றிருந்தான். முடிமீதிருந்த கங்காதேவியின் திருவாயிலிருந்து கங்கையாறு பெருக்கெடுத்து ஓடிவந்தது. ஒருபுறம் கங்கையை வரவழைக்கத் தவமியற்றிய பகீரதன் தவத்தில் அமர்ந்திருந்தான். ஓடிவந்த கங்கை மலையினடியில் இருந்த ஒரு நீர்த்தொட்டியில் விழுந்தது. இதனருகில் பன்னிரண்டு ஜோதிர் லிங்கங்கள் எழுந்தருளி இருந்தன.

இக்கோயிலை வலம் வந்து வழிபடும்போது இந்திய நாட்டிலுள்ள எல்லா முக்கியமான தலங்களின் மூர்த்திகளையும் தரிசித்து விடுகிறோம். முக்திதாம் என்னும் பெயருக்கு ஏற்ப எல்லா முக்தித் தலங்களையும் தன்னுள் கொண்டு ளிளங்கும் அற்புதமான திவ்ய திருக்கோயிலாக இது விளங்குகின்றது. வழிபட்டுக் கொண்டு இரயிலடியை அடைந்தோம். அன்றிரவே பம்பாய் நோக்கி வண்டி புறப்பட்டுப் போயிற்று.

## பம்பாய்

முதல்நாள் 29-5-78 காலையில் சிற்றுண்டிக்குப் பின் பலர் எலிபெண்டா குகைகளைப் பார்க்கவும் சிலர் துணி வாங்க ஜவுளிக் கடைகளுக்கும் போனார்கள்.

இந்தியா கேட்டுக்கு முன்னால் தாஜ்மகால் ஓட்டல் இருக்கின்றது. இது பெயர் பெற்ற மிகப்பெரிய அழகான ஓட்டலாகும். இதில் மனிதன் விரும்பும் எல்லா வசதி களும் உள்ளன. ஏழைகள் எட்ட இருந்து ரசிக்கலாம்; ஏங்கவும் செய்யலாம். பணத்தின் போக்குக்கு வழி தெரியாமல் விழிக்கும் செல்வர்கள் தங்கள் செல்வத்தைத் தண்ணீர் போல் இறைத்துச் செலவழிக்கும் வாய்க்கால் போல் இது கம்பீரமாய் நிற்கின்றது.

இந்த ஓட்டலின் எதிரிலுள்ள கடற்கரையிலிருந்துதான் விசைப் படகுகளில் எலிபெண்டா குகைகளுக்குப் போக வேண்டும். 7½ மைல் தூரத்தில் கடலுக்கிடையே ஒரு தீவில் இக்குகைகள் உள்ளன. விசைப் படகுகளில் ஏறிப் போய் நாங்கள் தீவில் இறங்கினோம். குகைகளை அடையப் பல படிகள் ஏறி நீண்டதூரம் போனோம்.

### எலிபெண்டா குகைகள்

ஒரு சமயம் ஒரு கற் குவியல் யானை வடிவில் இருந்தது. அதை முன்னிட்டு இக்குகைகளுக்கு ‘எலி பெண்டா குகைகள்’ என்ற பெயர் வந்தது. 1815 ஆம் ஆண்டில் இந்த யானையின் தலை போய்விட்டது. அதனால் தலைபோன இந்த யானையை விக்டோரிய கார்டனுக்கு எடுத்துச் சென்று தலை வைத்து முழு யானை யாகச் செய்து வைத்து விட்டனர்.

அற்புதமான சிற்பச் செல்வங்கள் நிரம்பிய குகைகளா லானவை, எலிபெண்டா குகைகளாகும். ஒரு பெரிய மலையைக் குடைந்து அதில் மிகப்பெரிய தூண்களோடு

கூடிய மண்டபங்களை அமைத்து, அவற்றில் சின்ன அறை களைக் குடைந்து, அந்த அறைகளில் தெய்வப் படிவங் களை அமைத்துள்ளனர். சுற்றுச் சுவர்களில் அற்புதமான அலங்காரங்களோடு கூடிய திருவுருவங்களையும் புராண வரலாறுகளையும் செதுக்கி அழகுபடுத்தி உள்ளார்கள். இந்த குகைச் சிற்பங்கள் எட்டாம் நூற்றாண்டைச் சார்ந் தவை. இங்குள்ள குகைகளிலேயே பதினாறு அடி உயரமும் இருபத்தாறு தூண்களும் கொண்ட குகைதான் மிகவும் முக்கியமானது. இக்குகையில் ஓர் அறையில் மிகப்பெரிய சிவலிங்கமூர்த்தி இருக்கின்றது. இந்த அறைக்கு வாயிற் காவலர்களோடு கூடிய நான்கு வாயில்கள் உள்ளன. துவாரபாலகர்களின் முடி அலங்காரமும் அணிகலன்களும் ஒப்புயர்வற்ற அற்புதமான வேலைப்பாடுகளோடு கூடி உள்ளன.

அடுத்து இருப்பது தத்தாத்ரேய வடிவம். இது பிரம்மா விஷ்ணு உருத்திரன் என்னும் மும்மூர்த்திகளின் மூன்று முகங்களும் கொண்ட அழகான மூர்த்தி. இருபது அடி உயரமான இந்த தெய்வத் திருவுருவம் அற்புதமாக உள்ளது.

இன்னொரு திருவுருவம் இடப்பாகம் பெண்ணும் வலப் பாகம் ஆணுமாக உள்ள அர்த்தனாரீஸ்வர வடிவமாகும். இடப்பாகம் உள்ள அம்மையின் காதில் தோடு, கைகளில் வளையல்கள், வளைக்கரத்தில் முகம் பார்க்கும் கண்ணாடி. கருணை முகம். கண்டவர் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் கலையழகு. ஒப்புயர்வற்ற இவ்வம்மையப்பர் வடிவத்தைக் காணக் கண்களிரண்டு போதா. காணக் கண்கள் நூறு வேண்டும்.

இறைவன் அம்மையப்பராக இருக்கின்றான் என்பதை அர்த்தநாரீஸ்வர வடிவம் காட்டுகின்றது. இதைச்சுற்றிக் கந்தர்வப் பெண்கள் பலர் சூழ்ந்துள்ளனர். சில உபசரிக்கும் பெண்கள் கவரி ஏந்தி இருபுறமும் நிற்கின்றனர். அம்மை

யப்பரை அலங்கரிக்கும் ஆடைகளும் அணிகலன்களும் அற்புதமான அழகோடு திகழ்கின்றன. அம்மையப்பர் வடிவம் போகவடிவமாகும். அதனால் இந்தத் திருவுருவத் தைப் பார்க்கும்போது நம் உள்ளம் களி துளும்புகின்றது. சாந்தம் தவழும் முகத்தோடு உள்ள இந்த அர்த்தனா ரீஸ்வரர் துவாரபாலகர்களோடு கூடிய தனி அறையில் சாந்நித்யம் பெற்றுத் திகழ்கின்றது. வாயிற் காவலர் களின் கம்பீரமான வடிவங்கள் கலையழகு மிக்க கொள்ளை அழகோடு அறைமுன் நிற்கின்றன.

தாமரை மலர்மீது அமர்ந்துள்ள நான்முகனை ஆறு அன்னங்கள் அந்தரத்தில் சுமந்து கொண்டு செல்கின்றன. அற்புதமான சிற்ப நுட்பம் உடையது.

இதன் இடப்புறத்தில் கருடவாகனத்தின்மீது மகா விஷ்ணு எழுந்தருளியுள்ளார்.

மற்றோர் அற்புதமான காட்சி பதினாறு அடி உயர முள்ள சிவபெருமானும் பன்னிரண்டு அடி உயரமுள்ள பார்வதியும் நின்றிருக்கும் காட்சியாகும். சிவபெருமான் அம்மையை அன்போடு தனது இடது கரத்தால் அரவணைத் துக் கொண்டு நிற்கின்றார். பெருமானின் அணைப்பில் மகிழ்ச்சியுற்ற அம்மை புன்முறுவல் பூக்கின்றார். இங்குக் கல்லும் கதை பேசுகின்றது. சிவபெருமான் சடை மீது மூன்று தலைகளுள்ள பெண் ஒருத்தி வீற்றிருக்கின் றாள். இம்மூன்று தலைகள் கங்கை யமுனை சரஸ்வதி என்னும் மூன்று நதிகளைக் குறிக்கும். பெருமானின் முடி யிலிருந்து மூன்று நதிகளும் தோன்றுவதாக ஒரு வழக்கும் உண்டு. இம்மூன்றும் கயிலையின் உச்சியிலிருந்து தோன்றும் நதிகளாகும். அம்மையையும் அப்பனையும் தேவர்கள் புடைசூழ இருந்து வணங்குகின்றார்கள்.

மேலும் பல அற்புதக் காட்சிகள் இங்கு உள்ளன. இவற்றில் பார்வதி திருமணம் ஒரு கண்கொள்ளாக் காட்சி யாகும். திருமணத்தில் தாரை வார்க்கும் நீரைச் சந்திரன்

ஏந்தி நிற்கிறான். மூன்று தலைகளோடு பிரமா திருமணச் சடங்கை நடத்தி வைக்கின்றார். மணநேரத்தில் மண மகள் நாணத்தோடு தரையை நோக்கியவண்ணம் இருப்பது பெண்மை இயல்பல்லவா? பெண் இனத்தின் சாயலாயுள்ள அம்மைக்கும் இது பொருந்தும். அதைச் சிற்பி இங்கு அம்மையினிடத்து அற்புதமாக வடித்துத் தந்துள்ளான். மணமகளுக்குரிய நாணம் கீழ் நோக்கிய பார்வை சாய்ந்த தலை அம்மையிடம் அமைந்து மண மகளின் இலக்கணத்தைக் காட்டிக் கொண்டிருக்கின்றது. மணமகனிடம் இருக்க வேண்டிய பெருமிதம், அப்பனிடம் காட்டியுள்ள கம்பீரமாக அமைந்த நோக்கு காட்டிக் கொண்டுளது.

பயங்கரமான காட்சியொன்று அறையின் மறுமுனை யில் இடங்கொண்டிருக்கின்றது. இது மண்டை ஓடுகளை மாலையாக அணிந்திருக்கின்றது. இதற்குத் தலைகள் எட்டு. தனது வலிமைமிக்க கரங்களால் ஒரு மனிதனை முறிக்கின்றது. இது பைரவர் கோலம். இதன் முகத்தில் சினம் பொங்குகின்றது.

கீழ்புறத்துக் குகையின் வாயிற்படி தாண்டி உள்ளே நுழைந்ததும் ஓர் அற்புதமான காட்சி நம்மை வரவேற் கின்றது. இராவணன் சிறந்த சிவபக்தன். அப்படி இருந்தும் இவனைப்பற்றியிருந்த செருக்கு இவனை விடவில்லை. அதனால் அம்மை அப்பர் வீற்றிருந்த கயிலை மலையை ஆணவங்கொண்டு தனது குன்றுகள் போன்ற 20 புயங்களின் வலிமை கொண்டு 20 கரங்களால் பெயர்த்தெடுக்கிறான். அசையாமலை அப்போது அசைகின்றது. இராவணனின் செயலை உணர்ந்த அம்மை மிகவும் அஞ்சி அப்பனை அச்சத்தோடு நோக்குகின்றாள். அம்மையின் அச்சத்தைக் கண்ட சிவபெருமான் புன்முறுவல் பூத்தவண்ணம் தனது மலர்போன்ற பாதத்தின் கட்டைவிரலை மலைமீது வைத்துச் சிறிது அழுத்தி ஊன்றுகிறார். மலை அழுந்து

கின்றது. மலையின் கீழிருந்த இராவணன் தனது பலத்தை யெல்லாம் இழந்து பிள்ளைப்பூச்சி போல் சிக்குண்டு தவிக்கின்றான். இந்தக் காட்சியைச் சிற்பி அற்புதமாக வடித்துக் காட்டியுள்ளான். முகபாவம் கண்ணோக்கு இவற்றைக் கொண்டு சிற்பங்களில் உணர்ச்சிகளைப் புலப்படுத்தி யிருக்கும் அழகே அழகு.

ஆடும் பெருமானின் அழகிய சிற்பத்தைச் சிற்பி அற்புதமாக வடித்துத் தந்துள்ளான். சிரித்த முகம், கவிழ்ந்த பார்வை, வளைந்த புருவம், அழகிய முடி. அதில் பாம்பணி, ஆட்டத்தில் நளினம் இவ்வளவையும் எவ்வளவு அழகாக அமைத்துக் காட்டியுள்ளான்.

**" குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயிற்**
**குமிண் சிரிப்பும்**
**பனித்த சடையும் பவளம்போல் மேனியிற் "**

என்பது அப்பர் பெருமானின் அருள்வாக்கு.

இவ்வாறு அழகொழுக அற்புதமாகச் செதுக்கியுள்ள தெய்வச் சிற்பங்களை அடித்து நொறுக்கிக் கை கால் மூக்கு முதலியவற்றை அங்க ஈனப்படுத்தி மூளி செய்த கொடுமை யாளர்களை என்னென்பது? இங்குள்ள எந்த உருவமும் சிதைவின்றி முழுவுருவில் இல்லை. எவ்வளவோ பாடுபட்டுப் பலர் சேர்ந்து சிருஷ்டித்த கலைக்கோயிலைக் கல் நெஞ்சர்கள் சிலர் இமைக்கும் நேரத்தில் உருக்குலைத்த வன்செயலை நினைக்குந் தோறும் மனம் சிதைந்து உருகும். இக்கொடுமையாளர்களும் மனிதர்கள்தானா?

இவற்றைப் பார்த்துக் கொண்டு திரும்பி இரயிலடி சேர்ந்தோம்.

பம்பாயில் 30-5-78 இரண்டாம் நாள் காலையில் சிற்றுண்டிக்குப் பின் **மும்பாதேவி கோயிலுக்குப்** போனோம். இக்கோயில் நெருக்கமான வியாபாரத் தலத்துக்கு மத்தியில், பெரிதும் போற்றப்படும் சிறப்பு மிக்க கோயிலாக இருக்கின்றது. நாங்கள் போனபோது தேவியின் சந்நிதி

திறக்கப்படாமல் இருந்தது. கோயிலின் முன் அம்மனை தரிசிக்கப் பெருங்கூட்டம் கூடியிருந்தது. எங்கள் கூட்டமும் பெருங்கூட்டம். சிறிது நேரத்தில் கண்டாமணி 'டாண் டாண்' என முழங்கியது. கோயிற் கதவுகள் படாரெனத் திறந்தன. முண்டியடித்துக் கொண்டு இடிபாடுகளுக் கிடையே அம்மன் சந்நிதி முன் போய்த் தேவியை வணங்கு கிறோம். கோயிலை வலம் வந்து மற்ற சந்நிதிகளையும் வணங்கிவிட்டு அங்கிருந்து அரங்கநாதர் கோயிலுக்குப் போனோம்.

## அரங்கநாதர் கோயில்

இக்கோயில் கோபுரம், தென்னாட்டுக் கோயில் கோபுரம் போன்று இருக்கின்றது. மகிழ்ச்சியோடு வணங்கிய வண்ணம் கோயிலின் உள்ளே போனோம். கோயில் முழுவதும் பளிங்காலானது. மிகப்பெரிய கோயில். அரங்கநாதப் பெருமான் நின்ற கோலத்தில் காட்சியளித் தார். அங்குள்ள அர்ச்சகர்கள் தமிழ்நாட்டைச் சார்ந்த வர்கள். நாங்கள் தமிழ்நாட்டைச் சார்ந்தவர்கள் என்பதை எங்கள் உடைகளைக் கொண்டு அறிந்து அன்போடு தமிழில் இனிமையாகப் பேசி வரவேற்றனர். வழிபாடு நடக்கும் போது ஆண்களையும் பெண் களையும் தனித்தனியாக வேறு வேறு வாயில்கள் வழியே வரிசையாக உள்ளே விட்டனர். பெருமானை அமைதியாகத் தரிசனம் செய்துகொண்டு பிராகாரத்தி லிருந்த தாயார் ஆஞ்சநேயர் சந்நிதிகளையும் தரிசித்து வணங்கிவிட்டு எங்களை வரிசையாக நிற்குமாறு சொன்ன படி பிராகாரத்தில் நின்றோம். திரண்டிருந்த அவ்வூர் மக்களும் அமைதியாக நின்றனர். யாவருக்கும் அர்ச்சகர் கள் தீர்த்தத்தையும் பிரசாதத்தையும் முறையாக வழங் கினார்கள். மக்கள் அமைதியாகப் பெற்றுக் கொண்டு சந்தடியின்றி நீங்கினர். நாங்களும் அவ்வாறே திரும்பி னோம். வழிபாடும் பிரசாதம் வழங்குவதும் எவ்வளவு

அமைதியாக நெரிசலின்றி நடைபெற்றது. நம் கோயில் களிலும் இவ்வாறு நடைப்பெற்றால் எவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கும். கோயில் மிகவும் தூய்மையாக வைக்கப் பட்டுள்ளது. பின் சாந்தா குரூஸ் விமானநிலையத்துக்குப் போனோம்.

## சாந்தாகுரூஸ் விமான நிலையம்

மாடிமீது இருந்து விமான நிலையத்தைப் பார்க்கக் கட்டணம் ரூ. 2-00. செலுத்தி உள்ளே போனோம். ஒரு ஜெட் விமானம் மெதுவாக இறங்கிக் கொண்டிருந்தது. மறுபக்கம் சில விமானங்கள் மேலே போகவும் ஒன்றிரண்டு கீழே இறங்கு வதுமாக இருந்தன. அடிக்கடி விமானங் களைக் கண்டறியாத நாங்கள் வியப்போடும் அதிசயத் தோடும் பார்த்து ரசித்தோம். பின் விமானப் பயணி களைச் சோதனை போடும் மிகப்பெரிய கூடத்தைப் பார்த்துக்கொண்டு அங்கிருந்து நீங்கி மகாலட்சுமி கோயிலுக்குப் போனோம்.

## மகாலட்சுமி கோயில்

பம்பாயில் மிகவும் புகழ் வாய்ந்த கோயில் மகாலட்சுமி கோயிலாகும். மகாலட்சுமி செல்வத்துக்கு அதிபதி. செல்வம் கொழிக்கும் பம்பாய் மக்கள் மகாலட்சுமியை விரும்பி வழிபடுவதில் வியப்பொன்றும் இல்லை. பொது வாகவே பிரபலமான வடநாட்டுச் சாமியார்கள் கூட கோடீஸ்வரர்கள். ஆகாய விமானங்களை வைத்திருக்கும் யோகிகளும் உண்டு. பக்தியும் அதிகம். அதே நேரத்தில் பணப்பற்றும் மிகுதி. செல்வத்தையே இலட்சியமாகக் கொண்டு வாழ்கின்றவர்கள் பெரும்பான்மையினர். ஒரு சமயம் ஒரு பெருஞ்செல்வரைப் பார்த்து ஓர் அறிஞர் 'கோடிக்கணக்கான செல்வத்தைக் குவித்து வைத்துள்ள நீ மேலும் பணத்தைக் குவிக்கப் பணம் பணம் எனக் காற்றாய்ப் பறக்கிறாயே, காரணம் என்ன?' என்று

கேட்டார். அதற்கு அச்செல்வன் சிறிது நேரம் சிந்தித்து விட்டுப் 'பணம் குவிக்கப் பணம் சேர்க்கிறேன்' என்றான். பணம் துய்க்கும் கருவி என்பதை இவர்களைப் போன்றவர்கள் அறியார். எனவே இங்கு மகாலட்சுமி கோயிலுக்குச் சிறப்பு அதிகம் என்று சொல்லவே வேண்டியதில்லை.

மகாலட்சுமி தங்க உருவம். இத்தேவியின் இருபுறமும் கல்விச் செல்வி கலைவாணியும், ஞானத்தாய் அம்பிகையும் எழுந்தருளியுள்ளனர். இவர்களும் தங்கத்திருமேனி தாங்கியுள்ளனர். ஞானமும் கல்வியும் செல்வத்துக்குப் பின்னே உள்ளன.

இந்தத் தேவியர் மூவரும் முகம் மட்டும் காட்சி கொடுத்து எழுந்தருளியுள்ளனர். தென்னாட்டில் தெய்வத் திருவுருவங்கள் முழு வடிவில் இருக்கும். வடக்கே எந்த மூர்த்தியும் முழு வடிவில் இருக்காது. முகம் மட்டும் தெரியும். உடல் பாகம் மறைந்து இருக்கும். கலையழகு என்பதே வடக்கே அநேகமாக இல்லை. புதிதாக அமைந்த பிர்லா கோயில்களில் மட்டும் திருவுருவங்கள் அழகாக இருக்கின்றன. பழைய கோயில்களில் கூட பிரதிமைகள் தான் காணப்படுகின்றன. தென்னாட்டுத் திருக்கோயில்களில் எழுந்தருளியுள்ள தெய்வத் திருவுருவங்கள் ஆகம விதிப்படி அமைந்தவை. இவற்றின் அங்கலட்சணங்கள் உடைகள் அணிகலன்கள் எப்படி எவ்வாறு இருக்கவேண்டும் என்பதை ஆகமங்கள் வரையறை செய்துள்ளன. கற்பனைக்கு இங்கு இடமில்லை. திருவுருவங்களில் அழகு கொழிக்கும் வடநாட்டில் தெய்வத் திருவுருவங்கள் உள்ளங்களைக் கவரும்படியாக இல்லை. அதோடு அங்குப் பணம் முதன்மையாக ஆட்சி செய்கின்றது. மடி பிடித்துப் பணம் பறிக்கும் பலாத்காரமும் சில கோயில்களில் உள்ளன. வழிபட வரும் மக்களை அமைதியாக வழிபடவும் விடுவதில்லை. பிர்லா கோயில்களில் மட்டும் 'தட்சணை தாலோ' என்ற சொல் ஒலிக்கவில்லை.

புதிதாகக் கட்டப்பட்ட சில கோயில்களிலும் இவ்வொலி இல்லை. ஆனால் பழங்கோயில்களில் பணம் பிடுங்கிகள் இருக்கின்றனர்.

தேவிகள் மூவரையும் வணங்கிவிட்டு 'மலபார் ஹில்ஸ்' என்னும் மிதக்கும் கார்டன்சுக்குப் போனோம்.

## மிதக்கும் கார்டன்ஸ் (Hanging Gardens)

இந்தப் பூங்காவின் அடியில் குடிநீர் தேக்கம் இருக்கின்றது. நீர்த் தேக்கத்தின் மீது இப்பூந் தோட்டம் இருப்பதால் இது மிதக்கும் பூந்தோட்டம் என்று அழைக்கப்பட்டது. பூச்செடிகளும் கொடிகளும் நிழல் தரும் மரங்களும் நிரம்பி கண்ணுக்கும் கருத்துக்கும் காட்சியளித்து மகிழ்ச்சியூட்டி வருகின்றது. செடிகளில் மான், ஒட்டகம், காண்டமிருகம், யானை போன்ற விலங்குகளின் வடிவங்களைக் கத்தரித்து அமைத்துள்ளனர். தரை முழுவதும் பச்சைக் கம்பளம் விரித்ததைப் போன்று பசும்புல் செழுமையாக வளர்ந்து பசுமையாக இருக்கின்றது. தோட்டம் மிகவும் துப்புரவாக வைக்கப்பட்டுள்ளது.

பகலெல்லாம் உழைத்து உடம்பாலும் உள்ளத்தாலும் களைத்துப் போன மக்களுக்குத் தோட்டங்கள் களைப்பைப் போக்கி இதமளிக்கும் இடங்களாயுள்ளன. நகரங்களில் நிலவும் காற்று தொழிற் கூடங்களிலிருந்து வெளிப்படும் புகையாலும் மக்கள் நெருக்கத்தாலும் மக்கள் செய்யும் அசுத்தங்களாலும் குப்பைக் கூளங்களாலும் அசுத்தப் படுகின்றது. இதில் நாளெல்லாம் உழன்று நச்சுக்காற்றைச் சுவாசித்த உடம்புக்கு நல்ல காற்று தேவை. அந்த நல்ல காற்று நிலவும் இடம் மரம் செடி கொடிகள் நிரம்பிய தோட்டங்களாகும். அதனால் நகர மக்களின் நலங்கருதி நகரங்கள் தோறும் பூங்காக்கள் அமையவேண்டும். மக்களும் அங்கு வந்து உடல் நலத்தைப் பேணிக் கொள்கின்ற பழக்கத்தை மேற்கொள்ள வேண்டும்.

இந்நாளில் நகரமக்கள் பூந்தோட்டங்களைக் கவரு வதற்காக நகரசபைகளும் தோட்டங்களைப் பலவகையாக அழகுபடுத்தி வைத்தும் அதில் குழந்தைகள் விளையாடு வதற்கேற்ற வசதிகளைச் செய்தும் பணி செய்கின்றன.

நாங்கள் இத் தோட்டத்தைப் பார்த்துக் கொண்டு இதன் எதிரிலுள்ள 'கமலா நேரு' பார்க்குக்குப் போனோம். இங்கும் பன்னிறப் பூச்செடிகளும் குழந்தைகள் விளையாடச் சருக்குப் பலகைகளும் ஊஞ்சலும் பிறவும் அமைத்திருந்தனர். இங்கிருந்து பார்த்தால் சௌபாத்திக் கடற்கரையும் நகரமும் தெரிகின்றது. இதை விட்டு மீன்காட்சிச் சாலைக்குப் போனோம்.

## மீன்காட்சி (Aquarium)

இக்காட்சிக்கூடம் மிக மிக அருமையாயுளது. கடலுக் கடியில் இருக்கும் காணற்கரிய அற்புதங்களை இங்குக் காணலாம். மீன்களில்தான் எத்தனை எத்தனை வகைகள். பெரிதும் சிறிதுமாக உள்ள அத்தனை வகை மீன் இனங்களையும் கண்ணாடிக் கூடுகளில் நீரினிடையே ஓடவிட்டுக் காட்சிக்கு வைத்துள்ளனர். உலகிலுள்ள நிறங்களெல்லாம் இம்மீனினங்களில் ஒன்று திரண்டு படிந்து அழகு காட்டின. சின்னஞ்சிறு மீன்கள் பன்னிறங் கொண்டு தமது சிறிய வாய்களைத் திறந்தும் மூடியும் அழகு காட்டி மேலும் கீழுமாக ஓடியாடித் திரிந்த காட்சி கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது.

இயற்கையில் அழகில்லாப் பொருள் ஏது? கம்பீரமாக வானளாவ உயர்ந்து நிற்கும் மலைகளின் அழகும் பெரு வெள்ளமாகப் பெருக்கெடுத்து ஓடிவரும் நதிகளின் அழகும், எரியும் விளக்குகளை வரிசைப்படுத்திக் காணும்போது காணும் எழிற் காட்சியும், இருளை ஓட்டி இரவைப் பகலாக்கும் தீபவொளியின் மாட்சியும், பொதியத்

தினின்றும் தோன்றி நீரிற் படிந்து பூவின் மணத்தைச் சுமந்து இடையில் எழுந்த ஏழிசையை ஏந்தி வந்து நமக்கு அளித்துக் களிப்பூட்டும் காற்றும், இரவில் மதியை ஏந்தி, அதைச் சுற்றி வைரக்கற்களைப் போல் பன்னிறங்களைச் சிதறவிட்டு ஒளிவிடும் தாரகைகளைக் கொண்டு களிப் பூட்டும் வானமும், இவையெல்லாம் நமக்கு எல்லையில்லா இன்பத்தைதவூட்டும் இயற்கைப் பொருள்களாகும். இவற்றைக் கண்டு களியாதார் யார்? என்றாலும் இறைவன் படைப்பிலுள்ள இவ்வழகைக் கண்டு களிக்கும் இரசனையில்லாமல் இவற்றை ஓர் நரகமாக ஆக்கும் மாக்களும் உலகில் உள்ளனர். மனிதர்களின் வாடை பட்டதும் துன்பம் தலை தூக்குகின்றது. நதிக்கரைகளில் மனிதன் செய்யும் அசுத்தம், மலையிலுள்ள அழகு கொழிக்கும் மரங்களை வெட்டி அழகைக் குலைத்து மொட்டையாக்கும் செயல், தொழிற்பேட்டைகளில் புகை எழுப்பிக் காற்றை நஞ்சாக்கும் வினை— இவைதான் இயற்கைக்கு மனிதன் காட்டும் நன்றி. சிந்திக்கும் மனிதன் சிந்தனையின்றி உலகைக் கெடுக்கும் செயல்கள் எவ்வளவோ?

கூண்டுகளிலிருந்த உள்ளங்கவரும் மீன்களின் அழகைக் கண்டு களித்த வண்ணம் சுற்றி வரும்போது சிலர் பேசிய ரசனையற்ற பேச்சுக்கள் காதில் விழுந்தன. சில வகை மீன்களைப் பார்த்ததும் சிலர் நாக்கைச் சப்புக் கொட்டினர். இந்த ரக மீன் மிகவும் சுவையானது என்று ஒருவர் சொன்னார். அதைத் தொடர்ந்து ஒருவர் எப்படியெல்லாம் பாகம் செய்து சாப்பிட்டால் சுவை மிகுதியாக இருக்கும் என்று பாகசாத்திரம் பேசினார். அதைப் பலர் தொடர்ந்தனர்.

மங்கலமான அழகிய இயற்கைக் காட்சியை இவர்கள் அமங்கலமாக்கினர். நெஞ்சில் ஈரமில்லாத இது போன்ற கூட்டம் எங்ஙனம் இறைவனின் பெருமைகளை அறியப்

போகின்றன? ஈரமற்ற நெஞ்சினர் பெருகி விட்ட காரணத்தினால்தானே உலகம் அல்லல்பட்டுத் துன்புறுகின்றது. இன்பம் எங்கு எங்கு என்று தேடுகின்ற நிலையில் உலகம் வந்து விட்டதல்லவா? எங்கும் பாநலம் சுருங்கிச் சுயநலம் விஞ்சியிருக்கின்றது. இந்த நிலையில் இன்பத்தை எங்குத் தேடி எப்படி அடைவது? அழகாகத் துள்ளி விளையாடி மகிழ்ச்சியூட்டும் அம்மீன்களின் அழகைக் கண்டு களியாது அவற்றைத் தம் நாக்கில் வைத்துச் சுவைத்து வயிற்றுக்குள் தள்ள நினைக்கும் மாந்தர்களின் கூட்டத்தில் எதை எதிர் பார்க்க முடியும்?

அரை மணி நேரம் அங்கிருந்த மீன் வகைகளைப் பார்த்துக் கொண்டு வந்தோம். சில மீன்கள் பாம்புகளை போலவே இருந்தன. யாவரும் அஞ்சும் சுறா மீன்களும் இருந்தன. பல சதுரமாகவும் வட்டமாகவும் பந்து போன்றும் பலவகை வடிவங்களில் இருந்தன. வடிவத்திலும் நிறத்திலும் எத்தனை வகை மீன்கள் கடலில் உள்ளனவோ அவ்வளவு வகை மீன்களையும் அங்குக் கண்டு அதிசயித்தோம். காட்சிச் சாலை மூடும் நேரம் ஆதலால் விரைவாகப் பார்த்துக் கொண்டு அங்கிருந்து வெளிப் பட்டோம். இரயிலடிக்குப்போய் பிற்பகல் மூன்று மணிக்குப் பாபுல்நாத் கோயிலுக்குப் போனோம்.

## பாபுல்நாத் கோயில்

இது சிவன் கோயில். இங்கு மிகப்பெரிய சிவலிங்க மூர்த்தி எழுந்தருளியுள்ளார். இப்பகுதியில் இக்கோயில் மிகவும் பிரசித்தி வாய்ந்தது. ஒரு விசாலமான அறையின் நடுவில் இம்மூர்த்தி உளது. மூர்த்தியின் முடிமீது தொங்கும் பாத்திரத்திலிருந்து நீர் சொரிந்து விழுந்து பெருமானைக் குளிர்வித்துக் கொண்டிருந்தது. கொண்டு சென்ற வில்வப் பூ தூவிப் பெருமானை வழிபட்டுக் கொண்டு அங்கிருந்து இந்தியா கேட்டுக்குப் போனோம்.

## இந்தியா கேட்

1911 ஆம் ஆண்டில் ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் இங்கு வந்ததின் நினைவாக இச்சின்னம் கட்டப்பட்டது. மாலை நேரத்தில் இங்குப் பெருங்கூட்டம் கூடுகின்றது. மக்கள் தங்கள் மாலை நேரப் பொழுது போக்கை இங்கு உல்லாசமாகக் கழிக்கின்றனர். பலவகையான விளையாட்டுச் சாமான்களையும் படங்களையும் சிறு வண்டிகளில் வைத்து விற்கின்றனர். கடற்கரையிலிருக்கும் இந்த இடம்பொழுது போக்கி மகிழ்வதற்கு ஏற்ற இடமாயுளது. பலவகையான விளையாட்டுச் சாமான்களை வாங்கிக் கொண்டு மியூசியம் போனோம்.

## பிரின்ஸ் ஆப் வேல்ஸ் மியூசியம்

இது வட்டமான கோபுரத்தோடு கூடிய பழமையான பெரிய மாளிகையாகும். இதில் பலவகையான காட்சிப் பொருள்கள் வைக்கப்பட்டுள்ளன. அழகான தோட்டத்தின் மத்தியில் இது அமைந்திருக்கின்றது. பழங்கால மன்னர்கள் அணிந்த ஆடைகள் ஆபரணங்கள் அவர்கள் பயன்படுத்திய அழகிய சாமான்கள் போர்வாள்கள் ஈட்டிகள் கவசங்கள் துப்பாக்கிகள் முதலியன வரிசையாக வைக்கப்பட்டுள்ளன. பன்னிறங்களில் தீட்டிய அழகான படங்கள் நேபாள திபேத்திய கலைச்செல்வங்கள் இந்திய நாட்டுப் பழங்காலச் சிற்பங்கள் இங்கு நிரம்பியுள்ளன. இவற்றைப் பார்த்துக் கொண்டு ஆரே பால் பண்ணைக்குப் போனோம்.

## ஆரே பால் பண்ணை

பசுக்கள் எருமைகள் இவற்றினிடமிருந்து கருவி கொண்டு பால் கறந்து பெரிய மூடிபோட்ட குப்பிகளில் நிரப்பி லாரிகளில் பால் பண்ணைக்கு எடுத்துச் செல்கின்றனர். அங்கு அக்குப்பிகளை இயந்திர பெல்ட்டுகளில் வைத்து உள்ளே அனுப்புகின்றனர். உள்ளே உள்ள

பெரிய தொட்டி ஒன்றில் இப் பால் கொட்டப்படுகின்றது அதிலிருந்து குழாய் வழியாக வேறொரு தொட்டிக்குப் பால் போகின்றது. இங்குப் புட்டிகள் வைக்கப்பட்டுள்ள காரியர்கள் பெல்ட்வழி வர, தொட்டியிலுள்ள பால் புட்டி களில் விழுந்து நிரப்ப, பால் நிரம்பிய புட்டிகள் அடுத்த இடம் போக, அங்குப் புட்டிகளுக்கு மூடியிட்டு இயந்திரம் சீல் வைக்கின்றது. பால் புட்டிகளுள்ள இக்காரியர்கள் பெல்ட்வழி விற்பனைக்கு எடுத்துச் செல்லும் லாரிகளை அடைகின்றன லாரிகள் பால் புட்டிகளை ஏற்றிக் கொண்டு ஊருக்குள் விற்பனைக்கு எடுத்துச் செல்கின்றன. பால் காலியான குப்பிகள் இயந்திர மூலம் கழுவப்பட்டு மீண்டும் பெல்ட்கள் வழி லாரிகளை அடைகின்றன. அவை மறுபடியும் பால் கறக்கும் மாட்டுப் பண்ணைகளை அடைந்து பாலை நிரப்பிக் கொண்டு இங்கு வருகின்றன. இவ்வாறு பால் கறப்பது முதல் புட்டிகளில் நிரப்பப்பட்டு வீடுகளை அடையும் வரை மனிதனின் கரம் படுவதில்லை. பிறப்பினால் மனிதன் உயர்ந்தவன் என்றாலும் இவன் கரம் பட்டால் எப்பொருளும் கெடுகின்றது. இதுவும் இயற்கையின் விநோதங்களுள் ஒன்று.

இங்கு விற்ற குளிர்வித்த பாலை வாங்கிப் பருகிவிட்டு இரயில் நிலையம் அடைந்தோம். அன்றிரவே எங்கள் எங்கள் வண்டி சோலாப்பூரை நோக்கிப் போயிற்று. வண்டி பல இடங்களில் நீண்ட நேரம் நின்று நின்று போனதால் எதிர்ப்பார்த்தபடி வண்டி சோலாப்பூரை முற்பகல் அடையவில்லை. பிற்பகல் இரண்டு மணிக்குச் சாவதானமாகப் போய்ச் சேர்ந்தது. 40 மைல் தொலைவி லுள்ள பண்டரீபுரத்துக்குப் பஸ்ஸில் போய் வரவேண்டி யிருந்தது. மறுநாள் மாலையில் சென்னைக்கு நாங்கள் போய்ச் சேரவேண்டும். பண்டரீபுரம் போய் பாண்டு ரங்கனையும் மற்ற தெய்வ நிலையங்களையும் தரிசித்துக் கொண்டு திரும்பி வரப் போதிய நேரம் இல்லை. பண்டரீபுரம் போகும் நிகழ்ச்சிக்கு இடையூறு நேர்ந்தது.

பண்டரீபுரம் போகும் பஸ்கள் மாலை மூன்று மணிக்குத் தான் வந்தன. இப்பயணத்தில் இருந்த 320 பேர்களில் பலர் அடுத்த நாள் காலையில் தான் பண்டரீபுரம் போக வேண்டும் என்றும் அன்றே போனால் பாண்டுரங்கனையும் மற்ற கோயில்களையும் சேவிக்க முடியாது என்றும் கூறி உறுதியாக நின்றனர். நாங்கள் 45 பேரும் வேறு சிலரும் அன்றே பண்டரீபுரம் போய்வர முடிவு செய்து பண்டரீ போகும் பஸ்ஸில் ஏறினோம்.

## பண்டரீபுரம்

1-6-78 சோலாப்பூர் பண்டரீபுரம். மாலை மூன்று-முப்பது மணிக்குச் சோலாப்பூரைவிட்டு பஸ்ஸில் போய் மாலை ஐந்து-முப்பது மணிக்குப் பண்டரீபுரம் அடைந் தோம். ஊரைச் சுற்றி அரை வட்டமாக நதி ஓடுகின்றது. அதனால் இந்த நதி சந்திரபாகா நதி என்றுபெயர் பெற்றது. இதில் குளித்துவிட்டுப் பாண்டுரங்கநாதர் கோயிலுக்குப் பல குறுகிய சந்துகளின் வழியே போய்ச் சேர்ந்தோம். கிழக்கு வாசல் வழியே உள்ளே போனோம். இது நாமதேவர் வாயில் என்று அழைக்கப்பட்டது. அந்த வாயிலின் கீழ்ப்படியும் நாமதேவர் படியாகும். இங்குத் தான் நாமதேவர் அடக்கம் செய்யப்பட்டார். நாம தேவர் பாண்டுரங்கனைப் பக்தி செய்து வழிபட்டு அவர் திருவருளைப் பெற்றவர். அவருடைய பக்தியின் பெருமைக்கு ஆட்பட்டு பெருமாள் பக்தனின் முன்தோன்றி, அன்பனே, உனக்கு என்ன வரம் வேண்டும் என்று கேட்ட போது, நாமதேவர் 'பரந்தாமா உன் திருவடிக் கீழ் நான் எப்போதும் இருக்க வேண்டும்; உன்னை நாடிவரும் உன் அடியார்களின் பாத தூளி என்மீது பட்டுச் கொண்டே இருக்க வேண்டும்' என்று பணிந்தார். பரந்தாமனும் அவ்வாறே அருள் செய்தார். அடியாரின் ஆன்மா ஆண்டவனின் திருவடிகளில் கலந்தது. பண்டரீ நாதனின்

திருக்குறிப்பின்படி நாமதேவரின் உடம்பு கிழக்குக் கோபுர வாயிலில் அடக்கம் செய்யப்பட்டது. அதன்மீது ஒரு படியை அமைத்து அதை நாமதேவர் படி என்று அழைத்தனர்.

அப் படியைத் தாண்டி உள்ளே போனோம். அங்கு ஒரு மண்டபத்தில் சிகப்பு நிறத்தில் விநாயகர் எழுந்தருளி யிருந்தார். வணங்கி விட்டு மேலே போனோம். தெற்குப் பிராகாரத்தில் ஒரு சரமும் இருந்தது. அதனடியில் வெங்டேஸ்வரர் எழுந்தளியிருந்தார். இந்த இடம் வரலாற்றுச் சிறப்பு மிக்க இடமாகும்.

பண்டரீபுரத்துக்கு அருகிலிருந்த மங்கல வேடா என்னும் ஊரில் கானுபத்ரா என்னும் பரம பக்தை வாழ்ந்து வந்தாள். இவள் பாண்டுரங்கன்மீது எல்லையில்லாத பக்தி பூண்டவள். நல்ல அழகு உடையவள். ஒருநாள் அந் நாட்டை ஆண்டு வந்த முகலாய மன்னன் அப்பெண்மணி யைப் பார்த்தான். அவன் அழகில் ஈடுபட்டான். அவளை அரண்மனைக்கு அழைத்து வருமாறு சேவர்களை ஏவினான். அவர்களும் காணுபத்ரையை அணுகினர். சேவகர்களைக் கண்ட அப்பக்தை மனம் பதைத்தாள். தனது ஆபத்தை உணர்ந்தாள். அதிலிருந்து தப்புவதற்குப் பாண்டுரங்கனை யன்றி வேறு கதி இல்லை என்பதை அறிந்து, சேவகர்களிடம் கடைசி முறையாகப் பாண்டுரங்கனைச் சேவித்து விட்டு வர அநுமதி அளிக்குமாறு வேண்டினாள். அவர்களும் அதற்கு இசைந்தனர். அப்பெண்மணி நேராகக் கருணாமூர்த்தி யான பாண்டுரங்கனின் சந்நிதியை அடைந்தாள். சரண் அடைந்தவர்களைக் காக்கும் அப்பெருமானின் திருவடி களையே அடைக்கலமாகக் கொண்டு அங்கேயே வீழ்ந்து உயிர்விட்டுத் தன் மானத்தைக் காத்துக்கொண்டாள். பெருமானும் அவளை ஏற்றுக்கொண்டு காத்தருளினார். அங்கிருந்த அன்பர்கள் அவள் உடம்பை தெற்குப் பிராகாரத்தில் அடக்கம் செய்தனர். அந்த இடத்தில்

மரம் ஒன்று முளைத்தது. அம்மரத்தடியில் வெங்கடேசப் பெருமானை எழுந்தருளச் செய்து வழிபடத் துவங்கினர். இந்த உருக்கமான வரலாற்றை எண்ணி உருகி வழிபட்டுக் கொண்டு மேலே போனோம். வடக்குப் பிராகாரத்தில் உள்ள ருக்மணி, காசி விசுவேஸ்வரர் விசாலாட்சி சந்நிதிகளை வணங்கி விட்டுப் பாண்டுரங்கனின் சந்நிதிக்குப் போனோம். பண்டரீநாதனின் வரலாற்றை அறிந்து கொண்டு பெருமானின் சந்நிதிக்குப் போனோம்.

## புண்டரீகர் வரலாறு

ஜானுதேவர் என்பவர் தமது மனைவி சாத்தகிதேவி யுடன் குழந்தைப் பேறு இன்றி நீண்டநாள் வாழ்ந்து வந்தார். ஒரு குழந்தையை வேண்டித் தவம் கிடந்தார். அதன் பயனாக ஒரு மகன் பிறந்தான், அவனுக்குப் புண்டரீகன் என்று பெயர் சூட்டிப் பெற்றோர்கள் மிகச்செல்லமாக வளர்த்து வந்தனர். செல்லம் அவனைக் கொடுத்துவிட்டது. பையன் பெற்றோர்களுக்கு அடங்காது, மதோன்மத்தனாகத் திரிந்தான். பெற்றோர் களையும் பலவாறாகத் துன்புறுத்தினான். திருமணம் செய்து வைத்தால் அடங்குவான் என்று எண்ணி மணமும் செய்து வைத்தனர். மணமானதும் மனைவியின் சொற்படி ஆட ஆரம்பித்தான். இப்போது துன்பம் ஒன்றுக்கு இரண்டாயிற்று. இவர்கள் இம்சைக்கு ஆற்றாது வீட்டை விட்டே போவது என்று புண்டரீகனின் பெற்றோர்கள் முடிவு செய்தனர். அப்பக்கம் வந்த காசியாத்திரைக் குழுவுடன் அவர்கள் சென்று விட்டனர்.

சில நாள்கள் கழித்துப் புண்டரீகனும் மனைவியுடன் தேசயாத்திரை புறப்பட்டுச் சென்றான். யாத்திரையின் போது ஒரு யாத்திரைக் கோஷ்டியில் தனது பெற்றோர் போவதைக் கண்டான். பார்த்தும் பாராததைப் போல்

சென்று விட்டான். யாத்திரையின் போது ஒரு நாள் குக்குட முனிவரின் தவச்சாலையைக் கண்டு அங்குத் தங்கினான். அப்போது அழகற்ற உடம்போடு அழுக் காடைகளை அணிந்த பெண்கள் மூன்று பேர் அதிகாலையில் ஆசிரமம் அடைந்து அதைக் கூட்டி மெழுகிக் கோலமிட்டு முனிவரையும் தொழுது வழிபட்டுத் தூய உடம்பையும் ஆடை அலங்காரங்களையும் பெற்று அவ்விடத்தை விட்டுப் போவதை புண்டரீகன் கண்டான். தூய்மையுற்ற அப்பெண் களைப் பார்த்து ''நீங்கள் யார்? அழகற்ற குரூபிகளாக வந்த நீங்கள் தேவப்பெண்களாக மாறிய விதம் எப்படி?'' என்று வினவினான். அதற்கு அப்பெண்களின் தலைவி, ''புண்டரீகா, நாங்கள் மூவரும் கங்கை யமுனை சரஸ்வதி என்னும் மூன்று நதிகளாகும். மக்கள் எங்களை அடைந்து குளித்துத் தங்கள் பாவங்களைப் போக்கிக் கொள் கின்றார்கள். அவர்கள் கழித்து விட்ட பாவங்களை ஏற்று அதனால் அசுத்தப்பட்ட நாங்கள் இம்முனிபுங்கவரை அடைந்து பணிபுரிந்து எங்களை அடைந்த பாவங்களைக் கழித்துக் கொள்கிறோம். இவர் மகா தபசி'' என்று சொல்லி அம்மூவரும் மறைந்தனர்.

புண்டரீகன் பேரதிசயமுற்று முனிவரை அடைந்து வணங்கி நின்றான். முனிவர் புண்டரீகனைக் கண்டதும் 'புண்டரீகா நீ மகாமூடன். 'தந்தைத் தாய்ப்பேண்', 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்ற மூதுரை களை அறிந்தாயில்லை. தாயும் தந்தையுமே முன் அறியும் தெய்வங்களாயுள்ளனர். தாய் தந்தையரைப் பேணாது ஒருவன் உய்திபெறமுடியாது. 'என்னைப் பெற்ற தாய் தந்தையரை நான் தெய்வங்களாக மதித்து வழிபடுகின்றேன். இதுவே எனக்குக் கடவுள் வழிபாடு. இதனால் நான் புனிதமடைகிறேன். நான் வசிக்கும் இந்த இடமும் புனிதமடைகின்றது. நீயும் இனியேனும் உன்னுடைய பெற்றோர்களைப் புறக்கணிக்காது பேணிப் புனிதமடைவாயாக' என்றார். இதைக்கேட்ட புண்டரீகன்

மனம் தெளிந்து பெற்றோர்களைத் தேடிப் புறப்பட்டான். யாத்திரைக் கோஷ்டியில் இருந்த பெற்றோர்களைக் கண்டு பிடித்து, அவர்களைப் பணிந்து அன்போடு தன்னுடன் கூட்டி வந்தான். வழியில் சந்திரபாகா நதியை அடைந் தவன் அங்கேயே தங்கிவிட்டான். பெற்றோர்களுக்குப் பணிபுரியத் தலைப்பட்டான்.

சில நாள்கள் கழிந்ததும் புண்டரீகனின் அன்பைக் காண நாராயணன் அவன் முன் தோன்றினார். பெற்றோர் களுக்குச் செய்யும் பணியில் ஈடுபட்டிருந்த புண்டரீகன் நாராயணனைக் கண்டதும் ஒரு செங்கல்லை எடுத்து வந்து இட்டுப் 'பரந்தாமா! இக்கல்லின்மீது சிறிது நேரம் நில்லுங்கள். நான் பெற்றோர்களுக்குச் செய்யும் கடமை களைச் செய்து முடிக்குமுன் வேறு கருமங்களைச் செய்வ தில்லை. இதோ வந்து விட்டேன்' என்று சொல்லி அவ் விடத்தை விட்டு அகன்று மனைவியும் தானுமாகச் சேர்ந்து பெற்றவர்களைக் குளிப்பாட்டி ஆடை உடுத்திப் பொட் டிட்டுத் தூப தீபம் காட்டி உணவு ஊட்டி அவர்களைக் களைப்பார விட்டுப் பின் நாராயணனிடம் வந்து வணங்கி நின்றான். இதைக்கண்ட மாதவன் புண்டரீகனின் மாதாப் பிதாப் பக்தியை மெச்சி "அன்பனே! உன்னுடைய பெற்றோர் பக்தியைக் கண்டு உவந்தோம். உனக்கு என்ன வரம் வேண்டும் கேள்" என்றார். இதைக் கேட்ட, புண்டரீகன் கண்களில் ஆனந்தக் கண்ணீர் சொரியப் "பெருமானே! தாங்கள் இங்கேயே எழுந்தருளியிருந்து பக்தர்களுக்கு அருள் செய்ய வேண்டும்" என்று விண்ணப் பித்தான். நாராயணனும் அதற்கு இணங்கி அன்று முதல் அங்கேயே செங்கல்லின்மீது நின்று காட்சியளித்து வரு கின்றார். இதனால் இப்பெருமான் 'புண்டரீக விரதர், என்றும் 'விடோபா' என்றும் பெயர் பெற்றார். விட=செங்கல், உபா=நிற்றல், செங்கல்லில் நின்றதால் விடோபா என்ற பெயர் வந்தது.

இவ்வாறு திருமால் புண்டரீகனுக்கு அளித்த வரத்தின் படி இங்குப் பாண்டுரங்கனாக எழுந்தருளி அருள்புரிந்து வருகின்றார்.

இனி, பாண்டுரங்கனின் சிரத்தின்மீது அழகிய சிவ லிங்கம் ஒன்றும் இருக்கின்றது. இது பற்றிய வரலாறும் ஒன்று உண்டு. அது வருமாறு:

ஒரு செல்வன் குழந்தை இல்லாது வருந்தினான். அவன் பாண்டுரங்கனை அணுகிக் குழந்தை பிறந்தால் தங்க அரைஞாண் சாத்துவதாகப் பிரார்த்தித்துக் கொண் டான். பாண்டுரங்கனின் அருளால் அவனுக்குக் குழந்தை பிறந்தது. அதனால் பெரிதும் மகிழ்ந்த செல்வன் பிரார்த் தனையைச் செலுத்த எண்ணித் தங்க அரைஞாணைச் செய்ய நரஹரி கோனான் என்னும் பொற்கொல்லனை அணுகினான். அவன் தீவிரமான சைவன். அதனால் அவன் பண்டரீநாதனை அணுகி அவருடைய இடுப்பின் அளவை எடுக்க ஒருப்படவில்லை. செல்வனையே பாண்டு ரங்கனின் இடுப்பின் அளவை எடுத்து அரைஞாணின் நீளத் தைக் கூறுமாறு அனுப்பினான். செல்வனும் கோயிலுக்குப் போய் பாண்டுரங்கனின் இடுப்பின் அளவை எடுத்து வந்து பொற்கொல்லனிடம் கொடுத்து அந்த நீளத்தில் அரை ஞாணைச் செய்யும்படி பணித்தான். பொற்கொல்லனும் அவன் கொடுத்த நீளத்தில் அரைஞாணைச் செய்து அளித் தான். செல்வன் அதைப் பெற்றுக்கொண்டு போய் நல்ல நாள் பார்த்துப் பண்டரீநாதனின் இடுப்பில் அணியச் செய்தான். அளவு எடுத்து அளவுப்படி அரைஞாணைச் செய்திருந்தும் அது இப்போது நீளத்தில் ஒரு சாண் குறைவாக இருந்தது. இதை அறிந்த பொற்கொல்லன் ஒரு சாண் நீளம் அதிகமாக வைத்து செய்து கொடுத்தான். அதுவும் இடுப்புக்குச் சரியாக இல்லாமல் ஒரு ஜாண் அளவு குறைவாகவே இருந்தது. மறுபடியும் பொற்கொல்லன் மேலும் ஒரு சாண் அளவு நீளத்தில் கூட்டிச் செய்து

கொடுத்தான். இப்போது அது அதிக நீளமாக இருந்தது. இவ்வாறு பலமுறை மாற்றி மாற்றிச் செய்தும் நீளம் சரி வராமற் போகவே செல்வன் சலிப்புற்றுப் பொற்கொல்ல னையே கோயிலுக்கு நேரில் வந்து அளவு எடுத்துச் சென்று அரைஞாணைச் செய்தளிக்குமாறு வேண்டினான். தீவிர சைவனான அவன் பாண்டுரங்கனைக் கண்ணால் காண விரும்பாது தன் கண்களைத் துணியால் கட்டி மூடிக் கொண்டு பாண்டுரங்கனின் சந்நிதியை அடைந்தான். அளவு எடுக்கப் பெருமானின் உடலை பரிசித்துத் தடவி னான். என்ன அதிசயம். புண்டரீகனின் திருமேனியில் மான், மழு, மதி, பணி முதலிய சிவ சின்னங்கள் இருப் பதை உணர்ந்தான். இதை அறிந்து பொற்கொல்லன் அதிர்ச்சியுற்றான். 'அப்பனே! இதென்ன கோலம். சிவ பெருமானின் திருக்கோலமன்றோ இங்கு இருக்கின்றது' என்று அலறினான். கண் கட்டைப் பிய்த்தெடுத்து தன் முன் உள்ள பெருமானின் கோலத்தை நோக்கினான். இப்போது அங்கு அவன் சிவக்கோலத்தை அன்றிப் பாண்டு ரங்கனையே கண்டான். அதிர்ந்துபோய் கண்களை மூடிக் கொண்டான். அப்போது பாண்டுரங்கன் 'அன்பனே வருந்தற்க. நான் உனக்கு வேறல்ல நீ வணங்கும் சிவ பெருமான் இதோ என் முடிமீது என்று தலையைச் சுட்டிக் காட்டி என்னை வணங்கினால் சிவபெருமானையும் வணங்கியதாக ஆகும் என்று அருளினார். பொற் கொல்லனும் கண் திறந்து பண்டரீநாதனின் முடிமீதிருந்த சிவலிங்க மூர்த்தியை கண்டு அற்புதமுற்று வணங்கினான். முன் அளவில் சரியில்லாதிருந்த அரைஞாண் இப்போது சரியாகப் பொருந்தியது. இதைக்கண்டு யாவரும் போற்றி மகிழ்ந்தனர். சைவ வைணவ அபேத நிலையை உணர்ந்து யாவரும் தெளிந்தனர். இன்றும் பாண்டுரங்கனின் முடி மீது சிவலிங்கத்தையும் இடுப்பில் அரைஞாணையும் கண்டு களிக்கலாம்.

தென்னாட்டில் சிவன் கோயில்களில் திருமாலின் சந்நிதிகள் உள்ளன. ஆனால் வைணவக் கோயில்களில் சைவ சம்பந்தம் காண்பதரிது. விநாயகர் இருப்பார். ஆனால் அவருக்கு நாமதாரணம் செய்வித்துத் தும்பிக்கை ஆழ்வாராக வழிபடுவர். வடநாட்டில் இராமர் கிருஷ்ணன் கோயில்களில் சிவலிங்கமூர்த்தியும் எழுந்தருளியுள்ளார். அங்குச் சைவ வைணவ அபேதநிலை காணப்படுகின்றது. காசி விசுவேசுவரர் ஆலயச் சுவற்றிலும் இராமர் திருவுருவம் இருக்கின்றது.

பாண்டுரங்கன் நின்ற கோலத்தில் தலையில் சிவலிங்கம் தாங்கியவாறு சமரச மூர்த்தியாகக் காட்சி அளித்தார். வரிசையாகப் பெருமாள் முன் சென்று பெருமாளின் திவ்ய திருவடிகளில் தலை வைத்து வணங்கி வழிபட்டோம்.

கோயிலில் பக்தர்கள் பலர் பரவச நிலையில் ஆடிப் பாடிப் பரவிக் கொண்டிருந்தனர். இசை மயக்கத்தில் பரமனை உருக்கத்தோடு வழிபட்டுக் கொண்டு அர்ச்சகர் கொடுத்த பிரசாதத்தைப் பெற்றுக்கொண்டு மன நிறைவோடு அங்கிருந்து புறப்பட்டோம். நேராக மூன்று கல் தொலைவிலிருந்த கோபாலபுரத்துக்குப் போனோம். சக்குபாய் பாண்டுரங்கனை வழிபட்ட இடம் இது. சக்குபாயின் சமாதி கோயிலும் அவளுக்குப் பரமன் காட்சி கொடுத்த திருவுருவங்களும் அங்கு உள்ளன. இவை யெல் லாம் ஒரு குகைக்குள் உள்ளன. உள்ளே சென்று தரிசித் தோம். சக்குபாய் தயிர் கடைந்ததைப்போல் ஒருவர் ஒரு பானையில் கோல் நட்டுக் கடைந்து கொண்டிருந் தார். அப்போது அவர் பாடிய பாடல்கள் மிக இனிமை யாக இருந்தன. வருவோரிடம் காசு பெற்றுக்கொண்டு கடைக்கோலைக் கடைய விடுகின்றார். ஆண்கள் பலரும் காசு கொடுத்துச் சிரிப்புக்கிடையே தயிர் கடைந்தனர். அதை அடுத்துச் சக்குபாய் மா அரைத்த கல் இருந்தது.

அதையும் காசு கொடுத்து அரைத்து விட்டு நயாதாம் போய்ச் சேர்ந்தோம்.

## நயாதாம்

இது ஒரு புதிய தெய்வ நிலையம். வயது முதிர்ந்த துறவி ஒருவரின் சீரிய முயற்சியாகும். இது பல அடுக்கு மாடியுளது. பல உயிரினங்களின் திறந்த வாயின் வழியே நுழைந்து போகும் வண்ணம் நுழைவாயில்கள் உள்ளன. முதலை, மீன், பறவை ஆகியவற்றின் வாய்க்குள் நுழைந்து போகிறோம். உலகில் இவ்வுயிரினங்கள் மனிதனின் வாய்க்குள் போக, இங்கு இவற்றின் வாய்க்குள் மனிதன் போகின்றான். 'தின்றன தின்னும்' என்னும் பட்டினத் தடிகளின் பாடலை இவை உண்மையாக்கிக் கொண்டு நிற்கின்றன.

உள்ளே போனால் அங்குள்ள எல்லாக் காட்சிகளையும் பார்த்து விட்டுத்தான் வெளியே வரமுடியும். கியூ வரிசையில் ஒழுங்காக மக்கள் ஒவ்வொன்றாகப் பார்த்துக் கொண்டே போகும்படியாகக் குகைப் பாதை போல் வழி அமைத்திருக்கின்றது. அங்குள்ள தெய்வ வடிவங்களையும் அமைப்புக்களையும் வரிசையாகச் சுற்றிச் சுற்றிப் பார்த்துக் கொண்டே வரவேண்டியதுதான். அங்குள்ள தெய்வக் காட்சிகளின் விளக்கங்கள் கீழே தரப்பட்டிருந்தன.

இந்திய நாட்டில் உள்ள தெய்வத் தலங்கள் யாவும் இங்கு உள்ளன. தெய்வங்கள் ரிஷிகள் முனிவர்கள் தவசிகள் யாவரும் இங்குக் குடிகொண்டுள்ளனர். பதினெண் புராணங்களில் வரும் தெய்வக் காட்சிகளும், இராமாயணம் பாரத இதிகாசக் காட்சிகளும் காசி முதல் இராமேஸ்வரம் வரை இந்தியாவில் உள்ள முக்கியமான க்ஷேத்திரங்களின் சந்நிதிகள் இமயத்தில் உள்ள கயிலை பத்ரி கேதார்நாத் போன்ற தலங்கள் யாவும் இங்கு உள்ளன. இந்த நயாதாமுக்குள் ஒருவர் போய் வந்தால் இந்திய நாட்டின் சமய மத

வரலாறுகளைத் தெரிந்து கொண்டு வெளியே வரலாம். எல்லாக் காட்சிகளையும் அழகொழுக பல நிறங்களில் சமைத்து வைத்துள்ளனர். உள்ளே போய் யாவற்றையும் பார்த்துக் கொண்டு வெளியே வரக் குறைந்தது மூன்று மணி நேரமாவது ஆகும். இவ்வாறு மணிக் கணக்கில் தொடர்ந்து நடந்து களைத்து போகின்றவர்களின் களைப்புத் தீர அமர ஆங்காங்கே நீண்ட திண்ணைகளையும் தாகவிடாய் தீர்த்துக்கொள்ளத் தண்ணீர்க் குழாய்களையும் அமைத்து வைத்துள்ளனர். உள்ளே போனதும் முதலில் முனிவர்கள் வரவேற்கின்றனர். அதன் பின் மற்ற காட்சிகள் காட்டப் படுகின்றன. இவற்றையெல்லாம் பார்த்துக் கொண்டு இரவு பத்து மணிக்கு அங்கிருந்து புறப்பட்டுப் பன்னிரண்டு மணிக்குச் சோலாப்பூரை அடைந்தோம்.

## சித்தர் கோயில்

இக்கோயில் ஒரு பெரிய ஏரியின் நடுவில் இருக்கின்றது. கோயிலின் முன்னால் ஒரு சிறு நாற்கால் மண்டபத்தில் அழகான சிவலிங்க மூர்த்தி எழுந்தருளியிருந்தார். நாங்கள் போனபோது சிவபெருமானுக்கு அன்னாபிஷேகம் நடந்து கொண்டிருந்தது. அன்னத்தை மூர்த்திக்குக் காப்புச் செய்துகொண்டிருந்தனர். வழிபாடு சிறப்பாக நடை பெற்றது. நாங்களும் வழிபாட்டில் கலந்துகொண்டு வழிபட்டோம். அங்கு ஏரிக்கரையோரம் படித்துறை இருந்தது. படியோரம் நீரில் மிகப்பெரிய மீன்கள் திரண் டிருந்தன. அங்கு வந்தவர்கள் மீன்களுக்குப் பொரி தூவினர். அவற்றை அம்மீன்கள் ஒன்றோடொன்று போட்டி போட்டுக் கொண்டு தின்றன. நம்மைப் பார்த்து அவை அஞ்சவில்லை. எவரும் அவற்றைப் பிடிப்பதில்லை. அம்மீன்களும் வருகின்ற மக்களால் தமக்குத் தீங்கு இல்லை என்று தெரிந்துள்ளன போலும். அவை நெருக்கமாகத் திரண்டு ஒன்றின் மீது ஒன்று ஏறியும் புரண்டும் நெகிழ்ந்தும் இயங்கின. போட்ட பொரியை ஒன்று விடாமல் தமது

சிறிய வாயைத் திறந்து பொரியைப் பற்றி விழுங்குவதும், மற்றொரு பொரியை நோக்கிப் பாய்ந்து போவதுமாய் இருந்த காட்சி, கண் கொள்ளாக் காட்சியாய் இருந்தது. நாங்களும், மீன்களுக்கு இடுவதற்கென்றே விற்ற பொரியை வாங்கி மீன்களிடையே போட்டு அவை தின்னும் காட்சியை நீண்ட நேரம் கண்டு களித்தோம். பிறகு கோயிலுக்குள் போனோம். வாயிலின் உள்ளே வலது புறம் ஒரு பெரிய பளிங்கு மேடையின்மீது நான்கு பெரிய சிவலிங்க மூர்த்திகள் சதுரமாக எழுந்தருளியிருந்தன. ஒவ்வொரு மூர்த்தியின் முடிக்கு மேலேயும் நீர் சொரியும் பாத்திரங்கள் தொங்கி நீரைச் சொரிந்து கொண்டிருந்தன. வடநாட்டில் எல்லா கோயில்களிலும் சிவலிங்க மூர்த்திகளின் மீது இவ்வாறு நீர் சொரியும்படியாக பாத்திரங்களைத் தொங்கவிட்டுள்ளனர். தென்னாட்டில் இது போன்ற ஏற்பாடு இல்லை. பொது வாகச் சிவபெருமான் அபிடேகப் பிரியர் என்றும் திருமால் அலங்காரப் பிரியர் என்றும் கூறுவது உண்டு. அதற் கேற்பவே சிவபெருமானுக்கு நாள்தோறும் அபிடேகங்கள் நடைபெறுகின்றன. திருமாலுக்கு இவ்வாறு நடைபெறு வதில்லை. ஆனால் அலங்காரங்கள் நடைபெறும். வயிரத் தால் கிரீடமும் சங்கு சக்கர அஸ்தங்களும் நாமமும் செய்து பட்டு பீதாம்பரங்களுடன் அணிவித்து மாதவனை அலங்கரிப் பார்கள். சிவபெருமானுக்கு இவை போன்ற அலங்காரங்கள் செய்வதில்லை. நாகாபரணம் மட்டும் உண்டு. சிவ பெருமானுக்கு அபிஷேகம் தவறாது. பெருமாளுக்கு அலங்காரம் தவறாது.

தன்னைக் குளிர்விக்கும் மக்களைத் தானும் தனது அருளால் குளிர்வித்து ஆட்கொள்ளும் சிவ மூர்த்திகளை வணங்கி விட்டு உள்ளே போனோம். பசும்புல் தரை, வானளாவ உயர்ந்து ஓங்கி நின்று நிழல் பரப்பிய பெரிய மரங்கள் வருவோரின் வெப்பத்தைத் தணிவித்துக் குளிர்ச் சியை அளித்து வந்தன. அதனிடையே இருந்த பாதை வழியே சென்று கோயிலின் முன்வாயிலை அடைந்தோம்.

ஒரு புறம் சின்ன ஆஞ்சநேயர் சந்நிதி இருந்தது. ஆஞ்சநேயரைத் தரிசித்துக் கொண்டு கோயிலுக்குள் போனோம். ஒரு பெரிய மண்டபத்தில் சிவபெருமான் லிங்க வடிவில் எழுந்தருளியிருந்தார். மூர்த்தி நன்கு அலங்கரிக்கப்பட்டிருந்தது. எங்கள் திருப்பயணத்தில் கடைசியாக நடைபெறும் தெய்வ வழிபாடு இது. மிகுந்த பயபக்தியோடு வழிபட்டோம்.

இந்த இடத்தை ஏரி நீர் சூழ்ந்திருந்தது. அந்நீரில் செந்தாமரைப் பூக்களும் இலைகளும் படர்ந்திருந்தன. அதன் கரையும் தரையும் பசும்புல் தரை. அதனிடை பிரமாண்டமான உயர்ந்த மரங்கள். இவ்வாறு எழில் நிறைந்த இயற்கைச் சூழலில் அமைந்திருந்த அந்த அழகான திருக்கோயிலும் மூர்த்தியும் மனத்தை மிகவும் கவர்ந்தது. பரபரப்பின்றி அமைதியாகி வழிபட்டுக் கொண்டு நீண்ட நேரம் அங்குத் தங்கியிருந்தோம். அதன் பிறகு அங்கிருந்து, நாங்கள் ஏறி வந்த டாங்காவில் ஏறிக்கொண்டு கடை வீதிக்குப் போனோம். சோலாப்பூர் கம்பளங்கள் வேலைப் பாட்டுக்கும் நயத்துக்கும் பெயர் போனவை. அவரவர்கள் சக்திக்கு ஏற்றவாறு கம்பளங்கள் வாங்கிக் கொண்டனர். பலர் விளையாட்டுச் சாமான்களை வாங்கினர். சிலர் குழந்தைகளுக்கு கவுன்கள் வாங்கினர். இதோடு எங்கள் திருப்பயணம் முடிவடைகின்றது. அதனால் வீட்டையும் வீட்டிலுள்ள குழந்தைகளையும் மற்றவர்களையும் நினைவகூர்ந்து பலவகையான சாமான்களை வாங்கினோம். பிறகு யாவரும் டாங்காவில் நண்பகல் ஒரு மணிக்கு இரயிலடியை அடைந்து எங்கள் பெட்டிகளில் அமர்ந்தோம். காலையில் பண்டரீபுரம் போனவர்கள் அப்போதும் வரவில்லை. அவர்கள் வரவை எதிர்நோக்கிக் காத்திருந்தோம். மாலை சுமார் மூன்று மணிக்கு அவர்களும் வந்து சேர்ந்தனர். இப்போது எல்லோருக்கும் வீட்டின் நினைவு வந்துவிட்டது. எப்போது வீடு போய்ச் சேர்வோம் என்று துடித்தனர். வண்டி நான்கு-முப்பதுக்குச் சோலாப்பூரை விட்டுப் புறப்பட்டுச் சென்றது.

2-6-78 மாலையில் புறப்பட்ட வண்டி 3-6-78 காலை எட்டு மணிக்குச் சென்னை பீச் ஸ்டேஷனைச் சென்று அடைந்தது. பயண அட்டவணைப்படி வண்டி 2-6-78 இரவே சென்னையை அடைந்திருக்க வேண்டும். பண்டரீபுரம் போவதில் சிலர் முரண்டு முதல் நாள் போகாமல் தாமதம் செய்து மறுநாள் போனதால் பலவித தொல்லைகள் ஏற்பட்டன. 2-6-78 மாலையிலேயே எங்கள் வரவை எதிர்பார்த்துச் சென்னைக்குப் பல அன்பர்களும் சுற்றத்தாரும் வந்திருந்தனர். சேலம் போக பஸ்ஸூம் எங்களுக்காகக் காத்திருந்தது. எப்படியோ இரண்டு நாள்கள் தாமதத்தில் 3-6-78 காலை எட்டு மணிக்குப் பீச் ஸ்டேஷனை அடைந்தோம். என்ஜினும் பெருமூச்சு விட்டுக் கொண்டு நின்றது. நாங்களும் பெருமூச்சு விட்டுக்கொண்டு ஸ்டேஷன் பக்கம் நோக்கினோம். வண்டியில் வந்த அன்பர்களை வரவேற்று ஊருக்குக் கூட்டிச் செல்ல பெருங் கூட்டம் கூடியிருந்தது.

சேலத்திலிருந்து திரு. ஸ்ரீனிவாசனும் ஆரப்ப வரத ராஜூலு செட்டியாரும் 2-6-78 அன்றே சென்னைக்கு வந்து சேலம் போக பஸ் பேசி இரவெல்லாம் காத்து நின்றனர். இவர்களது பேருதவியால் நாங்கள் சென்னை யிலிருந்து சேலத்துக்கு வசதியாய்ப் போய்ச் சேரமுடிந்தது. 35 நாள்கள் பயணத்தில் அன்பர்கள் ஆங்காங்கே வாங்கிக் குவித்திருந்த பொருள்கள் ஏராளமாக இருந்தன. புடவை களும் சால்வைகளும் விரிப்புக்களும் கவுன்களும் பொம்மை களும் கூடைகளும் பாத்திரங்களும் கணக்கிலடங்கா. இவற்றையெல்லாம் ஏற்றிச் செல்ல இடம் போதாது என்பதால் 50 பேர் பஸ்ஸில் 35 பேர்களுக்கு மட்டும் இடம் கொடுத்து மீதி இடத்தில் சாமான்களை வைக்க ஒதுக்கிக் கொண்டோம். இரயில் பெட்டியிலிருந்து மூட்டை முடிச்சுகளைப் பஸ்ஸில் ஏற்றுவதற்குள் பெரும் பாடாய் விட்டது.

35 நாள்களில், பெரும் பயணத்தில் எவ்வளவோ குறைபாடுகள் நேர்ந்தன என்றாலும் 320 பேர்களை கூட்டிச் சென்று கட்டிக்காத்து நலமாகக் கூட்டி வந்து சேர்த்த திரு. மகாதேவ முதலியார் அவர்களையும் அவருடைய மகன்களையும் பேரனையும் பாராட்டாமல் இருக்க முடியாது. ஒரு குடும்பத்தைக் கட்டுக்குள் வைத்து நடத்துவதே பெரிய பளு என்பதை நாமறிவோம். ஆண்கள் பெண்கள் இளைஞர் முதியோர் படித்தவர் படியாதவர் என்ற பலவகையான மக்கள் கூடிய 320 பேரைச் சமாதனப் படுத்திக் கட்டுக்குள் வைத்து 35 நாள்கள் பல ஊர்களுக்கு அழைத்துச் சென்று வேளா வேலைக்கு உணவளித்து நீர் வசதி செய்து திருப்திப் படுத்திப் பயணத்தை முடித்து அழைத்து வந்து நல்ல பெயர் எடுப்பது என்பது எளிய காரியமல்ல. இத்தகைய அரிய காரியத்தைப் பொறுமை யுடன் நடத்தி வெற்றி கண்ட திரு. முதலியார் அவர்களை எவ்வளவு பாராட்டினாலும் தகும். நாங்கள் பூ மாலை களோடு திரு. முதலியார் அவர்களை அணுகி நன்றி யையும் பாராட்டையும் தெரிவித்துக் கொண்டு மாலை அணிவித்து விடைபெற்றுக் கொண்டோம். 35 நாள்களும் எங்களோடு உடன் இருந்து நெருங்கிப் பழகிய அன்பர் களிடமும் பிரயா விடை பெற்றுக் கொண்டோம்.

சென்னை பீச் ஸ்டேஷனிலிருந்து காலை பத்து-முப்பது மணிக்குப் பஸ்ஸில் புறப்பட்டு மாலை ஆறு-முப்பது மணிக்குச் சேலம் செவ்வாய்ப்பேட்டை ஸ்ரீ இராமலிங்க சௌடேஸ்வரியம்மன் திருக்கோயிலை அடைந்தோம். வாசகசாலைத் தெருவே விழாக்கோலம் பூண்டிருந்தது. தெரு முழுவதும் மக்கள் திரண்டிருந்தனர். பஸ் திருமண மண்டபத்தை நெருங்க முடியவில்லை. எங்கள் சாமான் களைப் பஸ்ஸிலிருந்து இறக்கும் பொறுப்பை எங்களை வரவேற்க வந்திருந்த உறவினர்கள் மேற்கொண்டனர். ஒருவாறு நாங்கள் 35 பேரும் வண்டியை விட்டு இறங்கித் திருமண மண்டபத்துக்குள் போனோம். அப்போது

பாண்டு வாத்தியம் முழங்கியது. நாதஸ்வர இசை எழுந்தது. மக்களின் கரகோஷம் இசை முழக்கத்தை மங்கச் செய்தது. அப்போதெழுந்த மகிழ்ச்சி ஆரவாரம் சொல்லி முடியாது. தங்கள் தங்கள் உறவினர்களையும் நண்பர்களையும் அன்பர்கள் கட்டித் தழுவி மகிழ்ந்தனர். திருமண மண்டபத்துக்குள்ளும் கூட்டம் நிரம்பி விட்டது. நாங்கள் அமருவதற்கென்று அங்கு இட்டிருந்த ஆசனங் களில் அமர்ந்தோம். உறவினரும் பிறரும் எங்களுக்கு மாலைகளைச் சாத்த முற்பட்டனர். சேலத்திலிருந்த பூக்கடை மாலைகள் யாவும், இங்குக் குவிந்து விட்டன. ஒவ்வொருவர் கழுத்திலும் மாலைகள் குவிந்தன. களைப் பைப் போக்க எங்களுக்குப் பலவகைப் பானங்களைப் பருகக் கொடுத்தனர். உண்மையிலேயே நாங்கள் பயணக் களைப்போடு இருந்தாலும் அப்போதிருந்த மகிழ்ச்சி ஆரவாரத்தில் அது எங்கோ மறைந்து விட்டது. 35 நாள்கள் பிரிந்திருந்து இப்போது ஒன்று கூடிய உறவின் முறையாரின் இன்முகங்கள் மேலும் மகிழ்ச்சியை ஊட்டின.

இம் மாபெரும் வரவேற்பை ஸ்ரீ இராமலிங்க சௌடேஸ்வரியம்மன் திருப்பணிக் கமிட்டியார் செய்திருந் தனர். இதன் தலைவர் திரு. K. K. கெணி வீர செட்டி யாருக்கும் அதன் உறுப்பினர்களுக்கும் கோயில் அறங் காவலர்களுக்கும் நாங்கள் பெரிதும் நன்றிக் கடன் பட்ட வர்கள் ஆவோம்.

மாலை ஏழு-நாற்பத்தைந்து மணிக்கு கமிட்டியின் சார்பில் மாலைகளை அணிவித்து ஊர்வலமாக அழைத்துச் சென்றனர். பாண்டு வாத்தியமும் நாதஸ்வர இசையும் முழங்க ஊர்வலம் புறப்பட்டது. எல்லாத் தெருக் களுக்கும் ஊர்வலம் சென்றது. தெருக்களில் வீடுதோறும் குடங்களில் நீர் விட்டுப் பாத பூசை செய்து மாலைகளை அணிவித்துத் தேங்காய் பழத்தோடு தூபதீபம் காட்டி வழிபட்டனர். எங்கும் பக்திப் பிரவாகம் பெருக்கெடுத்து ஓடியது. புண்ணியத் தலங்களைத் தரிசித்து வந்த நாங்களா

அல்லது எங்களை தெய்வ நிலையில் வைத்து வழிபட்ட இந்த அன்பர்களா உண்மை பக்தர்கள் என்ற சிந்தனை உள்ளத்தில் எழுந்தது. எல்லாருடைய கழுத்திலும் மாலைகள் மலைபோல் குவிந்தன. ஆங்காங்கே எங்களுக்குக் குளிர் பானங்களை பருகக் கொடுத்தார்கள். ஊர்வலம் மெதுவாக ஊர்ந்து சென்றது. எல்லா தெருக்களுக்கும் சென்று முடிவில் ஊர்வலம் ஸ்ரீ இராமலிங்க சௌடேஸ்வரியம்மன் திருக்கோயிலை அடைந்தது. எங்களைப் பூர்ண கும்பத்தோடு வரவேற்று கோயிலுக்குள் அழைத்துச் சென்றனர். இத்துடன் எங்கள் வடநாட்டுத் திருக்கோயில்களின் திருத்தலப் பயணம் இனிதே முடிவடைந்தது.

---

## தாயுமானவர் வரிசை நூல்கள்

தாயுமானவரும் திருமூலரும்

தாயுமானவரும் திருநாவுக்கரசரும்

தாயுமானவரும் மாணிக்கவாசகரும்

தாயுமானவரும் பட்டினத்தாரும்

தாயுமானவரும் அருணகிரிநாதரும்

தாயுமானவரும் வள்ளலாரும்

## வள்ளலார் வரிசை நூல்கள்

வள்ளலாரும் திருவள்ளுவரும்

வள்ளலாரும் திருமூலரும்

வள்ளலாரும் திருஞானசம்பந்தரும்

வள்ளலாரும் நாவுக்கரசரும்

வள்ளலாரும் மாணிக்கவாசகரும்

**மணிவாசகர் பதிப்பகம்**

**சிதம்பரம்**



## மணிவாசகர் பதிப்பகத்தின்
### பரிசு பெற்ற நூல்கள்

கம்பர்—டாக்டர் வ. சுப. மாணிக்கம்

வீரர் உலகம்—கி. வா. ஜகந்நாதன்

மணிக்கொடிகாலம்—பி. எஸ். ராமையா

பரிபாடல் திறன்—டாக்டர் இரா. சாரங்கபாணி

திருக்குறள் கூறும் உறுதிப் பொருள்—
டாக்டர் சோ. ந. கந்தசாமி

உரையாசிரியர்கள்—மு. வை. அரவிந்தன்

ஊருக்குள் ஒரு புரட்சி—சு. சமுத்திரம்

உலகப் பெருங்கவிஞர் கம்பர்—
இரா. வ. கமலக்கண்ணன்

தமிழ் மொழி வரலாறு—டாக்டர் சு. சக்திவேல்

தாகூர்—ச. மெய்யப்பன்